


# கவிஞர் கண்ணதாசன்

எம். பாலசுப்பிரமணியன்






இந்திய
இலக்கியச்
சிற்பிகள்

உள் அட்டையில் காணும் சிற்பக் காட்சியில் பகவான் புத்தரின் அன்னை மாயாதேவி கண்ட கனவின் பலனை மன்னர் சுத்தோதனருக்கு நிமித்திகர் மூவர் விளக்குகின்றனர். அவர்களுக்குக் கீழே அமர்ந்து அந்த விளக்கத்தை எழுதுகிறார் ஓர் எழுத்தர். எழுதும் கலையைச் சித்திரிக்கும் முதல் இந்தியச் சிற்பம் இதுவாகவே இருக்கலாம்.

நாகார்ஜுன மலைச்சிற்பம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டு.( பட உதவி: நேஷனல் மியூசியம், புது தில்லி)

இந்திய இலக்கியச் சிற்பிகள்

# கவிஞர் கண்ணதாசன்

எம். பாலசுப்பிரமணியன்



சாகித்திய அகாதெமி

*Kavingnar Kannadhasan*: Original monograph by M.Bala - subramanian, Sahitya Akademi, New Delhi.2004 Rs25







முதல் பதிப்பு: 2004

ISBN - 81-260-1721-X

ரவீந்திர பவன், 35,. பெரோஸ்ஷா சாலை,
புது தில்லி 110001.



விற்பனை

'ஸ்வாதி' மந்திர் சாலை, புது தில்லி 110 001.

மத்தியக் கல்லூரி வளாகம், பல்கலைக்கழக நூலகக் கட்டிடம்,
டாக்டர் அம்பேத்கர் வீதி, பெங்களூர் 560 001.

443, குணா காம்பளக்ஸ்(பழைய எண்.303) அண்ணா சாலை,
தேனாம்பேட்டை, சென்னை 600 018.

ஜீவன் தாரா பில்டிங், 4வது மாடி,
டைமண்ட் ஹார்பர் சாலை, கல்கத்தா 700 053.

172, மும்பய் மராத்தி கிரந்த ஸங்கிரஹாலய சாலை,
தாதர், மும்பய் 400 014.

விலை: ரூ. 25



அச்சகம்: சிக்மா கிராபிக்ஸ், சென்னை 600005

# ஒரு நிமிடம்

1960ம் ஆண்டிலிருந்து கண்ணதாசனின் திரைஇசைப் பாடல்களைக் கேட்க ஆரம்பித்தேன். சென்னை மயிலாப்பூரிலுள்ள ஓர் ஓட்டலில் 25 பைசா போட்டால் நாம் விரும்பும் பாடலைக் கேட்கும் வசதி அன்று இருந்தது. என்னுடன் என் அண்ணனும் வருவார். பாவமன்னிப்பு படத்தில் வரும் 'வந்தநாள் முதல் இந்த நாள் வரை' என்ற பாடலைக் கேட்பதற்காக காசு போடுவோம். காசு போட்டுவிட்டு பொத்தானை அமர்த்தினால் போதும். நாங்கள் இருமுறை பொத்தானை அமர்த்துவோம். காரணம், திரும்ப ஒரு முறை கூட அந்தப் பாடலைக்கேட்க முடிந்தால் என்ற ஆர்வம்தான். ஆனால் அந்த ஆசை நிறைவேறாது. அதற்காக நாங்கள் அந்த இடத்தை விட்டுப் போக மாட்டோம். அடுத்து வரும் நபர்கள் ஏதாவது பாட்டு போடுங்கள் என்று சொன்னால் எங்கள் கை வந்த நாள் முதல் என்ற பாடலின் மேல் செல்லும். வரும் நபருக்கு இரண்டு பாடல்களில் விருப்பம் இருப்பின் ஒன்று எங்கள் விருப்பமாக அமையும். அந்த அளவுக்குத் தன் பாடல்களால் மக்கள் மனதினைக் கவர்ந்தவர் கண்ணதாசன்.

1968 ஆம் ஆண்டு தமிழிலக்கியம் படிக்க ஆரம்பித்தபோதுதான் கவிஞரின் பிற படைப்புகளையும் படிக்க ஆரம்பித்தேன். அவர் பாலும் அவர் படைப்புகள் பாலும் கொண்ட பேரார்வத்தால் 1975 ஆம் ஆண்டு கண்ணதாசன் கவிதை படைப்புகளில் பி.எச்.டி. பட்ட ஆய்வினை மேற்கொண்டேன்.

1979 ஆம் ஆண்டு எழுதிய **தமிழில் விமரிசன இலக்கியம் ஒரு முன்னுரை** என்ற நூலில் எடுத்துக்காட்டுகளாகக் கவிஞரின் கவிதைகளையே கொடுத்திருந்தேன்.

ஆர்வ மேலீட்டால் கேரளப் பல்கலைக்கழகத் தமிழ் பேராசிரியர்களும் அன்பர்களுமாகச் சேர்ந்து 1989 ஆம் ஆண்டு கவியரசர் கண்ணதாசன் நினைவுக் கழகத்தை(க்.க.நி.க.) நிறுவினோம். தேசீய அளவில் கருத்தரங்கங்கள் நடத்தி புத்தகங்கள் வெளியிடுவதெனவும் தீர்மானித்தோம். அதன்படி கவிச்சிந்து, கவிப்புனல், கவிப்பெருக்கு, கவி அமுது, கண்ணதாசனின் கவி இன்பம் ஆகிய ஐந்து நூல்கள் வெளிவந்துள்ளன.

சாகித்திய அகாதெமியின் சிறுகதை மொழிபெயர்ப்புப் பயிலரங்கத்தில் (திருச்சி - மார்ச்சு 2002) பங்கு பெற்றுக் கொண்டிருந்த

போதுதான் கண்ணதாசன் பற்றித் தமிழில் நூல் எழுதும் பணியினை எனக்குத் தர இருப்பதாகத் தெரிந்து கொண்டேன். அன்பர்கள் மிகவும் ஆர்வத்துடன் படிப்பார்கள் என்பதால் அதிக அக்கறையுடன் இந்நூலை எழுதியுள்ளேன்.

புத்தக வேலை நடைபெற்றுக் கொண்டிருந்த போது தேவையான உதவிகள் செய்தும் திருத்தங்களை கூறியும் அழகுறச் செய்தவர் கேரளப் பல்கலைக்கழகத் தமிழ்துறைப் பேராசிரியையான அன்பு மனைவி டாக்டர் காஞ்சனா அவர்கள். மகன் கணேஷின் உற்சாக மூட்டும் வார்த்தைகள் படிஎடுக்கும்போது உதவின. ஆய்வாளர் இரமேஷின் உதவியினால் நல்ல முறையில் தட்டச்சு செய்ய முடிந்தது. இவற்றுடன் எங்கள் ஆசானும் வழி காட்டியுமான பேராசிரியர் வ. விநாயகப்பெருமாள் அவர்களின் ஆசியும் இந்நூல் முழுமை பெற உதவியது.

கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த வேளையில் சாகித்திய அகாதெமி வெளியிடும் புத்தகங்களைப் பார்த்து ஏங்கியிருக்கிறேன். நமக்கும் இதுபோல் ஒரு வாய்ப்பு என்றாவது கிடைக்குமா என்றும் எண்ணியிருக்கிறேன்.அதனால் கவிஞர் கண்ணதாசன் பற்றி எழுதும் வாய்ப்புக் கிடைத்த போது மகிழ்ச்சி உண்மையிலேயே கரை புரண்டோடிற்று. இவ்வேளையில், இப்பணியினை எனக்களித்த சாகித்திய அகாதெமியினருக்கும், ஒப்புதல் அளித்த சான்றோர் களுக்கும், கணிணி அச்சகத்தாருக்கும் பிற அன்பர்களுக்கும் எல்லாம் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்

**எம். பாலசுப்பிரமணியன்**

# பொருளடக்கம்

# 1

# வாழ்க்கைப் பயணம்

1927 ஆம் வருடம் ஜுன் மாதம் 24ஆம் தேதி சிறுகூடல்பட்டிக் கிராமத்தில் கண்ணதாசன் பிறந்தார். சாத்தப்பன் விசாலாட்சி தம்பதி களின் எட்டாவது மகனாகப் பிறந்தவருக்குப் பெற்றோர் இட்ட பெயர் முத்து. கிராமத்தின் ஒரு சந்திலே 'ஏட்டுப் பள்ளிக் கூடம்' ஒன்றிருந்தது. நான்கு வயதில் அங்குதான் முத்துவின் கல்வி ஆரம்ப மாயிற்று. அடுத்த ஆண்டு கிராமத்து ஆங்கிலப் பள்ளிக் கூடத்தில் கல்வி தொடர்ந்தது. பள்ளிக்கூடத்துக்கு மூன்று ரூபாய் சம்பளம் கட்ட முடியாத நிலையில் பலமுறை வெளியே அனுப்பப் பட்டும் ஏழாம் வகுப்பை எட்டிப் பிடித்தார். அதைத் தொடர்ந்து அமராவதி புதூர் குருகுலத்தில் சேர்க்கப் பட்டார். படிப்பு, உணவு, துணி மணி வசதிகளுடன் அமைந்த அந்தப் பள்ளிக்கூடத்தில் எல்லா வற்றுக்குமாகச் சேர்த்து மாதச் சம்பளம் பன்னிரண்டு ரூபாய்தான். கிராமத்தில் ஏழாம் வகுப்பில் படித்துக் கொண்டிருந்தவரை அந்தப் பள்ளிக் கூடம் ஐந்தாம் வகுப்பில் தான் ஏற்றுக் கொண்டது. பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரையார் தான் அங்கு தலைமை ஆசிரியராக இருந்தார். நடுநடுவே அங்கு யாருக்கும் தெரியாமல் தன் வீட்டிற்குப் போய் விடுவாராம். பிறகு அப்பா திரும்பக் கொண்டு வந்து விடுவாராம் இருந்தும் எட்டாம் வகுப்புடன் அவர் படிப்பை வீட்டார் நிறுத்தி விட்டனர்.

இளமைப் பருவம்

அவர் பிறந்த வீட்டிலிருந்து இரண்டு மைல் தூரத்திலிருந்த 'பாப்பாத்தி ஊருணிக் கரை'யில் உட்கார்ந்து எதையாவது எழுதிக் கொண்டிருப்பார். நோட்டுப்புத்தகங்களில் எல்லாவற்றையும் குறித்தும் வைத்துக் கொள்வார். ஊர்க் கிராமத்திலுள்ள வாசக சாலையில் இருந்த புத்த கங்களை படிக்கும் வழக்கம் கொண்டிருந்தார். பத்துப் பனிரெண்டு வயதிலே நாவல் படிக்கும் ஆசை அதிகமாக எழுந்தபோது கண்ணதாசன் படித்தது எல்லாம் சரத்பாபுவின் கதைகளும் பங்கிம் பாபுவின் கதைகளும்தான். அங்கு ஒரு வீட்டில் போய் உட்கார்ந்து பெரும்பாலான நேரங்களும் வானொலியில் ஒலிபரப்பாகும் பாடல்களை எல்லாம் 'வானொலி' பத்திரிகையிலேயே குறித்து வைத்துக் கொள்வாராம். திரும்பத் திரும்ப ஒலிபரப்பாகும் பாடல்களைக் கேட்டுக்கேட்டு அவற்றைப் பாடவும் கற்றுக்கொண்டார். ராகங்களையும் வானொலியில் கேட்டுத் தெரிந்து கொண்டார்.

தன் மனதில் பதிவான பாட்டுகளின் பல்லவிகளை மட்டும் அவர்திரும்பத் திரும்பப் பாடிக்கொண்டிருப்பார். இதைத் தொடர்ந்து கேட்டுக் கொண்டிருந்த பக்கத்து வீட்டு ஆச்சி ஒரு நாள் முத்தையாவின் தாயாரிடம் "என்ன நம்ம முத்து பாட்டுல மொத ரெண்டு வரிகள மட்டுமே பாடிக்கிட்டே இருக்கான். முழுசும் பாட வராதா" என்று கேட்டிருக்கார். அதற்கு மறுமொழியாக முத்தையாவின் தாயார் "அடி போடி பைத்தியக்காரி, எம் மகன் ஆயிரம் பாட்டுக்கு அடி எடுத்துக் கொடுப்பான்டி அவனுக்கா தெரியாது........"என்றார்களாம்

வீட்டில் எல்லோரும் இரவு ஏழு மணிக்குச் சீக்கிரமே உறங்கப் போய்விடுவார்கள். எல்லோரும் தூங்கிய பிறகு அரிக்கேன் விளக்கைத் தலையணை அருகே எடுத்து வைத்துக் கொண்டு ஏதாவது எழுது வாராம் கண்ணதாசன். இனி மண்ணெண்ணெய் வாங்கிக் கட்டுப்படி யாகாது என்று தந்தை கோபிக்கும் போது மகன் எழுதுவதையும் படிப் பதையும் தடுக்க வேண்டாமென தாயார் சிபாரிசு செய்வாராம். அன்றே அவர் உள் மனம் அவரிடம் கூறியதாம் - 'அரிக்கேன் விளக்கின் ஒளியில் ஒரு மகா கவி உருவாகிறார்'. எழுதும் ஆற்றல் குவிந்து கிடப் பதாக 12 ஆம் வயதி லேயே அவருக்கு ஒரு பிரமை இருந்தது. 'பாப்பாத்தி ஊருணி' க் கரை யில் 13 ஆம் வயதில் எழுதிய கவிதையின் நான்கு வரிகள் மட்டும் தான் அவர் நினைவில் இருந்திருக்கின்றன. அவற்றைப் பதிவும் செய்துள்ளார்.

*வீணா கானம் விடியுமுன் கேட்டது*
*கர்ணா மிர்தம் காதுக்கு இனிமை*
*தூக்கம் கலைந்தது துள்ளி எழுந்தேன்*
*படுக்கையில் இருந்தே பருகினேன் அமுதம்*

இதற்குமேல் அவர் நினைவிலும் இல்லையாம்! தான் சந்திக்க விரும்பிய இலக்கிய உலகிற்கும் சிறுகூடல்பட்டிக் கிராமத்திற்கும் துளி கூட சம்பந்தமில்லையே என்று எண்ணினார்; ஏங்கினார். இந்தக் கிராமத்தை விட்டு வெளியேறி தன் இலட்சிய உலகை அடைய வேண்டுமென்று துடித்தார். தன் கனவுகளை நனவாக்கும் நோக்கத்துடன் ஒரு நாள் அந்திபடும் நேரம் அந்தக் கிராமத்தை விட்டு வெளி யேறினார்.

## முதல் பயணம்

ஊருக்கு மேற்கே ஊருணிக்கரைக்கு வந்தார். அங்குதான் வெளியூர்களுக்கு போகும் பஸ் வரும். மதுரையிலிருந்து திருச்சிக்கும் திருச்சியிலிருந்து மதுரைக்கும் செல்லும் பஸ்கள் அந்தப் பாதையில் வரும். எந்த பஸ் முதலில் வருகிறதோ அதில் ஏறுவதென தீர்மானித் திருந்தார். எங்கு போகவேண்டுமென்று ஒரு திட்டமும் அப்போது அவரிடமில்லை. அரை மணிநேரம் அந்த ஊருணிக் கரையில் உட்கார்ந்திருந்தார்.

கையில் ஒரு சிறுபெட்டி. இரண்டு சாதாரணமான வேட்டி சட்டைகள். சில பழைய புத்தகங்கள். கதை எழுதிய சில நோட்டுப் புத்தங்கள். உடைந்த ஒரு பவுண்டன் பேனா. இந்தச் சொத்துக்களுடன் வீட்டில் யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல் வெளியேறி விட்டார்.

நேரம் ஆக ஆக பெற்றோர்கள் தேடுவார்களே என்ற பயம் பற்றிக் கொண்டது. கூடவே கவலையும் வந்தது. அவர்களைப் பிரிந்து எப்படி இருக்கப் போகிறோம் என்றும் ஏங்கினார். வீட்டிற்கே திரும்பி விடலாமா என்று எண்ணிக் கொண்டிருந்த போது தான் மதுரைப் பாதையிலிருந்து பஸ் வருவதைக் கண்டார். கையைக் காட்டி பஸ்ஸை நிறுத்தினார். முன் இருக்கையில் ஏறி உட்கார்ந்தும் கொண்டார். பஸ் புறப்பட்டதும் கிராமத்துப் பாதையைத் திரும்பிப் பார்த்த அவர் கண்கள் மழையே பெய்தன.

தந்தை, தன்னைத் தேடுவார் என்ற வேதனையும் தாயார் தனக்கென தனியாகச் சமைத்து வைத்திருப்பார் என்ற எண்ணமும் மேலிட்ட போது பஸ்ஸிலிருந்து குதித்து விடலாமா என்று கூடத் தோன்றியதாம். ஆனால் வெகு சீக்கிரமே மனதை ஒரு நிலைப்படுத்திக் கொண்டார். திருச்சிக்குப் போய் வேலை தேடிக் கொண்டு வீட்டிற்குப் பணம் அனுப்ப வேண்டும் என்று முடிவும் கட்டிக் கொண்டார்.

திருச்சியில் அவருக்கு ஒரே ஒரு நபரைத் தான் தெரியும். அதுவும் நேரில் பார்த்துப் பழகிய நபர் அல்ல. அவருடைய ஒரு கதையைப் பிரசுரித்த ஜாபர்சா தெருவிலிருந்த பத்திரிகை ஆசிரியர் தான் அவருக்குத் தெரிந்த அந்த நபர். அவர் வீட்டிற்குச் சென்று தன்னைத் தானே அறிமுகப் படுத்திக் கொண்டார். அந்த நபர் மிகுந்த மகிழ்ச்சியுடன் வரவேற்று சாப்பிடவும் சொன்னபோது கண்ணதாசனுக்கு அது அதிசயமாகத் தான் இருந்தது. ஆனால் அந்த நபர் கொடுத்த சிபாரிசுக் கடிதங்களினால் வானொலி நிலையத்திலோ, பத்திரிகை நிறுவனங்களிலோ வேலை ஒன்றும் கிடைக்கவில்லை. படிகள் ஏறி இறங்கியது தான் மிச்சம்.

### சென்னை அனுபவங்கள்

சில நாட்கள் தங்கிப் பார்த்து விட்டு, திருச்சி சரிப்பட்டு வராது என்ற எண்ணம் தோன்றவே சென்னைக்கு ரயிலேறி விட்டார். அங்கு அவருடைய உறவினர் ஒருவர் வசித்து வந்தார். ஆனால் அவர் கண்ணதாசனை வீட்டிற்குள்ளே அழைக்கவேயில்லை. பசித்திருந்த வயிறுக்கு உணவு கூடக் கொடுக்கவில்லை. சாப்பிடாமல் இருப்பது தெரிந்திருந்தால் உணவளிக்க மறுக்கும் கொடுமைக்காரர் அல்ல அந்த உறவினர். அவரைப் பொறுத்த வரையிலும் இவருடைய துடுக்குத்தனமான பேச்சும் வெளிப்படையான விமர்சனங்களும் மனதைக் காயப்படுத்தியிருந்ததால் வீட்டிற்குள்ளே அனுமதிக்க

வில்லை. சமுதாயத்தில் பணவசதி இல்லாதவர்களின் நிலையை அவர் அப்போது தான் உணர்ந்தார். இருப்பவன் இல்லாதவன் வித்தியாசத்தை நகரத்தெருக்கள் அவருக்கு உணர்த்தின.

பிறகு, தன் சமூகத்தைச் சார்ந்த ஒருவரிடமே வேலை கேட்டுப் போன போது நேர்ந்த கதியை நினைத்து மிகவும் வேதனைப் பட்டார். தன் சமூகத்தில் இல்லாதவரே இல்லை என்ற கருத்துள்ளவர் அவர். இதனால் கண்ணதாசனுக்கு வேலை கொடுக்க அவர் மனம் ஒப்பவில்லை. அந்த இளைஞனைப் பொறுத்தவரையிலும் ஒரு வாய்ப்பு போய் விட்டது. அப்போது ஏழையாக இருந்தபோதும் வசதியுள்ள வம்சத்தைச் சார்ந்தவன் என்ற முத்திரை இருந்ததால் வேலை மறுக்கப்பட்டது. இருப்பவன் என்ற பெயரிருந்தால், உண்மையில் அப்படி இல்லையென்றாலும் திண்டாட்டந்தான். இல்லாதவன் என்ற பெயரிருந்தால், உண்மையில் வசதிகள் இருந்தாலும் கொண்டாட்டம் தான். இதனால் ஒரு சாராருக்குச் சொந்த வசதியுமில்லை; பிறர் உதவியுமில்லை என்றாகிறது. அவருக்குச் சமுதாயத்தின் அடிப்படைக் குறை புரிந்தது. வேலையில்லாத் திண்டாட்டம் சமுதாயத்தின் அவலநிலையை அவருக்குப் படம் பிடித்துக் காட்டியது. இந்தச் சமூக அமைப்பு தன்னை எவ்வளவு தூரத்திற்குப் பாதிக்கிறது என்பதையும் கண்ணதாசன் நன்றாக உணர்ந்து கொண்டார்.

சென்னைக் கடற்கரையில் மாலை நேரம் கண்ட கூட்டம் அவரைப் பிரமிக்க வைத்தது. தங்களை மறந்து மக்கள் மகிழ்ச்சியில் ஆழ்ந்திருப்பதைப் பார்த்த போது கண்ணதாசனுடைய உடம்பிலும் மனதிலும் புதிய தெம்பு வந்ததாம். அலைகளின் அருகே போய் உட்கார்ந்து வேடிக்கை பார்த்த போது சிந்தனைகளும் இறக்கைக் கட்டிக் கொண்டனவாம். இங்கு தான் வாழ்வின் சில அரிச்சுவடிகளையும் சுயநலக்காரர்களையும் சமுதாயத்தில் நிலவும் ஏற்றத்தாழ்வுகளையும் தெரிந்து கொண்டார்.

கடலை நோக்கி வேகமாக ஓடும் குழந்தையின் பின்னால் ஓடிய தாயின் செயலிலிருந்து மனிதனின் சுய நலத்தைத் தெரிந்து கொண்டார். மற்றவர்கள் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார்களே தவிர, ஒருவருமே கருணை தோன்றி அந்தக் குழந்தையை மீட்க முயற்சிக்க வில்லை. காலணாவைப் பிச்சைக்காரர்களுக்குக் கொடுத்தாலுமே பிறர் தன்னைக் கவனிக்க வேண்டுமென்ற எண்ணத்திலேயே கொடுப் பதையும் புரிந்து கொண்டார்.

கடற்கரையில் தேங்காய், மாங்காய், பட்டாணிச் சுண்டல் விற்றுக்கொண்டிருந்த ஒருவரைக் காட்டி, அழகான பட்டுப்பாவாடை கட்டியிருந்த குழந்தை ஒன்று சுண்டல் வாங்கித் தரும்படி கேட்டது.

அதன் கோரிக்கை தந்தையால் நிறைவேற்றப்பட்டது. வாங்கித் தின்னும் வக்கில்லாத நிலையிருந்த ஒரு பிச்சைக்காரக் குழந்தை ஆசையுடன் கையை நீட்டிய போது அந்தத் தந்தையால் விரட்டியடிக்கப்பட்டாள். இரண்டு குழந்தைகள் ஒரே பொருளின் மீது ஆசை வைத்த போது ஒன்று அதனைப் பெற்றது. மற்றொன்று விரட்டப்பட்டது. இதனைப் பார்த்துக்கொண்டிருந்த கண்ணதாசனுக்குச் சமுதாயத்தின் அடிப்படை புரிந்தது.

முதலாளித்துவத்தைப் பற்றியும் பொது வுடைமையைப் பற்றியும் முறைப்படி தெரிந்து கொண்டதில்லை என்ற போதிலும் கண் முன்னே சிறிய வடிவத்தில் அதனை அவர் கண்டார். உலகம் இப்படித்தான் இருக்குமா? இருவேறு வர்க்கம் தவிர்க்க முடியாதா? மேடும் பள்ளமும் இருந்து தான் தீருமா? என்ற வினாக்கள் அவர் மனதில் எழுந்தன.

கடலலைகள் கரையில் வந்து மோதும் ஒவ்வொரு தடவையும் ஏதாவது ஒரு பொருளை கரைக்கு கொண்டு வந்து சேர்த்துக் கொண்டிருந்ததைப் பார்த்த போதுதான் அவருக்கு ஒருதெளிவு பிறந்தது. படிப்பவை உள்ளே போய் ஒரு புதுப் பொருளாய் வெளியே வருவது தான் அறிவு என்று உணர்ந்து கொண்டார்.

கரையில் அமர்ந்திருக்கும் ஜோடிகளைப் பார்த்தபோதுதான், எல்லோரும் ஜோடிகளல்ல என்பது அவருக்குப் புரிந்தது. காதலர்கள் உல்லாசமாகப் பொழுதைக் கழித்திடவும் மகிழ்ந்திடவும் அங்கு வந்திருந்தனர். அப்படிப்பட்ட ஒரு ஜோடியைப் பார்த்த போது அவருக்குத் தன் முதற் காதல் தான் நினைவில் வந்தது. இப்படி யெல்லாம் பேசிக் கொள்ளும் வாய்ப்பு அவருக்குக் கிடைத்ததில்லை. நாடகம் கண்களிலே தொடங்கி கண்களிலேயே முடிந்தும் விட்டது. அங்கு உண்மைக் காதல் விழிகளில் அரங்கேறியது. இங்கு கடற்கரைக் காதல் செயல்பட்டது. அது அவருக்குப் புதுமையாகவும் பொறாமை யாகவும் இருந்தது. அவர்களையே மேலும் பார்த்துக் கொண்டிருக் காமல் அருகிலிருந்த படகுகளையும் தோணிகளையும் கட்டுமரங் களையும் தொட்டுப்பார்க்கவும், ஒரு கட்டுமரத்தை புரட்டிப் பார்க்கவும் செய்தார். அதில் ஏறிக்கொண்டா இந்தக் கடலில் மீனவர்கள் மீன் பிடிக்கப் போகிறார்கள் என்று அவருக்கு மனதில் ஒருவித அச்சமே தோன்றியது. உயிருக்கு உறுதி இல்லாத வாழ்வினைப் புரிந்து கொண்டார். தங்கள் குழந்தைகளைக் காப்பாற்றவும் வயிற்றை நிரப்பவும் வேண்டித்தானே இந்தக் கடினமான தொழிலை மேற் கொள்கிறார்கள் என்று எண்ணிக் கொண்டார். அலைகள் மேலே எழும்பிய போதும் தோணிகள் அவற்றைக் கிழித்துக் கொண்டு செல் வதைப் பார்த்தபோதும் அவருக்கு ஒரு நம்பிக்கை தோன்றிற்று. அலை வெளியே தள்ளினாலும் மீண்டும் அதனுள் செல்வதுபோல் நாமும்

சமுதாயத்திற்குள் ஓடித்தான் இடம் பிடிக்கவேண்டும் என்பதையும் புரிந்துகொண்டார். அன்றிரவு எங்கு போய்ப்படுத்துத் தூங்குவது என்ற எண்ணம் எழுந்த போது கடற்கரை மணலைத் தோண்டி பள்ளத்தை உருவாக்கிப் படுத்துக் கொண்டார். பெட்டிதான் தலையணை.

அப்போது தான் பெற்றோரின் நினைவு வந்து அலைக்கழித்தது. உடனே பெட்டியைத் தூக்கி வைத்துக் கொண்டு கடிதம் எழுத ஆரம்பித்தார். அடுத்த நாளே தான் வேலைக்குச் சேர இருப்பதாக அதில் எழுதினார். எதிர்காலக் கனவுகளில் மூழ்கியிருந்த போதுதான், காவல்காரரின் அதட்டல் சத்தத்தில் விழித்துக் கொண்டார். அங்கே படுக்கக் கூடாது என்றவர் பையில் எவ்வளவு பணம் வச்சிருக்கே என்று கேட்ட போது இவர் உண்மையைத்தான் சொன்னார். காலணாக்கூட கைவசம் இல்லை. மடியைத் தொட்டுப் பார்த்தும் பெட்டியைத் திறந்து பார்த்தும் பலனில்லாமல் போகவே பெட்டியைக் கையில் கொடுத்து துரத்தி விட்டார் அந்தக் காவல்காரர். ஒரு நாலணாவாவது அவர் கையில் அன்றிருந்திருந்தால் தூக்கத்திற்கு இடைஞ்சல் வந்திருக்காது. இல்லாதவன் ஆனதால் துரத்தப்பட்ட உண்மையை அன்றிரவு அவர் புரிந்து கொண்டார்.

பரபரப்புடனும் சுறுசுறுப்புடனும் இயங்கும் மக்களிடையே எந்த விதமான கடமையுமில்லாமல் பசியும் பட்டினியும் கண்ணதாசனைத் தொடர்ந்தது. மனத்திரையில் அவர் சேர்த்த அனுபவங்கள் ஓடின. எட்டாவது வரை படித்த ஒருவன் எழுத்தாளனாக முடியுமா என்று கூட ஒருவர் கேட்டிருந்தார். சரி, அந்த வாய்ப்புக் கிடைக்காவிடில் நடிகனாகிப் பார்க்கலாமே என்றெண்ணி தன் பெயரையும் சந்திரமோகன் என்று மாற்றி வைத்துக் கொண்டார். ஒரு படப்பிடிப்பு நிலையத்திற்கு விண்ணப்பிக்கவும் செய்தார். ஆனால் அவர்கள் மிகவும் சுறுசுறுப்பாக 'வேலை இல்லை' என்று உடனே பதிலெழுதி விட்டார்கள்.

எந்த முயற்சியும் பயனளிக்காத நிலையில் தாய் தந்தையரைப் பற்றிய கவலையாலும், சகோதர சகோதரிகளைப் பற்றிய பாசப்பிணைப்பாலும் அவர் மீண்டும் பிறந்த ஊருக்கே திரும்பி விட்டார். பிறகு அவருடைய உறவினர் ஒருவர் திருவொற்றியூரிலிருந்த அஜாக்ஸ் தொழிற் சாலையில் ஒரு குமாஸ்தவாகச் சேர்த்து விட்டார். அதற்குச் சிறிது தூரத்தில் தான் பட்டினத்தார் சமாதி அமைந்திருந்தது. மாலைநேரங்களில் அங்குப் போய் அமர்ந்து சிந்திப்பார். கற்பனையில் மிதப்பார். ஆனால் இருட்டியதும் திரும்பி விடுவார். திருவொற்றியூர் தான் அவர் எழுத்தாளன் ஆவதற்கான சூழ்நிலையை வளர்த்தது என்றால் அது மிகையல்ல. அதன் தலைமை நிலையம் சென்னையில் இருந்தது. இவரும் வாரந்தோறும் சென்னை வந்து எழுத்தாளர்களைச் சந்திப்பதை வழக்கமாகக் கொண்டிருந்தார்.

### புதிய பாசம்

அதன் பிறகு பதினாறு வயது நிரம்பாத அவருக்குப் புதிய ஒரு அனுபவம் ஏற்பட்டது. அந்த அனுபவத்தை சென்னையில் அந்த டிராம் வண்டி தந்தது. இவர் ராயப்பேட்டையில் ஏறி அந்த வண்டியில் அமர்ந்தபோது எதிரிலே ஒரு பெண் அமர்ந்திருந்தாள். அவள் பெயர் எமிலி. கழுத்துச் சங்கிலியில் சிலுவை மின்னிக் கொண்டிருந்தது. கையில் ஒரு ஆங்கிலப் புத்தகம் வைத்திருந்தாள். கள்ளம் கபடம் கலவாத தெளிந்த முகம்.

அவள் தான் முதலில் பேசினாள். அறிமுகத்திற்குப் பிறகு தான் ராணி மேரிக் கல்லூரியில் படிப்பதாகவும் கூறினாள். அக்கல்லூரி விடுதியினருகே டிராம் நின்றபோது அவள் பார்வையின் பொருளைப் புரிந்து கொண்டு இவரும் அங்கேயே இறங்கிவிட்டார். விடுதியில் புத்தகங்களை வைத்துவிட்டு இருவரும் நடந்து அந்தப் பாதையிலேயே போனார்களாம்.

எமிலியின் தமையன் ஒருவன் அதற்கு இரண்டு வாரங்களுக்கு முன்புதான் இறந்திருந்தான். அவளோ இளம் வயதில் கணவனை இழந்தவள். இவரைப் பார்த்தபோது பாச உணர்ச்சி மேலிட தானாகவே பேச வந்திருக்கிறாள். அவள் கண்ணீருக்கு இவர் ஆறுதல் கூறினார். அவளிடம் அன்பும் காட்டினார். தினமும் அவர்கள் கடற்கரையில் சந்தித்துக் கொள்ளவும் செய்தார்கள். ரகசியங்களைப் பரிமாறிக் கொள்ளவும் செய்தனர். பாச உணர்வு காதலாகவும் மலர்ந்திருக்கலாம். இந்தச் சந்திப்பின் விளைவாலே தன் வேலையை இழந்த கவிஞர் பின்னாளில் எமிலியைத் தேடிக் கல்லூரிக்குச் சென்ற போது அவள் ஊர் திரும்பிவிட்டாள் என்ற செய்தி தான் கிடைத்தது. பின்னர் அவளுடைய மரணச் செய்தியும் அவரை வந்தடைந்தது. கவிஞரின் நிழலாக இருந்த இராம கண்ணப்பன் இந்த உறவைக் கவிஞரின் இரண்டாவது காதலாகவே குறிப்பிடுகிறார். அதற்கு அவர் ஒரு சான்றினையும் தருகிறார். தான் எழுதிய 'வேலங்குடித் திருவிழா' என்ற நாவலை எமிலிக்குச் சமர்ப்பணம் செய்திருக்கிறார் கவிஞர்.

### தேடிய சந்தர்ப்பம்

பசி, பட்டினி ஒரு பக்கம்; வேலை இல்லாத நிலை மறுபக்கம். அந்த வேளையில் எல்லாம் அவருக்குச் சமுதாயத்தின் மீது கோபம் கோபமாக வருமாம். நாட்டை ஒரு மணி நேரம் அப்போது அவரிடம் ஒப்படைத்திருந்தால் பணம் படைத்த தொழிலதிபர்களைப் பழி தீர்த்துக் கொண்டிருப்பாராம். இந்நிலையில் சென்னையில் அலைவதைவிட கிராமத்திற்குத் திரும்பிவிடுவதே நலமென ஊருக்குத் திரும்பி விட்டார். சென்னையில் கிடைத்த அனுபவத்துடன், எந்தக் கிராமத்தை

உதறித்தள்ளினாரோ அந்தக் கிராமத்திற்கே திரும்ப வந்துவிட்டார். அப்போதுதான் அவருக்கு ஓர் உண்மை புரிந்தது. திறமை மட்டும் இருந்தால் ஒருவரால் முன்னேற முடியாது. சந்தர்ப்பம் அமைய வேண்டியது மிகவும் முக்கியம் என்றும் தெரிந்து கொண்டார்.

எனவே, அந்த முயற்சியில் இறங்கி அதையும் பரிசோதனை செய்து விடலாமென்று எண்ணி இரண்டாம் முறையாகத் திருச்சிக்கு வந்தார். அங்குள்ள உறவினரைப் பார்த்துப் பேசிவிட்டு அவருடன் உணவருந்திக் கொண்டிருந்தபோது அவருக்கு ஒரு பத்திரிகை வந்தது. அதன் பெயர் 'திருமகள்'. அந்தப் பத்திரிகை புதுக்கோட்டையை அடுத்த இராமச்சந்திரபுரத்திலிருந்து வெளி வந்து கொண்டிருந்தது.

### கண்ணதாசன் ஆனார்

அதில் வேலைக்குப் போகிறீர்களா என்று உறவினர் இவரைக் கேட்டபோது, உடனே தன் இசைவினையும் தெரிவித்தார். இதற்கு முன் பத்திரிகையில் வேலை பார்த்த அனுபவம் உண்டா என்று கேட்டபோது இவரும் ஆமென்று தான் பதில் கூறினார். பத்திரிகையாசிரியர் அவரிடம், என்ன பெயரில் எழுதி வந்திருக்கிறீர்கள் என்று கேட்ட போது ஒரு புனை பெயரைத் தேடலானார். இவரோ, கண்ணனைப் போல் வீட்டில் எட்டாவது பிள்ளை. மேலும் அன்றெல்லாம் தாசன் என்று தான் பலரும் பெயர் வைத்துக் கொண்டனர். இரண்டினையும் சேர்த்து கண்ணதாசன் என்று கூறலாம் என்றெண்ணிக் கொண்டிருந்த போதே பத்திரிகையாசிரியர் மீண்டும் தன் கேள்வியைக் கேட்டார். ஏதோ, சிந்தனையில் மூழ்கியிருந்தவர் போல் என்ன கேட்டீர்கள் என்று திரும்பவும் கேட்டார். கேட்டுவிட்டு, உடனே கண்ணதாசன் என்ற பெயரில் எழுதுவதாகவும் பதில் கூறினார். ஆமாம், பத்திரிகையில் பார்த்திருக்கிறேன் என்றவர், 'திருமகள்' பத்திரிகையில் வேலையும் கொடுத்தார். சந்தர்ப்பம் என்பது அதுதான். உண்மையில் கண்ணதாசன் என்ற பெயர் சற்று முன்பு பிறந்தது தான். அந்தப் பெயரை எந்தப் பத்திரிகையிலும் அவர் பார்த்திருக்க முடியாது. இருந்தாலும் அவருக்கு விடிவு காலமாக அந்த நேரம் அமைந்திருந்தது.

### முதல் தலையங்கம்

பிழை திருத்துவதே பத்திரிகையில் அவருக்குக் கொடுக்கப்பட்ட வேலை எனினும் பத்திரிகையின் சாரமற்ற பகுதிகளை அடித்துக் கொடுத்து விடுவார். இதைக் கவனித்த பத்திரிகை அதிபர், ஒருநாள் பத்திரிகைக்கு ஒரு தலையங்கம் எழுதிக் கொடுக்கும்படி கேட்டார். 1944ஆம் ஆண்டு இரண்டாம் உலகப்போர் முடிவடைந்து இந்திய இராணுவம் பர்மாவிலிருந்து இந்தியா திரும்பிய நேரமது. 'வருக, வருக' என்று இராணுவத்தை வரவேற்று எழுதியிருந்தார். துணைத்

தலையங்கத்தில் இராணுவத்தைப் பாராட்டிப் 'பாரதத் தாய் சிரிக்கிறாள்' என்றும் எழுதியிருந்தார். தலையங்கங்களைப் படித்த பத்திரிகை அதிபர் கண்ணதாசனுக்குப் பத்திரிகை ஆசிரியராகப் பதவி உயர்வு தந்தார்.

### முதல் கவிதை

கண்ணதாசனுடைய முதல்கவிதை இப்பத்திரிகையில் தான் 1944ஆம் ஆண்டு வெளிவந்தது. தொடர்ந்து கதை, கவிதை, கட்டுரைகள் என எழுதினார். ஒருநாள் 'திருமகள்' பத்திரிகை நிர்வாகி, மாலைநேரம் குளக்கரையில் வைத்துப் பேசிக் கொண்டிருந்தபோது ஒரு தேவதாசியின் கடிதத்தைக் கண்ணதாசனிடம் காட்டினார். பணத்தை லட்சியம் செய்யாத தாசியென்றும் அவளைப் பற்றி அவர் வருணித்தார். அப்போது கண்ணதாசனின் மனம் பின்னோக்கிப் போனது. அவருடைய கிராமத்திற்கு இரண்டாவது மைலில் வைரவன் பட்டி என்றொரு கிராமம். அங்கு ஐப்பசி மாதம் திருவிழா நடக்கும். கோவில் மண்டபத்தில் தேவதாசிகள் நடனம் நடக்கும். திருவிழாவிற்கு வருவோர்க்கெல்லாம் இலவசச் சாப்பாடு. அற்புதமான அந்தச் சாப்பாட்டைச் சாப்பிட்டுவிட்டு அப்போது பதினாறே வயதான கண்ணதாசனும் நாட்டியத்தில் போய் உட்கார்ந்தார். இரண்டு தேவதாசிகள் நடனமாடினர். அவர் கண்கள் கெடத் தொடங்கிய இடமும் இதுதான். இலக்கியம் படித்திருந்தவருக்கு தாசி மயக்கம் ஏற்பட்டது. அந்தத் தாசியைப் பற்றித்தான் இப்போது பத்திரிகை நிர்வாகியும் குறிப்பிடுகிறார். இளம்பருவ ஆசையும் வாலிபத்தின் வசந்தமும் ஒன்று சேர அன்றே அந்த ஊருக்குப் புறப்பட்டு விட்டார். அது ஒரு சின்னக் கிராமம். அந்த வீட்டில் அவருக்குப் பலமான வரவேற்புக் கிடைத்ததாம். அருமையான சாப்பாடும் பரிமாறப் பட்டதாம். அந்தநாள் அவருடைய முதல் இரவாகவும் அது முதல் உறவாகவும் அமைந்தது. பத்திரிகையில் உடன் வேலை செய்தவர் விலகியபோது அவருக்கு ஆதரவு தெரிவித்து இவரும் விலகிவிட்டார்.

### மீண்டும் கிராமத்தில்

கையில் காசில்லாத நிலையில் மீண்டும் சொந்த கிராமத்திற்கே திரும்பி விட்டார். குருகுலத்தில் உடன்படித்த சில நண்பர்கள் அருகிலொரு பள்ளியில் படிப்பதாக அறிந்து அவர்களைச் சந்தித்தார். அவர்கள் அனைவரும் சுயமரியாதையை ஆதரிப்பவர்களாகவும் அவ்வியக்கத்தின்பால் பற்றுக் கொண்டவர்களாகவும் இருந்தனர். அவர்களுடன் இரண்டு மணிநேரம் கண்ணதாசன் வாதித்தார். இருந்தாலும் தெய்வம் பொய்யென்று அவரால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. இவருடைய மனதை மாற்றும் பொருட்டு 'திராவிட

நாடு' இதழ்களையும் 'குடிஅரசு' வெளியீடுகள் சிலவற்றையும் பரிசாகக் கொடுத்தனுப்பினர்.

பத்து நாட்கள் கிராமத்திலிருந்து விட்டு மீண்டும் சென்னைக்குப் பயணமானார் கண்ணதாசன். சுயமரியாதை இயக்கத்தைச் சார்ந்த நண்பர் ஒருவர் எழும்பூர் புகை வண்டி நிலையத்தில் கண்ணதாசனைச் சந்தித்தார். அன்று மாலை கோகலே மண்டபத்தில் நடக்கவிருந்த கூட்டத்திற்கும் அழைத்தார். அக்கூட்டத்தில் சுயமரியாதைக்காரருள் ஒருவரான அண்ணா பேசினார். அந்த மாலை நேரம் கண்ணதாசன் மனதில் ஒரு மாற்றத்தை உருவாக்கும் நேரமாக அமைந்தது. மூன்று மணிநேரப் பேச்சில் பக்தனின் வடிவம் மாறுவதை அவராலேயே உணர முடிந்தது. இருந்தாலும் தன் எதிர்காலப் பயணத்திற்கு சுயமரியாதை முத்திரை தடையாகும் என்பதையும் உணர்ந்திருந்தார். காரணம் அந்நாளில் அவர்களை ஆதரித்தவர்களை விட எதிர்த்தவர்களே அதிகம். கண்ணதாசனைச் சுற்றியிருந்தவர்களும் வாழவைக்க வேண்டியவர்களும் பழுத்த வைதீகர்களாக இருந்தனர். எங்கே சுற்றினாலும் திரும்பிப் போக வேண்டியதென்னவோ செட்டி நாட்டுக்குத்தான் என்பதால் சுயமரியாதையை இதயத்திலும் வைதீகத்தை நெற்றியிலும் வைத்துக் கொண்டார்.

புதுப்பாதைகள்

'மேதா'வியலும், 'திரைஒலி' யிலுமாகச் சில காலம் வேலை பார்த்துவிட்டுச் சென்னைக்கு வந்த கண்ணதாசன் தன் நண்பர்கள் பணிபுரிந்த 'சக்தி' காரியாலயத்தில் தங்கியிருந்தார். அங்கு தங்கி இருந்த நாட்கள் மிகவும் இனிமையான நாட்கள்தான். அந்நாட்களில் தான் வாழ்க்கையின் பல நிலைகளையும் அவர் கண்டார். நல்ல பழக்கங்களும் கெட்ட பழக்கங்களும் அக்காலத்தில் தான் ஏற்பட்டன.

ஒருநாள் இரவு ஒன்பது மணியளவில் பஸ்ஸுக்காக காத்து நின்றபோதுதான் ஒரு ரிக்ஷாகாரன் அருகில் வந்து புதுப்பொண்ணு வேணுமா என்று கேட்டு அவரை ஒரு விலைமாதிடம் அழைத்துச் சென்றான். அடுத்த நாள் மாலை அவருடைய நண்பர்கள் ஒரு மதுக்கடைக்கு அவரை அழைத்துச் சென்றார்கள். விளையாட்டுப் போக்கில் ஆரம்பித்த இரண்டு பழக்கங்களுமே அவருடைய வாழ்வில் தவிர்க்க முடியாதனவாகி விட்டன.

அடுத்து, சேலத்தில் மாடர்ன் தியேட்டரினர் நடத்தி வந்த 'சண்ட மாருத'த்தில் சேர்ந்தார். அங்கிருந்தபோது தான் நிறைய படித்தார். சங்கப் பாடல்கள் இராமாயணம் என்று இலக்கியங்களையெல்லாம் படித்தபோது தானும் அதுபோல் எழுத வேண்டுமென்று உறுதி பூண்டார்.

*அரசியலில் நுழைந்தார்*

1949ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 17ஆம் தேதி மீண்டும் சென்னைக்கு வந்து சேர்ந்தார். தன் நண்பர் கருணாநிதியுடன் ராபின்சன் பூங்காவில் நடந்த கூட்டத்தில் பங்கு பெற்று அன்று உதயமான திராவிட முன்னேற்ற கழகம் என்ற அரசியல் கட்சியில் அங்கத்தினருமானார். கண்ணதாசனின் அரசியல் வாழ்வும் அன்று ஆரம்பமாயிற்று.

*புது சந்தர்ப்பம்*

மீண்டும் சேலத்தில் வேலைக்குச் சென்றவர் அங்கு இருக்கப் பிடிக்காமல் போகவே சகோதரர் ஏ.எல்.எஸ். வாழ்ந்திருந்த கோவைக்குச் சென்றார். அங்கு சென்றதற்கு வேறொரு நோக்கமும் இருந்தது. சேலத்தில் வைத்துப் பழக்கப்பட்ட டி.எஸ். வெங்கடசாமி என்பவர் அங்கு ஒரு ஸ்டூடியோ நிர்வாகியாக இருந்தார். கண்ணதாசனும் தன்னுடைய வாழ்வில் அமையப்போகும் திருப்பத்தை, புதுசந்தர்ப்பத்தை எதிர் நோக்கிக் காத்திருந்தார். அவரைப் போய் பார்த்தபோது பத்துநாள் கழித்து வரச் சொன்னார்.

*பாடலாசிரியர் ஆனார்*

பத்தாம் நாள் சென்ட்ரல் ஸ்டூடியோவுக்குப் போனார். அது பரபரப்பாக இயங்கிக் கொண்டிருந்தது. வெங்கடசாமிக்கு ஒரு சீட்டு கொடுத்தனுப்பினார். அவரும் வரச் சொன்னார். உள்ளே போய்ப் பார்த்தார். கண்ணதாசன் வாழ்வில் திருப்பு முனையாக அமைந்தது அந்த நிமிடம் தான். எந்த மாதிரி வேலையை எதிர்பார்க்கிறீர்கள் என்று கேட்டபோது, கதை எழுதுவேன், வசனமெழுதுவேன் என்றவரிடம் பாட்டெழுத முடியுமா என்று கேட்ட கேள்வி தான் கண்ணதாசன் வாழ்க்கையையே திருப்பிப் போட்டது.

ஒரு புதுப்படத்திற்கு பாடல் எழுத புது ஆளைத் தேடிக் கொண்டிருந்த டைரக்டர் ராம்நாத்திடம் கண்ணதாசன் அறிமுகப் படுத்தப்பட்டார். பாட்டுக்கான இடத்தை விளக்கிப் பாட்டெழுதச் சொன்னார் அவர். ஓடிப்போய் தனிமையில் வீட்டில் உட்கார்ந்து பாட்டெழுதத் தொடங்கினார்.

"கலங்காதிரு மனமே - உன்

கனவெல்லாம் நனவாகும் ஒரு தினமே"

இந்தப் பாட்டு படத்திற்கு மட்டுமல்ல - அவர் தனக்குத் தானே சொல்லிக் கொண்ட சமாதானமும் தான்.

பாட்டுக்கு நூறுரூபாய் வீதம் அவருக்குத் தரப்பட்டது. அங்கிருந்த போதே சேலத்திலிருந்து தந்தி வந்தது. அங்கும் போய் பாட்டெழுதினார். ஊதியமும் உயர்ந்தது.

**சுவீகாரம்**

சேலத்திலிருந்து சென்னை திரும்பியவர் தன் நண்பர் ஒருவரைப் பார்க்கச் சென்று கொண்டிருந்த போது தான், சேலத்தில் அறிமுகமாகிப் பின் கோவையிலும் சந்தித்த அந்தப் பெண்ணைக் கண்டார். இளமையின் சுகம் உச்சந்தலையில் ஊஞ்சலாடியதால் அவளுடன் நாட்களைச் செலவழிக்கத் தொடங்கினார். அந்த வலையில் சிக்கி உழன்றவரைக் கரையேற்ற உறவினர்கள் தீர்மானித்தனர். அதன்படி சகோதரர் ஏ.எல்.எஸ் ஒரு தந்தி கொடுத்து அவரை அழைத்தார். ஊருக்குச் சென்ற பிறகுதான், தான் அழைக்கப்பட்டதன் காரணமே கண்ணதாசனுக்குத் தெரிய வந்தது. தீய சக்திகளிலிருந்து அவரை விடுவிப்பதற்காக சுவீகாரம் கொடுப்பதென உறவினர்கள் தீர்மானித்திருந்தனர். கணவனையும் மகளையும் இழந்த தெய்வானை ஆச்சியின் மகனாக நாராயணன் என்ற பெயருடன் காரைக்குடிக்குப் போனார்.

**திருமணம்:**

1950 ஆம் வருடம் பிப்ரவரி மாதம் ஒன்பதாம் தேதி பொன்னம்மாவை கண்ணதாசன் திருமணம் செய்து கொண்டார்.

பகுத்தறிவு வாதியாகத் தன்னை இனங்காட்டிக் கொள்ளத் தலைப்பட்டிருந்த காலமது. திரைக்கதை வசனமெழுத கல்கத்தாவுக்கும் பாட்டெழுத சேலம், சென்னை என்றும் பயணித்துக் கொண்டிருந்த நேரமது. இதன் பின்னர் காரைக்குடியிலிருந்த மனைவியையும் அழைத்துக் கொண்டு சென்னையிலேயே குடியேறி விட்டார்.

சென்னையில் குடியேறின பிறகு உறவினர்களின் எதிர்ப்புக்களை எல்லாம் நிராகரித்துக் கொண்டு 'பார்வதி'யை திருமணம் செய்து கொண்டார். மனைவி மேல் உள்ள அன்பால், பற்றால், பாசத்தால் தன் புனை பெயரைக் கூடப் 'பார்வதி நாதன்' என்று வைத்துக் கொண்டார். கவிஞரைப் பாராட்டிச் சீராட்டி ஊட்டி வளர்த்ததில் பார்வதி அம்மையாருக்குப் பெரும் பங்கு உண்டு என்பது உண்மையே என இராம கண்ணப்பன் கூறியுள்ளார்.

**முதல் காவியம்:**

1954 ஆம் ஆண்டு கல்லக்குடி போராட்டத்தில் தன் பெயர் அறிவிக்கப்படாமலிருந்தும் கலந்து கொண்டு சிறைத்தண்டனை பெற்றார். கவிஞருடைய முதல் குறுங்காவிய நூலான 'மாங்கனி' திருச்சி சிறையில் வைத்து அப்போது எழுதப்பட்டதுதான்.

**தென்றல்**

விடுதலையாகி வெளியே வந்ததும் திருச்சியிலிருந்து நேராகச் சென்னைக்கே திரும்பினார். தன்னிலை விளக்கமாகவும் இலக்கியதாகம்

தணியும் முகமாகவும் 'தென்றல்' என்ற இலக்கியப் பத்திரிகையை ஆரம்பித்தார். 1954 ல் இருந்து 1956 வரை தன்னைப் பெரிய இலக்கிய விமர்சகராகவும் அரசியல் ஆர்ப்பாட்டங்களில் பங்கு கொள்பவராகவும் கவிஞராகவும் வசனகர்த்தாவுமாக வெளிப்படுத்திக் கொண்டார். ஆனால் கவிஞர் என்றே அனைவராலும் மதிக்கப் பட்டார். தொடர்ந்து திரை உலகத் தொடர்பினால் 'தென்றல் திரை' என்ற பத்திரிகையையும் தொடங்கினார்.

### வெளிநாட்டுப் பயணம்

1954 இல் முதல் முறையாகவும் அதன் பின்னர் ஒரு முறையும் கவிஞர் இலங்கைக்குச் சென்றார். இப்பயணத்தின் போது மனைவி பார்வதியையும் அழைத்துப் போயிருந்தார். இலங்கை வாழ் தமிழர்கள் மீதும் தோட்டத் தொழிலாளர்கள் மீதும் கவிஞருக்கு பற்றுதலும் அனுதாபமும் இருந்தது. அங்கு எதுவும் நடந்தால் அதற்கு இங்குக் கவிஞர் தான் முதல் குரல் கொடுப்பார்; கண்டனம் தெரிவிப்பார். கனல் தெறிக்கும் கவிதைகள் படைப்பார். இலங்கை தூதுவர் அலுவலகத்துக்கு முன்னால் ஒரு தடவை கண்டன ஊர்வலம் கூட நடத்தியிருக்கிறார். இதனால் கோபமுற்ற இலங்கை அரசாங்கம் கண்ணதாசன் பாடல்களை ஒலிபரப்பக் கூடாதென்று முதலில் தடைவிதித்தது. ஆனால் பிறகு பாடலை ஒலிபரப்பலாம் என்றும் பெயரைச் சொல்லக் கூடாதென்றும் முடிவை தளர்த்திக் கொண்டதாம். இது பற்றிக் கவிஞரிடம் கேட்டபோது தன் பாடல்களை விட்டால் அவர்களுக்கு ஒலிபரப்ப பாடல்கள் ஏது என்று கேட்டாராம்.

### முதல் தேர்தல்

1957 ஆம் ஆண்டு நடந்த பொதுத் தேர்தலில் தான் உறுப்பினராயிருந்த கட்சியின் சார்பில் அவருடைய கிராமமும் அடங்கிய திருக்கோட்டியூர் தொகுதியைத் தான் போட்டியிட கண்ணதாசன் தேர்ந்தெடுத்தார். சென்னையில் ஆயிரம் விளக்குத் தொகுதி இவருக்காக ஒதுக்கப்பட்டிருந்தது. இருந்தும் இவர் அங்கு நிற்கவில்லை. இவருடைய பிரச்சார வேகத்தைக் கண்டு காங்கிரஸார் அஞ்சினர். ஊரில் நகரத்தார் தங்களிடம் வாக்குக் கேட்கும்படிச் சொன்னார்கள். அதன்படி வாக்கும் கேட்டார். மற்றோர் இடத்தில் நகரத்தார் வழக்கப்படி கீழே விழுந்து வாக்குக்கேட்க வேண்டுமென்றார்கள். தன்மானமிக்க கண்ணதாசன் அதற்கு உடன்படவில்லை. நகரத்தார்களே தனக்கு விரோதியென்றும் தனக்கு அவர்கள் வாக்குகள் தேவையில்லையென்றும் பேசியதன் விளைவால் தேர்தலில் தோல்வி யடைந்தார். அதனால் கடன் கொஞ்சம் ஏறியது. அதைத் தீர்க்க வேண்டி தயாரிப்பாளர் ஆனார். ஆனால் நடிகரின் ஒத்துழைப்பு கிடைக்காமல்

போனதால் 3000 ரூபாயிலிருந்த கடன் 62000 ரூபாயாக ஏறியது. அவர் எடுத்த மாலையிட்ட மங்கை' படத்தை தயாரித்த செலவுக்கே . விற்றதால் லாபம் கிடைக்கவில்லை. அடுத்து எடுத்த 'சிவகெங்கைச் சீமை' படம் வேறொரு படத்திற்குப் போட்டியாக எடுக்கப்பட்டது என்ற கருத்து நிலவியதால் படம் தோல்வியைத் தழுவி நஷ்டமும், கடனும் ஒன்றரை லட்சமாக உயர்ந்தது.

*புதுக்கட்சி*

1961 ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 9. ம் தேதி கழகத்தை விட்டு வெளியேறினார். ஆனால் சூதுவாது தெரியாத கண்ணதாசனை புதுக்கட்சி ஆரம்பிக்க வைத்து விட்டனர். அங்ஙனம் 'தமிழ் தேசீயக் கட்சி' பிறந்தது. தனிக்கட்சி ஆனதால் பணச்செலவும் அதிகமானது. பொருளை வீணாக்கி, நேரத்தை வீணாக்கி, நிம்மதியையும் இழந்தார்.

*காங்கிரசில் இணைந்தார்*

அப்போதுதான் சமதர்மக் கொள்கையை நம்புவர்கள் எல்லாம் ஒரு குடைக்கீழ் வரவேண்டுமென்ற காமராஜரின் வேண்டுகோளை ஏற்று தன் கட்சியை காங்கிரசுடன் இணைத்தார். தனக்குத் தானே ஏற்படுத்திக்கொண்ட தேசபக்தியினால் பெரும் கடன்காரரானார். சீனயுத்தம் வந்தபோது 'இரத்தத் திலகம்' என்றொரு படம் எடுத்தார். அன்று தமிழகத்தை ஆண்டு கொண்டிருந்த காங்கிரஸ் அரசு வரி விலக்கு கூட அளிக்கவில்லை. இதில் கண்ணதாசனுக்குப் பெரும் நஷ்டம் வந்தது. 'கறுப்புப் பணம்' பற்றிப் படமெடுத்தார். நடிக்க யாரும் முன்வரவில்லை. அவரே நடித்தார். இந்தப் படமும் அரசால் உதாசீனப்படுத்தப்பட்டது.

*தன்னிரக்கம்*

1961.ல் இருந்து 1972 வரை நிம்மதியற்ற நிலையில்தான் அத்தனை பாடல்களையும் எழுதினதாக கண்ணதாசனே குறிப்பிட்டுள்ளார். கோர்ட்டிலே என்றும் பெயர் கூப்பிடப்படும். பாட்டெழுத வீட்டிலே ஆட்களின் முற்றுகை தொடரும்.

வீட்டில் குழந்தைகளுக்கு நல்ல ஆடை அணிகள் ஒன்று கூட வாங்கியதில்லை. ஒரு குழந்தையின் கல்விப் பொறுப்பையும் ஏற்றுக் கொண்டது கிடையாது. அதற்கென்று பள்ளிக்கூடப் படிக்கட்டுகளில் ஏறி இறங்கியதும் இல்லை. படமெடுப்பார் ; பணம் கொடுப்பார் ஏமாற்றுகிறவர்கள் ஏமாற்றுவார்கள். இவ்வளவுக்கிடையிலும் அருமையான பாடல்கள், கவிதைகள் பிறந்தன. சங்கீதத்திலும் தத்துவத்திலும் தன்னையே மறந்தார்.

எட்டாம் வகுப்புக்கு மேல் படிக்க முடியவில்லை என்ற ஆதங்கமும் தன்னைச் சுவீகாரம் தராமல் இருந்திருந்தால் என்ற ஏக்கமும் கண்ணதாசன் அடிமனதில் ஆழமாக வேர் விட்டிருந்தன. பணமும் மானமும் ஒரு சேரப் போய்க் கொண்டிருந்த காலத்தில் தான் மதுவிலும் மாதுவிலும் சுகம் தேடிப் போனார். உண்மையில் விலைமாதர் உறவிலும் ஒரு கிண்ணத்திலும் சுகம் கிடைத்தது என்பதை விட அவரால் துன்பத்தை மறக்க முடிந்தது என்றுதான் கூற வேண்டும்.

**ஊமைக்காயம்**

மனதில், முதல் காதல் ஏற்படுத்திய ஊமைக் காயத்தினால் உள்ளுக்குள் கண்ணதாசன் அழுதுகொண்டேயிருந்தார். அதனால் தான் ஆறுதல் தேடி அங்குமிங்கும் அலைந்து அலைபாயும் மனதுக்கு வடிகால்களும் தேடிக் கொண்டார். அவ்வேளையில் தான் அவருடைய ஒரு நாடகத்தில் 'பானு' என்ற பெண் நடிக்க வந்தாள். ஒல்லியான உருவம், சிவந்த தோற்றம் சுருண்ட கூந்தல்; இருபத்தைந்து வயதைத் தாண்டாத பருவம். நாடகம் நடக்கும் போதெல்லாம் அவள் இவரையே பார்த்துக் கொண்டிருப்பாள். நாடகம் இல்லாத நாட்களிலும் அவரைத் தேடி அலுவலக மாடிக்குச் சென்று விடுவாள்

பானுவின் அன்பு மொழிகள் அவருக்குப் புது உற்சாகத்தைத் தந்தன. ஆன்மாவின் ராகத்தை அவர் படித்தார். பானு பக்கத்தில் இருந்த காலங்களில் பல துயரங்களையும் மறந்ததாகக் கண்ணதாசனே கூறியுள்ளார். அவரிடம் அன்பும் மரியாதையும் கொண்டிருந்த பெண். கண்ணதாசன் தன்னை அழித்துக் கொள்ளக் கூடாதென்று கொஞ்சம் குடித்ததும் கோப்பையை எடுத்து ஒளித்து வைத்து விடுவாளாம். எந்த விதமான பலனையும் அவள் எதிர்பார்க்கவில்லை. அவர் கொடுத்த பணம், மோதிரம் எதையுமே அவள் வாங்கிக் கொள்ளவுமில்லை.

கவிஞரின், 'நான் மட்டும் அறிந்த கதை' என்ற கவிதையும் 'அவளுக்காக ஒரு பாடல்' என்ற குறுநாவலும் பானுவை மையப்படுத்தி எழுதியவை தான். அவளுடைய பார்வை, ஒரு கிண்ணத்தை ஏந்தும் காரணத்தைக் கேட்பதாக இருந்தது. மயக்கத்தின், மௌனத்தின் பொருளைத் தேடுவதாக அமைந்தது. அன்புக்காக ஏங்கிய கண்ணதாசனுக்கு அந்த அன்பு கிடைத்தது. அவளையும் தன்னோடு வாழ்வில் இணைத்துக் கொள்ள வேண்டுமென்று எண்ணியிருந்த வேளையில் தான் அந்த அதிர்ச்சியான செய்தி அவரைத் தாக்கியது. ஆம்! ஒருநாள் அதிகாலை, மதுரையிலிருந்து வந்தவரை அவளுடைய மரணச் செய்தி வரவேற்றது. காதலியையும் பானுவையும் மனதில் கொண்டு, நிம்மதியில்லாத நிலையில் எழுதிய பாடல்கள்தான் ஏராளம். காதலியை மனதில் கொண்டு எழுதிய பாடல்களுள்

காலங்களில் அவள் வசந்தம்
கலைகளிலே அவள் ஓவியம்
மாதங்களில் அவள் மார்கழி
மலர்களிலே அவள் மல்லிகை

என்பதும் ஒன்று. தன்னுடைய மகிழ்ச்சியையும் துயரத்தையும் வெளியிட ஒரு கருவி கிடைத்ததில் தான் அவர் துன்பங்களையும் சோதனைகளையும் தாங்கிக் கொண்டார்.

புதுப்பார்வை

1969 ம் ஆண்டு காங்கிரஸ் கட்சியில் பிளவு ஏற்பட்ட போது அவர் மனம் மீண்டும் வேதனையில் ஆழ்ந்தது. அவர் மரியாதை செலுத்தி வந்த இரு தலைவர்களும் இரு சேரியிலாக ஆன போது இரண்டு பேரையும் விட்டுக் கொடுக்க முடியாத மன நிலையில் இவர் தள்ளப்பட்டார். அதனால் பற்றற்ற நிலையை அரசியலில் தொடர்ந்தார். ஆனால் இலக்கிய உலகில் அதிகமாகக் கவனம் செலுத்தத் தொடங் கினார். நிறைய எழுதினார். தன் எண்ணங்களைப் பத்திரிகைகளில் பகிர்ந்து கொண்டார். அவருக்கெனவே வார இதழ்களில் பக்கங்கள் ஒதுக்கப்பட்டன. கடைசிப் பக்கமும், முதல் பக்கமும் தந்த இதழ்கள் உண்டு. இங்ஙனம் இலக்கியத்தில் மூழ்கியிருந்த போது தான் திடீரென ஒரு நாள் ' தினமணிக்கதிர்' அலுவலகத்துடன் தொலைபேசியில் தொடர்பு கொண்டார். அதன் ஆசிரியர் 'சாவி' யே மறுமுனையில் பேச அவருடைய வேண்டுகோளை அப்போதே ஏற்று'அர்த்தமுள்ள இந்துமதம்' தொடரை எழுத ஆரம்பித்தார். மனத்தால் வைதீகத்திற்கு முற்றிலுமாக வந்து விட்ட கண்ணதாசன் பக்திப் பெருக்கை தன் எழுத்துக்களில் காட்டினார். தன் கடந்த கால வாழ்வின் தவறுகளுக்காக இக்கால கட்டத்தில் மனம் வருந்தவும் செய்தார். தவறான போக்கின் பலன்களைப் பின்னாளில் அறுவடை செய்யும் நேரம் வந்த போது மனம் தானாக இறைவனிடம் சரணடைந்தது. தன்னுடைய கடைசிப் புகலிடம் ஆத்திகம் தான் என்று அதனால் அறிவிக்கவும் செய்தார்.

புதுப்பாதை

1975ம் ஆண்டு இந்திய அரசியலில் ஒரு திருப்பம் ஏற்பட்ட ஆண்டு. அவ்வாண்டுதான் உள்நாட்டு நெருக்கடி நிலை பிரகடனப் படுத்தப்பட்டது.

நேருவின் காலத்திலேயே ஒழுங்கு பெறாத உரிமைகளும் உழைக்காத மக்கள் மனப்பான்மையும் தான், நமது நாட்டின் முன்னேற்றத்திற்கு முட்டுக்கட்டைகள் என்று கூறியவர் கண்ணதாசன். நேருவின் கையில் சவுக்கை கொடுக்க வேண்டுமெனவும் அன்றே

பாடியவர். இந்த மனப்பானமையிலிருந்த கவிஞர் உள்நாட்டு நெருக்கடி நிலை பிரகடனப்படுத்தப்பட்டபோது அதைன வரவேற்றதில் அதிசயமில்லையே! இருபது அம்சத் திட்டங்களை ஆதரித்துக் கவிதைகளும் எழுதினார். இங்கும அவருடைய அடிமன ஆசைகள் - ஏழைகள் நிலை உயரும் என்பதும் மக்களுக்கு நன்மைகள் கிடைக்கும் என்பதுமாகத்தான் இருந்தன.

ஆனால் அடுத்த ஆண்டு அக்டோபர் மாதம் காமராஜர் மறைந்த பின்னர், கண்ணதாசன் தன்னை முழுமையாக இந்திராவின் பக்கம் இணைத்துக் கொண்டார்.

### *மீண்டும் வெளிநாட்டுப் பயணங்கள்*

தன்னுடைய 41ம் வயதில் கவிஞர் இரண்டாம் முறையாக வெளிநாடு சென்றார். இம்முறை சோவியத் ரஷ்யாவுக்கு பயணமானார். அந்நாட்டைப் பற்றியும் மக்களைப் பற்றியும் எழுதிய பாடல்களை இசையமைத்து எம் எஸ். விஸ்வநாதன் மேடையிலேயே பாடினாராம். அதன் மொழி பெயர்ப்புகளைக் கேட்டுவிட்டு மக்கள் செய்த கரகோஷம் மண்டபத்தையே அதிர வைத்ததாம்.

மூன்றாம் முறையாக 1970ம் ஆண்டு மலேசியாவிற்குச் சுற்றுப்பயணம் புறப்பட்டார். அங்குள்ள தமிழ்ப் பத்திரிகைகள் பெரும் அளவில் கவிஞரின் வரவை விளம்பரப்படுத்தியிருந்தன. தொலைக் காட்சியினர் சிறப்புப் பேட்டிகளை ஒளி பரப்பினர். வானொலியினரும் ஒலி பரப்பினர். அங்கு, தினமும் மாலையில் சொற்பொழிவாற்றினார். மக்களை, தன் தமிழால் மயக்கி விட்டார். காண வந்தவர்கள் எல்லோரும் வாழ்த்துக்கள் கேட்டனர். கவிஞரும் அனைவர்க்கும் கொடுத்தார். பதிலுக்கு அவர்களும் பரிசுகள் வழங்கினர். இதனால் ரசிகர்களும் நண்பர்களும் எண்ணிக்கையில் அதிகரித்தனர்.

1976ம் ஆண்டு மலேசியா, கோலாலம்பூர், தாய்லாந்து, சிங்கப்பூர் என ஒருமாத கால அளவிலாக அமைந்தது கவிஞருடைய அடுத்த வெளிநாட்டுப் பயணம். இப்பயணத்தில் கவிஞர் இருந்த போதுதான் காமராஜர் அமரரானார். அதனால் கவிஞரால் உடனே தாயகம் திரும்ப முடியவில்லை.

### *மீண்டும் பத்திரிகைகள்*

தான் ஆரம்பித்த முதல் இலக்கியப் பத்திரிகையான 'தென்றல்' நின்றுபோன ஆற்றாமையில் 'கண்மணித்தென்றல்' என ஓர் இரங்கற்பா எழுதி தன் மனோ வேதனையை முதலில் குறைத்துக் கொண்டார். ஆனால் நீரு பூத்த நெருப்பாய் உள் மனதில் இருந்த ஆசைத்தீ 'கடிதம்' வார இதழைத் தொடங்கியது. அதுவும் சரிவர இயங்காமல் போகவே 1968ம் ஆண்டு தமிழ்ச்சித்திரை மாதம் 'கண்ணதாசன்' மாத இதழை

வெளிக்கொண்டு வந்தார். தணியாத இலக்கிய தாகமுடையோர்க் கெல்லாம் அது சரியான விருந்தாகவும் அமைந்தது.

### இரு விபத்துகள்

1970-71ம் ஆண்டில் கவிஞரின் நாடகமன்றத்தினர் 'நாரத விஜயம்' என்ற நாடகத்தை நடத்திக்கொண்டிருந்தனர். காங்கிரஸ் கட்சிக்காக நடத்தப்பட்ட நாடகமது. ஒரு நாள் இரவு 12 மணிக்கு விழுப்புரத்தில் நாடகம் முடிந்து இரவு உணவருந்திவிட்டுக் கடிகாரத்தைப் பார்த்தபோது மணி இரண்டைத் தாண்டியிருந்தது. அடுத்த நாள் காலை சென்னையில் இருக்க வேண்டுமென்பதால் உடனே பயணத்தை மேற்கொண்டார். அதிகாலைக் குளிரில் டிரைவர் சிறிதே கண்ணயர கார் ஒரு மாட்டுவண்டி மீது மோதிவிட்டது. வண்டியின் நுகத்தடி பின்னிருக்கை வரை வந்தபோதும் கவிஞர் அன்று காயம் ஏதுமின்றி உயிர் தப்பியது அதிசயமே. இரண்டாவது விபத்து 11.5.73 அன்று பாண்டிச்சேரி கம்பன் விழாவிற்குச் செல்லும் போது ஏற்பட்டது. இங்கும் இரவு நேரப் பயணத்தினால்தான் விபத்து ஏற்பட்டது. கார் குடை சாய்ந்த நிலையிலிருந்தது. அதனை நேராக நிமிர்த்திய போது கவிஞரின் இடது கை தோள்பட்டை கதவில் மோதியதால் மூட்டு கீழிறங்கி விட்டது. கவிஞர் புதுச்சேரி மருத்துவ மனையில் ஒரு வாரம் தங்கி சிகிச்சை பெற்றார்.

### மூன்றாம் மணம்

இரு மனைவியரையும் பதினான்கு குழந்தைகளையும் பெற்ற கண்ணதாசன் பொன்விழா கொண்டாட்டத்திற்குச் சற்றுமுன் 1976ம் வருடம் மே மாதம் மூன்றாவது முறையாகத் திருமணம் செய்து கொண்டார்.

### பொன்விழா

1976ம் ஆண்டு ஜூன் மாதம் 24ம் தேதி சென்னைப் பல்கலைக்கழக நூற்றாண்டுவிழா மண்டபத்தில் கண்ணதாசனின் பொன்விழா வெகுவிமரிசையாகக் கொண்டாடப்பட்டது. அன்று பிற்பகல் நான்கு மணி அளவில் பொன்விழா நிகழ்ச்சிகள் ஆரம்பமாயின. திரை உலகப் பிரமுகர்கள், கலைஞர்கள் இலக்கிய வாதிகள் வாழ்வின் பல்வேறு துறைகளைச் சார்ந்தவர்கள் எனப் பலரும் கவிஞரைப் பல்லாண்டு வாழ்கவென வாழ்த்தினர்.

இயக்குநர் கே. பாலசந்தர் 'அவர்கள்' திரைப்படத்தின் ஒரு பாடல் சூழ்நிலையை விளக்க எம்.எஸ். விஸ்வநாதன் இசையமைக்க, கவிஞரின் பாடல் உதயமானது.

அங்கும் இங்கும் பாதை உண்டு
எந்தப் பாதை உந்தன் பாதையோ
ஞாயிறு உண்டு திங்கள் உண்டு
எந்த நாள் உந்தன் நாளோ!

பிரபல பின்னணிப் பாடகர்கள் பங்கு பெற்ற இசை நிகழ்ச்சியும் அரங்கேறியது. இந்தப் பொன்விழா நிகழ்ச்சிகளைக் காணும் வாய்ப்பினைக் கவிஞர் இந்நூலாசிரியருக்கு அளித்திருந்தார்.

சென்னையைத் தொடர்ந்து மதுரையில் பொன்விழா நிகழ்ச்சிகள் நடைபெற்றன. காலை முதல் இரவு வரை அங்கு விழா நிகழ்ந்தது. கவிஞர் ஊர்வலமாக அழைத்து வரப்பட்டுக் கௌரவிக்கப் பட்டார். கவியரங்கம், கருத்தரங்கம், பட்டிமன்றம் என விழா அமர்க்களப் பட்டது. அன்று தான் 'ஸ்ரீ கிருஷ்ண அந்தாதி' நூல் வெளியிடப்பட்டது. இந்த விழாவில்தான் கவிஞர் அளவுக்கு உயரமுள்ள ஒரு வாழ்த்துப் பத்திரம் வாசித்தளிக்கப்பட்டது. அப்பத்திரம் இன்றும் அவர் வீட்டு முகப்பை அலங்கரிக்கிறது.

கோவையிலும் கவிஞரின் பொன்விழா வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. இவ்விழாவில்தான் 'கண்ணதாசன்' பொன்விழா மலர் வெளியிடப்பட்டது. காலாகாலத்திற்கும் போற்றிப் பாதுகாக்கும் ஓர் அரிய பொக்கிஷமாக இப்பொன்விழா மலர் அமைந்துள்ளது என்பது ஓர் உண்மையே.

### அரசியல் துறவு

1977ம் ஆண்டு நடந்த நாடாளுமன்றத் தேர்தலில் காங்கிரஸ் தோல்வியுற்ற பிறகு கண்ணதாசன் தீவிர அரசியிலிலிருந்து ஒதுங்கி வாழலானார். விரக்தியடைந்து மௌனம் பூண்டவராக அரசியல் துறவறம் மேற்கொண்டார்.

### அரசவைக் கவிஞர்

அபூர்வமான ஓர் அங்கீகாரம், 1978ம் ஆண்டு கண்ணதாசனைத் தேடி வந்தது. அவ்வருடம் எம்.ஜி.ஆரின் தலைமையிலான தமிழக அரசு கண்ணதாசனை அரசவைக் கவிஞராக நியமித்துக் கௌரவித்தது. இன்றும் கவிஞர் வாழ்ந்து வந்த வீட்டின் முகப்பில் கண்ணதாசன் - அரசவைக் கவிஞர் என்ற பெயர்ப்பலகையைக் காணலாம்.

### பரிசுகள் பட்டங்கள்

ஒவ்வொரு ஆண்டும் இந்திய அரசு சிறந்த திரைப்படங்களுக்கும் கலைஞர்களுக்கும் விருதுகள் வழங்கி கௌரவித்து வருவது அனைவரும் அறிந்ததே. கவிஞர் கண்ணதாசனுக்கு தேசிய ஒற்றுமையை வளர்க்கும் ஒரு பாடல் எழுதியமைக்காக 1969ம்

வருடத்திற்கான சிறந்த கவிஞர் பட்டமும் விருதும் வழங்கப்பட்டது. குழந்தைக்காக என்ற திரைப்படத்தில் மத ஒற்றுமையை வளர்க்கும் நிலையில் அவர் அமைத்திருந்த

'இராமன் என்பது கங்கைநதி'

என்ற பாடல்தான் அவருக்குப் பரிசினை பெற்றுத் தந்தது. ஆனால் விருது வாங்குவதற்காக தில்லிவரை சென்ற கவிஞரால் அப்பரிசினை நேரில் பெற முடியாமல் போய்விட்டது. தன்னையறியாமல் அவர் உறங்கிவிட்டதே அதற்குக் காரணம். ஆனால் கவிஞரின் தமையனார் ஏ.எல்.எஸ். அவர்கள் கவிஞருக்குப் பதிலாக அந்த விருதினை அன்று பெற்றுக் கொண்டார்.

*சாகித்திய அகாதமியின் பரிசு*

கல்கி இதழில் தொடர்கதையாகக் கவிஞர் எழுதிய வரலாற்று நாவல் சேரமான் காதலி 1980ம் ஆண்டிற்கான சாகித்திய அகாதமியின் 5000 ருபாய் பரிசினைப் பெற்றது. மக்களின் அமோக ஆதரவை பெற்ற நாவல் கவிஞருக்கு மட்டுமல்ல தமிழுக்கும் பெருமை தேடித்தந்தது. கவிஞருடைய கவிதைத் தொகுதிகளில் நான்காவது தொகுதி மிகவும் சிறந்ததாய் இருப்பினும் அவருடைய நாவல்தான் பரிசினை வென்றது. எந்தப் பொருளைப் பற்றியும் கவிஞரால் எழுத முடியும், பாட முடியும். அதற்குச் சான்று பகர்வன தான் அவருடைய படைப்புகள் எல்லாமே. கண்ணதாசனின் கவிதைகளுக்குப் பரிசு கிடைக்கவில்லை என்ற ஆதங்கம் இருப்பினும் பரிசு கிடைத்த சேரமான் காதலி நாவல் சிறந்த படைப்புதான் என்பதில் இரண்டு கருத்துகளுக்கு இடமில்லை.

இன்னும் ஒரு வசந்தம்

தன் வாழ்வில் மீண்டும் ஒரு வசந்தம் வரவேண்டுமென்று கண்ணதாசன் ஆசைப்பட்டார். பாரதியின் காணிநிலம் பாடலைப் படித்துவிட்டு அப்படியொரு தோட்டத்தை அமைத்துக் கொள்ள விரும்பினார். அந்த விருப்பம் நிறைவேறவில்லை. பணமில்லை என்பதல்ல காரணம். பணமிருந்தபோதும் நிலம் விலைக்கு வந்தபோதும் அவர் மனம் அதில் லயிக்காமல் இருந்ததால் கனவுகள் நனவாகாமல் போய்விட்டன.

தினமும் பணம் வந்து கொண்டேயிருக்கும்; மேடு பள்ளங்களில் ஏறினாலும் வாழ்க்கை சிரமமில்லாமல் முன்னே போய் கொண்டே யிருக்கும் என்று எண்ணியிருந்தார். பணம் குறையத் தொடங்கிய போதுதான் உலகம் புரியத் தொடங்கியது என்று கவிஞரே கூறியுள்ளார்.

கத்தைகத்தையாக நோட்டுகள் வந்தபோது ஆசைகள் மனதில் எழவில்லை. ஆனால் ஆசைகள் வந்தபோதோ காசில்லை. அவருடைய நியாயமான சில ஆசைகள்கூடப் பூர்த்தியாகவில்லை.

சுகமான சிந்தனைக்கான அவகாசத்தைப் பின்னாளில் கவிஞர் வேண்டத் தொடங்கினார். அப்போது தன்னைத் தானே எடை போட்டுக் கொண்டு கருத்துக்களும் கூறினார். உடல் நன்றாக இருந்தபோது மனம் நன்றாக இல்லை. மனம் நன்றாக இருந்த போது உடல் நன்றாக இல்லை என்று மன வேதனையை நம்முடன் பகிர்ந்து கொள்கிறார்.

ஐம்பது வயதிற்கு மேல் கவிஞரின் வாழ்வில் இன்பமும் துன்பமும் மாறிமாறி அலைமோதியது. குழந்தை உள்ளம் படைத்த இந்த மனிதர் ஒளிவு மறைவில்லாமல் எதையும் பேசியவர். ஆயிரம் வசனங்களில் சொல்லித் தீர்க்க முடியாத தத்துவங்களையும் அரைமணி நேரம் நடித்துக் காட்ட முடியாத உணர்ச்சிகளையும் ஒரு கவிதையின் ஓர் அடியில் சொல்லத் தெரிந்தவர்.

### அங்கீகாரம்

ஆனால், தமிழிலக்கிய கவிதை உலகில் அவருக்கென ஒரு தனி இடம் உண்டு என்பதனை மனப்பூர்வமாக, மறைக்கவும் மறுக்கவும் சிலர் செய்தனர். இப்பட்டியலில் இலக்கிய கர்த்தாக்களும் தமிழாசிரியர்களும் உட்படுவர். தமிழ்மொழி தெரிந்த அனைவருக்கும் அறிமுகமாகியிருக்கும் கவிஞரின் படைப்புக்களைப் பற்றிப் பேசாமலிருந்து விட்டால் அவர் புகழ் வெளியே தெரியாது, பெருமை வெளியே பரவாது என்று தப்புக் கணக்குப் போட்டுவிட்டனர். ஆனால் காலம் அவருக்குச் சரியான ஓரிடத்தைத்தான் கொடுத்துள்ளது.

### மன அமைதி

கண்ணதாசன் தன் பழைய நினைவுகளில் மூழ்கி அனுபவ முத்துக்களை நம் முன் கடை பரப்பியுள்ளார். இறைவன் தனக்கு இன்னுமோர் இளமையைத் தர வேண்டுமென ஆசைப்பட்டார். பயனற்ற வேலைகளில் ஆசையோடும் வேகத்தோடும் ஈடுபட்டுப் பொழுதைச் செலவழித்ததற்காக வருந்தவும் செய்தார். சம்பாதிக்கத் தெரிந்தும் பத்திரப்படுத்தத் தெரியாததால் பல நேரங்களிலும் கண்ணீரைத் தன் பெட்டியில் எண்ணி வைக்க வேண்டியதாயிற்று என்று வேதனையோடு கூறியுள்ளார். விரக்தியின் உச்சியில் தன்னிடம் கங்கையின் புனிதமும் வைகையின் வரண்ட தன்மையும் இருந்தன எனும் கவிஞர் உலகத்தில் எதுவுமே பெரியதல்ல என்றும் பேசியுள்ளார். ஆனால் முறையாகச் சிந்திக்காமல், செயல்படாமல், சேமிக்காமல், வாழாமல் இருந்ததால் ஏற்பட்ட பிரச்சனைகளும் சிக்கல்களும் நட்டங்களும் ஏராளம். அதே சமயம் மகிழ்ச்சிக்குக் குறைவில்லா நிலையில் வாழ்வும் அமைந்திருந்தது. இந்த இரண்டிற்குமிடையில் சிக்கிக் கொண்டு தன்வாழ்நாளை ஓட்டிப்போன கண்ணதாசன், இறுதியில் மன அமைதி கிடைக்குமிடம் பக்தி மார்க்கத்தில்தான் என்று உணர்ந்து கொண்டதாகவும் கூறியுள்ளார்.

தமிழ்மொழியின் ஆற்றலால் மக்கள் மனதைக் கவர்ந்த கண்ணதாசன் 1981ம் ஆண்டு அக்டோபர் மாதம் 17ம் நாள் அமெரிக்காவில் வைத்து அமரரானார்.

---

# 2

# ஆளுமை

கவிஞர் முதலில் ஒரு மனிதர். பிறகு ஓர் இலக்கியவாதி. மனிதர் என்ற முறையில் வாழ்வைப் பற்றிய சில கனவுகளும் இலட்சியங்களும் அவருக்கு இருந்தன. இந்தக் கனவுகளும் இலட்சியங்களும், மனிதனும் மானுடமும் மேம்பாடடைய வேண்டுமென்ற தீவிரமான எண்ணத்தை அவர் மனதில் ஏற்படுத்தின.

ஒவ்வொரு மனிதனுக்கும் தனித்தன்மை உண்டு. இந்தத் தனித்தன்மை அம்மனிதனுடைய நடை, உடை பேச்சு, பாவனை, பழக்க வழக்கங்களில் பளிச்சிடும். தனி மனித ஒழுக்கங்களுக்கும் சமுதாய ஒழுக்கங்களுக்கும் கட்டுப்பாடுகளுக்கும் உட்பட்டே இத்தனித் தன்மை இயங்கும். இந்நிலையில், பிரச்சனைகள் வரும்போது சிலர் இயலாமையினால் சும்மா இருந்து விடுவர். வேறு சிலர் அநியாயத்தை தைரியமாகத் தட்டிக் கேட்பர். அதற்கென ஆட்களையும் திரட்டுவர். இப்படிப்பட்ட குணாதிசயங்கள் ஒரு கவிஞனின் மனதில் உதித்தாலோ? அவன் கையிலுள்ள பேனா நாட்டியமாடும். வாளை விடக் கூர்மையாகப் பேசும். நபர்களைப் பொருட்படுத்தாது. நியாயத்தின் பக்கம் மட்டுமே நிற்கும். அதற்கென ஆதாரங்களை திரட்டும். எல்லாவற்றையும் மக்கள் முன் வைக்கவும் செய்யும். இப்படிச் செயல்பட்டவர் தான் கவிஞர் கண்ணதாசன்.

அவர் கொண்டிருந்த கனவுகளும் இலட்சியங்களும் வாழ்வினோடும் மக்கள் நலனோடும் தொடர்புள்ளவையாய் இருந்தன. வாழ்வைக் கண்டு அஞ்சியும், நொந்தும் போய் மூலையில் தனியாக ஒதுங்கி வாழ்வதோடு கவிஞருக்கு உடன்பாடில்லை. வாய் திறந்து உரிமைகளைக் கேட்க முடியாத மக்களுக்காகத் தான் வாதாட வேண்டியது அவசியமென்பதை அவர் உணர்ந்திருந்தார். நிலை தாழ்ந்து இருக்கும் மக்களை மேம்பாடடையச் செய்ய வேண்டியது தன் கடமையென்றும் புரிந்து கொண்டார். தனி மனிதனின் வாழ்வில் மறுமலர்ச்சி ஏற்பட்டால் தான் சமுதாயமும் மறுமலர்ச்சி காணும் என்று திடமாக நம்பிய மறுமலர்ச்சிக் கவிஞர்களுள் கண்ணதாசனும் ஒருவர். இந்தக் கவிஞர்களின் அடிமன ஓட்டங்கள் அவர்களுடைய படைப்புகளில் தனித் தன்மையுள்ள பார்வையாக பரிணமிக்கும். இந்தப்

பார்வையில் கவிஞர்கள் ஒரு புதிய மரபை தோற்றுவிப்பர். உணர்ச்சிப் பிழம்பான இவர்கள் சமுதாய உணர்வுமுள்ளவர்கள். கடந்த காலத்தையும் நிகழ்காலத்தையும் இணைக்கும் பாலங்கள். மக்கள் மனங்களில் ஏற்படும் மாற்றம் சமூகத்தின் ஒட்டு மொத்தமான மாற்றத்திற்கும் வழிகோலும் என்ற எண்ணம் உடையவர்கள். தங்களுக்குப் பிடித்தவற்றைப் பாராட்டும் போதும் பிடிக்காதவற்றை எதிர்க்கும் போதும் இவர்கள் சமநிலை தவறும்.

நியாயத்தின் பக்கம் நின்று அதற்கு ஆதாரங்களைத் திரட்டி அவற்றை மக்கள் முன் வைக்கும் போது ஒரு கவிஞனுடைய பார்வையின் பொதுத் தன்மையை நம்மால் உணர முடியும். அந்தப் பொதுத் தன்மை நமக்கு உணர்த்தும் கவிஞனின் பார்வையே அவனுடைய ஆளுமை.

## இலக்கியத்தில் ஆளுமை

இலக்கியத்தில் ஆளுமை என்பது மிகவும் முக்கியமான ஓர் அம்சம். ஆளுமை உடைய எழுத்தாளர்களால் தான் இலக்கியம் வளர்ச்சி பெற்றுக் கொண்டே இருக்கிறது. கண்ணதாசனின் தனித் தன்மை அவர் படைத்த இலக்கியங்களில் நன்கு பளிச்சிட்டுள்ளன. இந்த மறுமலர்ச்சிக் கவிஞர் பிரச்சனைகளை அடையாளம் காட்டியதுடன் அவற்றிற்குத் தீர்வுகளும் கூறியுள்ளார்.

கண்ணதாசனுக்கு வாழ்வு பற்றித் தெளிவான ஒரு சிந்தனை இருந்தது. மனித வாழ்வில் எந்த் முடிவும் பரிசீலனைக்குரியதே - ஜனனத்தையும் மரணத்தையும் தவிர என்பது அவர் எண்ணம். அதனால், தான் வாழ்ந்த வாழ்வினையும் தன்னைச் சுற்றி வாழ்ந்த மனிதர்களைப் பற்றியும், சமூகத்தின் நிலையினைக் குறித்தும் மிகவும் தெளிவுடனும் அழுத்தத்தடனும் பாடியுள்ளார். மனித நேயம், பிறர் நலம், உயர்வு, இன்பம் இவற்றிற்காக குரல் கொடுத்த கண்ணதாசனைக் காண்கிறோம்.

எல்லோரும் எல்லாமும் பெற வேண்டும் - இங்கு
இல்லாமை இல்லாத நிலை வேண்டும்.

என்று பாடிய கவிஞரால் ஏழைகளின் துன்பத்தைப் பார்த்துக் கொண்டு சும்மா இருக்க முடியவில்லை. மக்களின் தேவைகளை நிறைவேற்றப் பாடுபடுவதாகவே பலரும் கூறுகின்றனர். ஆனால் உண்மையில் மக்களின் தேவைகள் நிறைவேறுகின்றனவா? பசி அடங்கி விடுகிறதா? நிலை உயர்கிறதா? என்று பார்ப்போமானால் இல்லை என்பது நன்கு தெரிகிறது. அவர்களுக்காகப் பரிந்து பேசவும் ஆரம்பிக்கிறார். தர்க்கம் தொடங்கி வைக்கப்படுகிறது. விவாத மேடையில் வார்த்தைப் பந்தல்கள் தீயாக வந்து விழுகின்றன.

'நெருப்பின் மக்களே' என்ற கவிதையில் சம நீதிக்குப் போர்ப்படை சேர்க்கக் குரல் கொடுக்கிறார் கண்ணதாசன்.

கூடிக் கலைகின்ற நாடக மேடையின்
கோஷத்தை நம்பிய ஏழை - வெறும்
கூட்டத்தை நம்பிய கோழை - எட்டு
மாடிமனிதரின் மஞ்சத்தில் ஆடிடும்
மந்திரி மார்களை நம்பி - இன்னும்
வாழ்ந்து பொருளென்ன தம்பி?

என்று ஆவேசமாகக் கேட்டுள்ளார். மேடைப் பேச்சுக்கள் எல்லாம் வெறும் நாடகம் தான். அப்பேச்சையும் சேரும் கூட்டத்தையும் நம்பி ஏமாந்து விடாதீர்கள் என்று கண்ணதாசன் மக்களை எச்சரித்துள்ளார். அவர்கள் நிலையை அவர்கள் உணர்ந்து கொள்ளும் முகமாகவே கவிஞர் விவரிக்கிறார்.

பாதைப் படுக்கைக்கும் பைப்புத்தண் ணீருக்கும்
போதைப் பொருளுக்கு மாக - இந்த
பூமிக் குடையவர் சாக - உயர்
காதல், கலை, கல்வி, செல்வங்கள் யாவையும்
காரியக் காரர்கள் ஆள - நாம்
கண்டது தான் கதை நீள!

அதனால் நெஞ்சை நிமிர்த்துங்கள் தோழர்களே என்று ஆவேசங் கொண்டு கட்டளையிடுகிறார். நேருக்கு நேர் நின்று பிரச்சனைகளை எதிர்கொள்வோம். வெற்றி கொள்வோம் என்று அறை கூவல் விடுக்கிறார்.

சும்மா இருப்பவன் சோம்பேறி அவனிடம்
சொர்க்கத்துக் கென்ன வேலை?
சுடுகின்ற கோடையில் வளைகின்ற ஏழையால்
அமைந்ததே இன்பச் சோலை?

எனும் கண்ணதாசன் துணிச்சலுடன் செயலாற்றும் படி வேண்டுகோள் விடுக்கிறார்.

அம்மையும் அப்பனும் செய்ததோர் தவறினால்
அவினியில் வந்த மனமே!

நம்மால் முடியுமா என்று எண்ணினால் நடுக்கமே மிஞ்சும் என்று எச்சரிக்கவும் செய்கிறார்.

இலட்சியப் பயணம்

மேலெழுந்த வாரியாகப் பார்க்கும் போது கண்ணதாசன் வாழ்வில் குறிக்கோள் இல்லாமலிருந்தது என்றே தோன்றும். ஆனால், ஆழ்ந்து பார்ப்போமானால் அடிப்படையான சில இலட்சியங்களை நோக்கித் தான் பயணித்தார் என்றும் ஒரே குறிக்கோளை நோக்கித்தான் பயணம் அமைந்திருந்தது என்பதையும் புரிந்து கொள்ளலாம்.

ஆரம்ப காலத்தில் ஆவேசமாகப் பாடினார். மக்களுடைய தேவைகள் பூர்த்தி செய்யப்பட வேண்டும் என்பதில் மிகவும் நாட்டம் கொண்டிருந்தார். அதனால் தான்

எல்லோர்க்கும் எல்லாமும் கிடைக்க வேண்டும்
இல்லையெனில் இந்நாடு அழிய வேண்டும்.

என்று பாடினார். இவர் அரசியல் கட்சிகளை மாற்றிக் கொண்டார் என்றொரு குற்றச்சாட்டும் அதனால் தன் குறிக்கோளை இழந்தவர் என்றும் கூறப்படுவதுண்டு. ஆனால், உண்மை அதுவல்ல. அரசியல் கட்சிகள் மக்களுக்கு நன்மை செய்யுமென்று நம்பி, அவற்றில் சேர்ந்தார். அந்த அரசியல் கட்சிகள் சில மாற்றங்களை உட்கொண்ட போது அவை மக்களுக்கு நன்மை செய்யும் பாதையிலிருந்து வழுவிப் போகின்றன என்று கண்ணதாசன் நினைத்தார். அதனால் அரசியல் கட்சிகளிலும் தலைவர்களிலும் நம்பிக்கை இழந்தவராய் மாறினார். அவர் மனம் சீக்கிரமே மக்கள் நன்மைகளைப் பெற வேண்டுமென்று துடித்தது. ஆனால் ஓர் அமைப்புக்குள் நின்று கொண்டு செயல்படும் போது சில நேரங்களில் எதிர்பார்த்ததை விட வேகமாகச் செயல்பட முடியும். சில சமயங்களில் அவை நடக்காமலும் போகக் கூடும். இவ்விரு நிலைகளிலுமே கண்ணதாசன் மனம் சம நிலை தவறியதைப் பார்க்கிறோம்.

கவிஞன் யானோர் காலக் கணிதம்

எனும் கண்ணதாசன்

இவைசரி யென்றால் இயம்புவதென் தொழில்
இவைதவ றாயின் எதிர்ப்பதென் வேலை!

என்று திட்டவட்டமாகத் தெரிவித்துள்ளார். எக்காரணத்தினாலும்,

செல்வந்தர் கையிற் சிறைப்பட மாட்டேன்
பதவி வாளுக்கும் பயப்பட மாட்டேன்!

என்று அழுத்தந்திருத்தமாகவும் பாடியுள்ளார். அதனால் தான் இறுமாப்புடன் பாடினார்.

நானே தொடக்கம்; நானே முடிவு!
நானுரைப் பதுதான் நாட்டின் சட்டம்!

என்று பாடியதன் உள் நோக்கத்தையும் சிக்கலில்லாமல் புரிய வைக்கிறார்.

ஆக்கல் அளித்தல் அழித்தல் இம் மூன்றும்
அவனும் யானுமே அறிந்தவை;

என்பதால் தன் மனதை பின்னும் திறந்து காட்டுகிறார். எண்ணத்தில் மாற்றம் வரும் போது சிந்தனைக்கு மாற்றம் வரும். சிந்தனைக்கு மாற்றம் வரும் போது செயல்பாட்டிலும் மாற்றம் வரும். அதனால் தான்.

மாற்றம் எனது மானிடத் தத்துவம்;
மாறும் உலகின் மகத்துவம் அறிவேன்;
எவ்வெவை தீமை எவ்வெவை நன்மை
என்ப தறிந்து ஏகுமென் சாலை!

என்று திட்டவட்டமாகக் கூறியுள்ளார். இந்தப் பயணத்தினால் வரும் மாற்றங்களையும் தெளிவாகச் சுட்டுகிறார். தலைவர்கள் நல்லவர்களாக மட்டும் இருந்தால் போதாது. திறமையானவர்களாவும் செயல் வீரர்களாகவும் இருக்க வேண்டும். எனவே தான் பயணத்தின் பாதையில்

தலைவர் மாறுவர்; தர்பார் மாறும்;
தத்துவம் மட்டுமே அட்சய பாத்திரம்

என்று விளக்கினார் கவிஞர். அடிப்படைத் தத்துவமான மக்கள் நலன் என்பது நிலையானது தான்; ஆனால் அதை அடையும் வழியில் மாற்றங்களை மேற்கொள்ளும் போது தலைவரும் தர்பாரும் மாறுமென வெளிப்படையாகப் பேசியுள்ளார் கவிஞர். கொண்ட கொள்கையில் இலட்சியத்தில் வெற்றி காண வேண்டுமென்ற ஆவேசம் தான் கண்ணதாசனிடமிருந்தது.

### அமைதியைத் தேடிய மனம்

கவிஞன் தன் படைப்புக்களில் தன்னை எங்கேனும் ஓரிடத்தில் வெளிப்படுத்தியே தீருவான். அடி மனதில் ஓடும் பண்பு நலன்கள் கவிஞன் அறியாமலேயே வெளிப்பட்டு விடும். தன் மேல் தானே தன்னிரக்கம் கொள்கிறார் கவிஞர்.

குருவின்றி வித்தையைக் கற்றவன் நெஞ்சிலே
குடிகொள்ள அமைதி யிலையே

என்று வேதனையுடன் பாடும் கவிஞர், யாரையும் காத்திருக்க வைக்காமல் இருப்பதைத் தந்தாலும் அவர்களிடமெல்லாம் நன்றியில்லையே என்றும் பொருமுகிறார். இரண்டு கண்கள் இரண்டு

காட்சிகளைக் காணமுடியுமா என்று பாடிய கவிஞர் இடது கண் ஒரு சொல்லையும் வலது கண் ஒரு சொல்லையும் எடுத்துரைக்கின்ற உலகில் என்னையும் படைத்து விட்டாயே என்று மனம் நொந்து பாடியுள்ளார்.

பொருள் வந்து சேர்ந்த போது அதைச் சேர்த்து வைக்கும் திறமை இல்லாமல் போய் விட்டதே என்று வருந்தும் கவிஞர்,

ஜெயிக்கின்ற கட்சியில் நுழைகின்ற வித்தையைத்
தேருமோர் அறிவு மிலையே
பேர் வந்த வேளையிற் பேரையே விலையாகப்
பேசவுந் தெரிய விலையே

என்று ஒரு குழந்தை மனத்துடன் பாடியுள்ளார்.

நாக்கினால் ஊரையே திரட்டுபவனின் நாக்குக்கும் நாடகக்காரனின் வேடத்தில் நின்று அவன் நடிப்புக்கும் வெற்றி தந்து தூயவர் வாழ்க்கையில் தோல்வி மேல் தோல்வியைத் தொடுத்து வைக்கும் கலையே,

'வாக்கிலாச் செல்வமே! மனமிலாத் தெய்வமே!

என்று மதுரை மீனாட்சி உமையை விளித்துத் தன் ஆற்றாமையை வெளிப்படுத்துகிறார்.

செம்பில் சிலை செய்பவன் அதில் சிறிது கொள்வான். செம் பொன்னில் நகை செய்பவனும் சேதாரம் கொள்வான். பணக்காரர்கள் ஏழையின் உழைப்பில் சிறிது கொள்வர். தர்மகர்த்தாக்களும் தர்ம காரியங்களிலே தங்கள் காரியங்களைப் பார்ப்பர். ஆனால் வைப்புயர் நிலத்திலும் வளரவே தெரியாத மரமாய் என்னையும் படைத்து விட்டாயே என்றும் துயரப்பட்டிருக்கிறார்.

கூட்டிக் கழித்துப் பார்த்து பொருள் வளர்க்கும் நாட்டுக் கோட்டை மரபில் பிறந்த போதும் கவிஞரின் கணக்குகள் எல்லாம் தவறாயின. அதற்கான காரணத்தையும் அவரே கவிதையில் வடித்துள்ளார்.

கூட்டுகின்ற
நேரத்தில்
கழிப்பேன்; குறையென்று
கழிக்கின்ற நண்பர்களைக்
கூட்டுவேன்,.....
.....ஏதேதோ
பெரும்பெரியத் திட்டங்கள்
வகுப்பேன்; வகுத்த தெலாம்

வடிகட்டிப் பார்த்த பின்பு
சிரிப்பேன்; அடடாநான்
தெய்வத்தின் கைப்பொம்மை.

என்று தனக்குத்தானே அமைதியும் கொள்கிறார்.

## இரண்டு மனம் வேண்டும்

கவிஞர் தன் வாழ்வில் ஏராளமான அனுபவங்களைச் சேகரித்தவர். அவற்றை எல்லாம் நம் முன் கடை பரப்பி நம் அனுதாபத்தையும் பெற்று விடுகிறார். கள்ளங் கபடமில்லாமல் எதையும் ஒளித்து வைக்காமல் பேசியுள்ளார் என்பது தான் அதன் சிறப்பம்சம். இன்பமும் துன்பமும் இரவும் பகலும் போல் மாறி மாறி வரும். அதனால் தான்

இரண்டு மனம் வேண்டும்
இறைவனிடம் கேட்பேன்
நினைத்து வாட ஒன்று
மறந்து வாழ ஒன்று

என்று பாடினார்.

## கவிஞரின் ராஜாங்கம்

தான் அமைத்த ராஜாங்கத்தினைப் பற்றிக் கவிஞர் இங்ஙனம் பாடுகிறார்.

ஆமாம்; நாமோர் அரசினை அமைத்தோம்
நாமதன் தலைவர்; நாமே தளபதி;
நாமதன் குடிமகன்; நாமே அனைத்தும்;
வரிகேட் போனும் வரிகொடுப் போனும்
நாமே யாதலால் நமக்கெது கவலை?

எனும் கவிஞர் கூறுகிறார் - அல்லும் பகலும் அழகிய பெண்கள் சொல்லும் கதையே சுவையான அரசியல் என்கிறார். கோப்பை மதுவில் குதித்து நீராடுவோம்; பாவையின் இதழ்களில் கொடுத்து வாங்குவோம்; வெள்ளைக் காகிதங்களில் மனித உள்ளங்களை ஒத்தி எடுப்போம் நாளைய உலகை நாளை அளப்போம்; இன்று இன்பமாய்ப் பொழுதைக் கழித்திடுவோம் என்று பாடியுள்ளார்.

## மன வீணையின் வேதனைகள்

கவிஞரின் மனம் அடுத்த நிமிடமே நினைக்கத் தெரிந்த மனமே உனக்கு மறக்கத் தெரியாதா என்று வேதனையை பட்டியலிடுகிறது.

மனதுள் துன்பங்கள் ஏராளம் ஏராளம். கவலைகளோ தாராளம் தாராளம். இவற்றிற்கெல்லாம் யார் காரணமாம்? நம்பிய நண்பர்கள் நயவஞ்சகர்களாய் மாறினர். கொஞ்சம் ஏற்பட்ட கடனை அடைப்பதற்காகத் திரைப்படத் தயாரிப்பில் இறங்கி நட்டப்பட்டார். தனக்குத் தானே பின்னாளில் ஏற்படுத்திக் கொண்ட தேச பக்தியினால் பெரும் பொருளையும் செலவழித்தார். இந்த வேதனைகளினால் மனம் வெந்து நீரானது. அவ்வேளையில் கவிஞர் பாடுகிறார்.

பட்டகடன் தீர்ப்பேனா,
பாதகரைப் பார்ப்பேனா?
கொட்டுகின்ற தேளையெல்லாம்
கும்பிட்டு நிற்பேனா?
கொல்லுகின்ற சூழ்நிலையைக்
குடித்து மறப்பேனா?

என்று அப்பாவியாய் கேட்பவர் உடனே தன்னிலை விளக்கமாத மீண்டும் பாடுகிறார்.

சொல்லி அழுதுவிட்டால்
துயரமெல்லாம் தீர்ந்துவிடும்!
சொல்லவொரு நண்பரில்லை!
சொல்வதற்கும் வார்த்தையில்லை!

என்பவர் தன்னுடைய துயரில் பாதியை ஏற்றுக் கொள்ள உயர்வான ஒரு தோழியை சொந்தமாய் தருவாயோ என்று கண்ணனிடம் கேட்கிறார்.

நூறு வயதாகும் வரை ஓடி விளையாட நோயிலா ஒரு மேனியும் அருமையான ஒரு நூல் படைக்கும் உடல் வலுவும் ஆயிரம் நிலங்களில் ஆடிப் பாடி மகிழ்ந்திடும் வசதியும் தனக்கு வாய்த்திட வேண்டுமெனவும் கவிஞர் விரும்பினார்.

**ஜீவாத்மாவின் ஆசைகள்:**

பாரதியின் காணி நிலம் வேண்டும் பராசக்தி கவிதை கவிஞரிலும் பாதிப்பை ஏற்படுத்தியுள்ளது. அதன் எதிரொலியாகவே ஜீவாத்மாவின் ஆசைகளை அவர் அடுக்கியுள்ளார்.

அழகான சிறிய வீடு
அடுக்காகப் புத்தகங்கள்
பழங்கால ஓவி யங்கள்
பஞ்சணை குளிர்ந்த காற்று

*தொழுத்தக்க இளைய கன்னி*
*தொண்டுக்கோர் சிறிய பையன்*
*எழிலான காகி தங்கள்*
*எழுது கோல் பழுதில் லாமல்!*

இவ்வளவு மட்டும் போதுமா? கவிஞராயிற்றே! ஆசைதொடர்கிறது. பெண்ணின் மார்பில் சாய்ந்து மந்திரம் போட்டாற் போல் மயங்கிக் கிடந்து ஆனந்தம் தொடர வேண்டுமென விரும்பினார். வளமான கோப்பையை ஏந்தி வறுமையில்லாமல் நீந்திடவும் விழைந்தார். வந்த போது ஒன்றும் கொண்டு வந்ததில்லை. திரும்பப் போகும் போதும் ஒன்றும் கொண்டு போகப் போவதுமில்லை. அதனால் தடைகளின்றி அனைத்தையும் அனுபவித்து வாழ்ந்திடுவோமே என்று கவிஞர் குதூகலித்துள்ளார்.

*ஊசியின் ரகசியம்*

தான் நினைத்த படி எல்லாம் வாழ முடியவில்லை என்ற போதும், மகிழ்ச்சியும் சோகமும் அவர் வாழ்வில் மாறி மாறி வந்து கொண்டிருந்தன. ஆனால் தன்னைச் சுற்றியிருந்தவர்கள் சத்தியத்தையும் தருமத்தையும் மறந்து, வித்தைகள் காட்டி, வேதனைகளை வளர்க்கும் நிலையைப் பார்த்து மனம் நொந்து பெத்தடின் ஊசி போட்டுக் கொண்டதாகக் கூறியுள்ளார். சந்திப்பவர்கள் எல்லாம் நிந்திக்கிறார்கள். தலையையே தின்கிறார்கள் என்பதல்லாமல் வணங்கி வாழ்த்துச் சொல்ல வழியில் யாருமில்லை என்று வருந்தியுள்ளார்.

அதனால் மதுப்பழக்கத்துடன் இந்தப் புதுப்பழக்கத்தையும் ஏற்படுத்திக் கொண்டார். செல்லும் இடங்களுக்கெல்லாம் இந்த மருந்தையும் பொக்கிஷம் போல் எடுத்துச் சென்றார். குறிப்பிட்ட நேரமானதும் மருந்து கிடைக்க வில்லையெனில் கோபம் தலைக்கேறி விடும். அது கிடைத்தவுடன் மனம் குழந்தை போலாகி விடும்.

ஒரு முறை திருவனந்தபுரத்திற்கு ஒரு திரைப்பட வேலை தொடர்பாகச் சென்றிருந்தார். வசனம் பாடல்கள் கவிஞருடையது. வேலை செய்து கொண்டிருந்த போதே மருந்தைத் தேடிய போது தான் தயாரிப்பாளருக்கு இது தெரிய வந்தது. பதை பதைத்துப் போனவர் இறைவன் அருளால் இப் பழக்கம் மாறுமென்றும் கருத்துக் கூறினார். அவர் கூற்றுப் பலிக்கவும் செய்தது.

மனிதனுக்கு எண்ணங்களை வைத்ததில் ஆச்சரியமில்லை. ஆனால் அந்த எண்ணங்களினாலே அவன் வெந்து போகிறான் என்ற கவிஞரின் கூற்று அவருக்கும் பொருந்தக் கூடியது தான். இதனால் மனிதன் வாழும் போது சில கட்டுப்பாடுகளை மேற்கொள்ள வேண்டுமெனக் கவிஞர் அறிவுறுத்துகிறார். மிகவும் சுதந்திரமாகப்

பேசவும் பழகவும் செய்தால் பகை வரலாம். அதனால் சிலவேளைகளிலாவது ஊமையாகவும் செவிடாகவும் குருடாகவும் இருக்கப் பழகிக் கொண்டால் மனிதனாய் வாழலாமென்கிறார்.

மன அமைதி

கற்பனை உலகின் கரைகளைக் கண்டு காலமெனும் கடலைக் கடக்கும் தோணியாக விளங்கிய கவிஞருக்கு மனதில் அமைதியில்லையே என்ற ஏக்கமிருந்தது.

மனிதஜா தியில்நான் மகத்தான தத்துவம்
ஆயினும் என்ன மானிடரே!
அமைதியைத் தேடி அலைகின்றேன்.

என்று கலங்கியவர் இமயம் முதல் குமரி வரை தன் பெயர் தெரிந்த போதும் அமெரிக்க வானம் தன் அருமையைப் பாடிய போதும் அமைதி இல்லையே என ஏங்கினார். தாயார் பெற்றுத் தாலாட்டி சம்சாரத்தின் கையில் தந்து போய் விட்டார். நோயார் உடம்பில் புகுந்து கொண்ட போது தான் தன்னையே உணர்ந்து கொண்டார். மாயனை நினைத்து இப்போது மயங்குகிறேன் என்றவர் அவன் முடியில் மணியாக நின்று காலத்திற்கும் கவிபாட வேண்டுமென்றும் ஆசைப்பட்டார். மன அமைதியை இழக்கும் போதெல்லாம் இங்ஙனம் பாடும் அவர் மனம் அதனை மீண்டெடுத்து எதிர் நீச்சல் போடவும் உடனே தயாராகிறது.

கட்டிலிற் கிடந்த பெண்ணைக் காவியங்க
ளாக்கினேன்
கட்டளைக் கிணங்கி வண்ணக் கைகளில்
ஒடுங்கினேன்
பட்டஇன்பம் பார்த்த இன்பம் பத்துநூறு ஆயிரம்
கொட்டுகின்ற ஆசை இன்னும் கோடிகோடி கோடியே!

என்று காதல் ஆசையையும் வெளியிடுகிறார்.

பாவ மன்னிப்பு

பிறர் தன்னை எங்ஙனம் காண்பர் என்பதனைக் கவிஞர் நன்கு தெரிந்து வைத்திருந்தார். அதனை 'பாவ மன்னிப்பு' என்ற கவிதையினூடே வெளியிடுகிறார். அதுவும் நூதனமான முறையில். நால்வர் பரமபிதாவிடம் மன்னிப்புக் கேட்கிறார்கள். முதலில் கணிகை பேசுகிறாள். கற்பெனும் கனிதம் மறந்தேன்; செல்வத்தின் மேல் ஆசை கொண்டதால் பஞ்சணையில் அதிகம் பேரைச் சுவைத்தேன். காவல் காக்க வேண்டிய பெண்மையினைக் கொட்டித் தந்த பாவம் ஒன்றே

செய்தேன். பரமபிதாவே மன்னிப்பீர் என்கிறாள். அடுத்தது, பொன்னையும் பொருளையும் கொள்ளை யடித்த திருடன் மன்னிப்புக் கேட்கிறான். மூன்றாமவன் ஆத்திரத்தில் மனைவியைக் கொலை செய்தவன். செய்தது பாவம் தான் என்றாலும் மன்னித்தருள்வீர் என்று அவனும் முறையிட்டுக் கொள்கிறான். அடுத்தது அரசியல் வாதி வருகிறான். இங்கு தன்னையே முன்னிலைப்படுத்திக் கவிஞர் பாடுகிறார்.

> *பதவிக்காக இடம் மாறி*
> *பலரைச் சேர்ந்த 'கணிகை' நான்*
> *உதவி செய்ய பணம் வாங்கி*
> *உலகை ஏய்த்த 'திருடன்' நான்*
> *மதியால் ஏழை மக்களையே*
> *மாய்த்துச் சென்ற 'கொலைஞன்' நான்*
> *அதிகம் உண்டு பாவங்கள்*
> *அன்புச் சுடரே மன்னிப்பீர்!*

என்று பாவமன்னிப்புக் கேட்கிறார்.

*சுய சிந்தனையாளர்*

ஒரு கவிஞனின் ஆளுமை இன்னும் பலவகைகளில் வெளிப்படும். அதில் மிகவும் முக்கியமான ஒரு தன்மைதான் சுயசிந்தனையாளராகக் காட்சியளிப்பது. தம்மைச் சுற்றி இடம்பெறும் நிகழ்ச்சிகள் பற்றிய கருத்துக்களைக் கவிஞர்கள் தெரிவிப்பர். மாறுதல்கள் சமூகத்தில் இடம் பெறும் போது அங்கும் கவிஞர்களின் கருத்துக்கள் அரங்கேறும். அவை ஏதோ ஒரு இலக்கிய வகையில் வெளிப்படும். அப்படிப்பட்ட ஒரு சூழ்நிலையில் கவிஞர் பாடியுள்ள பொருளைப் பார்ப்போம்.

பாரத நாட்டின் வீர சுதந்திரம் விளைத்த பயிர்களை அடுக்குகிறார் கவிஞர். உழைக்கும் மனநிலை இல்லாத மக்கள் மேல் கோபங் கொள்கிறார். சும்மா உட்கார்ந்து விமர்சனம் செய்யும் போக்கைக் கண்டிக்கிறார். குற்றம் மக்கள் மனத்திலின்றி வேறெங்கும் இல்லையென்று குற்றஞ்சாட்டுகிறார். நாட்டில் வறுமை மாறாமல் இருக்கும் நிலையில் உரிமைகளைப் பேசிப் பேசியே காலங்கழிப்பதைக் கண்டு மனம் பொருமுகிறார். நாட்டு மக்கள் நலம்பெற உழைக்க வேண்டுமென்கிறார். சுதந்திரம் வறுமையைத் தந்தது என்பவர்களுக்குத் தன் கவிதையால் சாட்டையடி கொடுக்கிறார். உள் வீட்டுக்குள்ளே உலக நியாயம் பேசிக் கிடந்தால், கள்ள வாணிகமும், கடத்தலும் பதுக்கலும் செய்து வந்தால் கவலை

பெருகத்தான் செய்யுமென்று அதிரடி வைத்தியத்தை சிபாரிசு செய்துள்ளார். ஜனநாயகம் பலனளிக்கவில்லை யென்றால் மக்களைக் கட்டாயப்படுத்துவோம் என்கிறார்.

## நினைவில் நீங்கா நிகழ்ச்சிகள்

சமகாலத்து நிகழ்ச்சிகளைக் கருத்தூன்றிக் கவனித்த கவிஞர் வங்கதேசம் விடுதலை காணத்துடித்துக் கொண்டிருந்த வேளையில் பாடுகிறார்.

கங்கைநதி பாய்கின்ற வங்கதேசம்
கண்ணீராம் நதியிலே நீந்துதம்மா
செங்குருதி ஆறாகப் பாயுதம்மா
ஜீவனுக்கே விலையின்றிப் போனதம்மா

என்று அந்நாட்டின் நிலையைப் பற்றிப் பேசியுள்ளார். திமிர் கொண்ட இராணுவத்தை எதிர்க்கச் சிங்கமெனத் துடித்தெழுந்த முஜிபுர் ரஹ்மானை பாரதந்தான் காக்க வேண்டுமென்றும் வங்க தேசத்தில் விடுதலை மலர வேண்டுமெனவும் மனதார விழைந்து

வங்க தேசமே வாழிய நீயே
மலரும் விடுதலை காண்பாய் தாயே

என்று பாடி, தன் தீர்க்க தரிசனத்தை மெய்ப்பித்துக் கொண்டவர் கவிஞர்.

மக்களாட்சியைச் சற்றே நிறுத்தி வைக்க வேண்டுமென்ற எண்ணம் கொண்டிருந்த கண்ணதாசன், 1975 ஆம் ஆண்டு இந்தியாவில் நெருக்கடி நிலை அமுல்படுத்தப்பட்ட போது அதனை வரவேற்றார். இருபது அம்சத்திட்டத்தினைப் புகுத்திய போது அம்மாறுதலை ஏற்றுக்கொண்டார்.

குந்தக் குடிசையின்றி கொட்டும் மழை
வெய்யிலிலே
சந்தியிலே நின்று வந்த சாதி - இனி
தனக்கென்று வீடுகட்டும் நீதி
..................
நாட்டு மக்கள் யாவருக்கும்
தூங்க ஒரு வீடுதரும் அம்சம் - அதில்
துள்ளி எழும் பாரதத்தின் வம்சம்

என்று அத் திட்டத்தினால் மக்கள் நன்மை பெறுவர் என நம்பிப் பாடினார்.

*பிரச்சனைகளும் மாற்றும் வழிகளும்*

கண்ணதாசனுக்குத் தான் சார்ந்திருந்த சமூகம் நோக்கி நின்ற பிரச்சனைகளும் அவற்றை மாற்றும் வழிமுறைகளும் தெரிந்திருந்தன. மறுமலர்ச்சிக்கான வழிகளைக் கூறி, தடைகளை அகற்ற முன்வந்தார். மக்கள் நலன் ஒன்றையே மனதில் கொண்டார். சமூகத்தின் நோய்களை அகற்ற அவர் செய்த முயற்சிகள் எல்லாம் அவரை ஒரு முரண்பட்ட மனிதராகவே பலருக்கும் அறிமுகப்படுத்தியது. அவரது அடிப்படைக் குறிக்கோளைப் புரிந்து கொள்ளாமல் விமரிசித்தவர்கள் ஏராளம். ஆனால், கண்ணதாசனுடைய படைப்புக்களை ஆழ்ந்து பார்ப்போமானால் ஓர் இழை, ஒரே குறிக்கோளை நோக்கிச் செல்வதை உணரலாம். குறிக்கோளுக்கான கண்ணதாசனுடைய பயணமே அவரது ஆளுமையை நமக்குக் காட்டும்.

*சாதியும் சண்டையும்*

நம் சமுதாயத்தின் மிகப் பெரிய கொடுமை சாதியமைப்பு. சாதி, சாதியென்று சண்டையிட்டு நாதியற்றுப் போகிறோமே என்று வேதனைப்படுகிறார் கண்ணதாசன். இதற்குச் சாவுமணியடிக்க வேண்டுமென்றும் சாதி பேதமற்ற ஒரு சமுதாயத்தைக் 'காணவேண்டு மென்றும் கண்ணதாசன் மனம் விழைந்தது.

*புதிய சமுதாயம்*

புதியதோர் சமுதாயம் அமைக்கவே கண்ணதாசன் விழைந்தார். கல்வி இல்லாதவர், கடமை இல்லாதவர் இல்லை என்று ஆக்குவோம் என்றும், இனப்பகை, மொழிப்பகை எப்பகையாயினும் அவ்வாறு நினைப்பவர்களை நெருப்பில் வீழ்த்துவோம் என்றும் சூளுரைத்தார். சமுதாயத்தின் ஓர் அங்கம் என்ற நிலையில் கவிஞரின் ஆளுமை இங்கு வெளிப்படுகிறது.

பிரச்சனைகளுக்குக் காரணமானவர்கள் அரசியல் கட்சிகளும் அரசியல் வாதிகளும் மக்களும் தான் என்பதனைக் கவிஞர் இனங் கண்டுகொண்டார். அதனால் அனைவர் மீதும் கோபங்கொண்டார். மக்களின் மெத்தனமும் சோம்பேறித்தனமும் அரசியல் வாதிகளின் அலட்சியமும் கவிஞரைச் சிந்திக்க வைத்தன. இருசாராருமே மற்றவரைக் குறை கூறிக் கொண்டு எத்தனை காலம் தான் வாழ முடியும்? அவரவர் தங்கள் கடமைகளைச் செய்தால் தான் பிரச்சனை களைத் தடுத்து நிறுத்த முடியும். மக்கள் மேன்மையடைய முடியும். இப்படி ஒரு சமுதாய அமைப்பு உருவாக மக்களும் அரசியல் வாதிகளும் எந்த விதமான புது முயற்சியும் எடுத்துக் கொள்ள வில்லையே என்ற ஆதங்கமும் கண்ணதாசன் மனதை அலைக் கழித்திருக்கிறது.

நன்றி மறவாமை:

மனிதனின் ஆளுமையின் முக்கியமான ஒரு கூறு நன்றி மறவாமையாகும். கம்பனுக்குச் சடையப்ப வள்ளலைப் போல் தனக்கு காலத்தால் உதவி செய்த சின்னப்ப தேவரைப் புகழ்ந்து பாடி, தன் நன்றி மறவாமையை வெளிக் காட்டியுள்ளார். கை கொடுத்த கங்கை காய்ந்து போனதேயென்றும் தண்ணீரைத் தரும் மேகம் கலைந்ததே என்றும் எடுக்க எடுக்க ஊறும் ஊற்றாய் இருந்த நல்ல உள்ளம் மறைந்ததே என்றும் மனம் நடுங்கிய கவிஞர் பாடுகிறார்.

*உலையேற்றி வைத்துவிட்டு ஓடிப்போய் நின்றாலும்*
*கலையாத பசி தீர்க்கும் கற்பகப்பூந் தீபமடி*

என சின்னப்ப தேவரைப் பாராட்டுவதற்கு ஒரு பின்னணியும் உண்டு. கண்ணதாசனைப் பொறுத்த வரையிலும் தக்க சமயத்திலெல்லாம் பொருள் தந்து உதவியவர் சின்னப்பதேவர். அவருடைய வீட்டுத் திருமணங்களின் வரவேற்புகளில் எல்லாம் நல்லவரவை விரும்புவர் தேவராகத்தான் இருந்தார். ஆனால் அதுபோல் ஒரு திருமண வரவேற்புச் செய்தியைக் கவிஞர் கூறியபோது அந்த நாளில் ஊரில் இருக்கமாட்டேனே என்று தேவர் கூறினாராம். உண்மையிலேயே திருமண வரவேற்பு நடைபெற இருந்த அந்த நாளில் தேவர் இயற்கை எய்திவிட்டார். அந்தத் திருமண வரவேற்பைக் கவிஞர் நிறுத்தி விட்டார் என்பதைச் சொல்லவும் வேண்டாமே.

பிரிவுத் துயரம்

கலைஞர்கள், தலைவர்கள், நண்பர்கள், உறவினர்களின் பிரிவிலும் கண்ணதாசன் வருந்தியிருக்கிறார். தன் மன எண்ணங்களைக் கவிதைகளில் வடித்துமிருக்கிறார். இங்கெல்லாம் அவருடைய நேர்மையான அன்பின் அடிநாதத்தைக் காண முடிகிறது. நாதசுரமேதை டி.என்.ராஜரத்தினம் பிள்ளை மறைந்தபோது,

*செவியினில் ஓடி, எங்கள்*
*சிந்தையில் ஓடி, இந்தப்*
*புவியெலாம் ஓடி, நின்பாற்*
*பொங்கிய 'தோடி'.....*

இனி வேறெங்கு போகும் என்று கவிஞர் கேட்ட கேள்வி சோகத்தின் இழையை நம் மனதில் பின்னுகிறது.

கலைஞர்களில் கலைவாணரின் இழப்பு கண்ணதாசனை மிகவும் பாதித்த ஒன்று. அன்பினால் கவிஞரின் மனதைக் கவர்ந்தவர் கலைவாணர். தன்னுடைய துயரங்களையும் அந்தரங்கங்களையும் கண்ணதாசனுடன் பகிர்ந்து கொண்டவர். பேரும் புகழும் வந்தபோதும்

அமைதியில்லையே என்ற அவருடைய ஏக்கம் கவிஞரை வெகுவாகப் பாதித்ததனால் தான் ஆறாது ஆறாது அழுதாலும் தீராது என்று கவிதை எழுதினார்.

ஆரம்பமாவதெல்லாம் பெண்ணுக்குள் என்று பாடிய பட்டுக் கோட்டைக் கலியாணசுந்தரம் ஆடி அடங்குகிறான் மண்ணுக்குள் என்று அஞ்சலி செலுத்தினார்.

அழகப்பா

வள்ளல் அழகப்பா மறைந்த போது கவிஞர் மனம் வெந்து புண்ணாகியது.

*சதிகாரச் சாவே! நின் வயிற்றினிலே*
*சர்வ கலா சாலை காண*
*இதமான ஆள்வேண்டு மென்றோஎம்*
*பெருமகனை எடுத்துச் சென்றாய்.*

என்று புலம்புகிறார். கல்வித்துறைக்கு ஏற்பட்ட இழப்பை மிகத் துல்லியமாக உணர்ந்து பாடியிருக்கிறார் கவிஞர்.

நேரு

ஒரு காலகட்டத்தில் கிடைத்த சந்தர்ப்பத்தில் எல்லாம் கவிஞர் நேருவை இகழ்ந்துள்ளார். ஆனால் அவர் மேற்கொண்ட அரசியல் மாற்றம் அவர் மனதிலும் நேருவைப் பற்றி ஒரு மாற்றத்தை ஏற்படுத்தியது. நாட்டையும் மக்களையும் உய்விக்கும் தலைவராய் நேருவினை பிறகு கவிஞர் காணத் தொடங்கினார். அதனால் தான் உழைக்காமல் மக்கள் சோம்பேறிகளாய் இருந்து நீட்டி முழக்கிப் பேசியபோது, நாட்டில் பாலும் தேனும் ஓடவில்லையே என்று கேட்டபோது - வெறும் வெள்ளை வேட்டி வேதாந்தத்தில் வேதனை தீருமா என்று ஆத்திரத்துடன் பதில் கேள்வி கேட்டார் கவிஞர். உரிமைகளைப் பெற்ற மக்களை உருப்பட வைக்க வேண்டுமென்றும் விரும்பினார். இப்படிப்பட்ட தலைவர் மறைந்தபோது கண்ணதாசனால் அந்த இழப்பைத் தாங்கிக் கொள்ளவே முடியவில்லை. தீயவை நினையா நெஞ்சைத் தீயிலே எரிய விட்டார் என்று பதறும் கவிஞர்.

சாவே உனக்கொரு நாள்
சாவுவந்து சேராதோ!
சஞ்சலமே நீயுமொரு
சஞ்சலத்தைக் காணாயோ!
தீயே உனக்கொரு நாள்
தீமூட்டிப் பாரோமா!

தெய்வமே உன்னையும்நாம்
தேம்பி அழ வையோமோ!

என்று கூறியவர்.

நேருவா மறைந்தார்; இல்லை!
நேர்மைக்குச் சாவே இல்லை!
அழிவில்லை முடிவு மில்லை!
அன்புக்கு மரணம் இல்லை!

என்று தன்னைத் தானே பிறகு தேற்றிக் கொள்கிறார்.

அண்ணா

அண்ணாவின் பேச்சாற்றலால் கவரப்பட்டு அவர் ஆரம்பித்த கட்சியில் அங்கத்தினராகி, அருகிலிருந்து அவருடைய திறமைகளை வியந்து போற்றியவர் நம் கவிஞர். பாசத்துடன் பழகிய அவரைவிட்டு அரசியல் காரணங்களால் பிரிந்தபோதும் மனதில் அந்த நட்பைப் பேணித்தான் வந்தார்.

கொஞ்சுங்குரல் எனினும்அது
குமுறும்குரல் அலவோ?
பஞ்சின் மொழி எனினும்அது
பண்பின்மொழி அலவோ?

என்று பொன்விழா நேரத்தில் கவிதை பாடியவர், அண்ணா மறைந்தபோது

கற்றவர் போற்றும் அறிவெங்கே - இங்கே
கதறும் ஏழையின் துணை எங்கே?

என்று பாடி அண்ணாவின் குணாதிசயங்களை நன்கு வெளிப் படுத்தியுள்ளார்.

அம்பேத்கர்

மக்கள் அனைவரும் சமம்; அவர்களுள் உயர்வு தாழ்வு இல்லை என்று கூறியவர் அம்பேத்கர். தனி ஒரு மனிதனால் கோடி மக்கள் உயர்ந்தனர் என்றால் அது அம்பேத்க்கரால் தான் என்கிறார் கவிஞர். தாழ்த்தப்பட்டோர் இவரால் உயர்ந்தனர். எலும்பும் சதையும் எல்லோர்க்கும் ஒன்றே எனும்போது மனிதரில் எப்படி மேலோர் கீழோர் என்ற பிரிவை ஒப்புக் கொள்ள முடியும் என்று அதனை எதிர்த்தவர் அம்பேத்கர். அவருக்கு அஞ்சலி செலுத்தும்போது நீ எதிர்த்த சாதிப் பாம்பை நாங்கள் தாக்குவோம் என்று உறுதி பூண்டு பேசுகிறார்.

காமராஜர்

தான் சார்ந்திருந்த அரசியல் கட்சியின் சார்பில் பேசிய போதெல்லாம் காமராஜரிடம் குறைகள் கண்டு வந்தவர் தான் கண்ணதாசன். ஆனால் ஒரு கட்டத்தில் சமதர்மப் போருக்கு ஆதரவாக குரல் கொடுத்த காமராஜரின் கரங்களை வலுப்படுத்த அவருடைய இயக்கத்திலேயே தன்னையும் இணைத்துக் கொண்டார் கவிஞர்.

தனக்கென வாழாமல் நாட்டுக்கென, மக்களுக்கென வாழ்ந்த ஒரு தலைவர் என்று கண்ணதாசன் காமராஜரை பாராட்டியுள்ளார். உலகிற்கு எது நன்மை பயக்குமோ அதைச் சொன்னவர். எது உலகின் போக்கையே மாற்றுமோ அதைச் செயலாற்ற முனைந்தவர். தேசக் கயிற்றினால் பெரியாரை இணைக்க முடியாத போதும் பாசக் கயிற்றினால் பம்பரம் போல் ஆட வைத்தவர் காமராஜர் என்கிறார் கவிஞர். தான் கல்வி கற்காத போதும் கற்றவரையெல்லாம் கல்லாக்கி வைத்து விடும் கல்விதான் மிகப் படித்துவிட்டாய் என்று அவரைப் பாராட்டுகிறார்.

அதனால் தான் இங்ஙனம் குரல் கொடுத்தார் கவிஞர். அப்போது தமிழகத்தை காமராஜர் ஆளவில்லை. இருப்பினும்

காலத்தால் அமைதி வரும்
காணாத வாழ்வு வரும்
காமராஜ் ஆள வந்தால்
கண்ணீருக்கு முடிவு வரும்

என்று கனவு கண்டார். தமிழகத்தை மீண்டும் ஆளும் வாய்ப்பைப் பெறாமலே அவர் உயிர் நீத்தபோது கண்ணதாசனின் துயர் மேலும் அதிகரிக்கிறது. நாங்கள் தாயிழந்த பிள்ளைகள் ஆனோம் என்று வருந்தும் கவிஞர், அவருடைய எண்ணங்கள் நாட்டுக்கும் வீட்டுக்கும் ஒளிகளாகத் திகழுமென்று தானே அமைதி காண்கிறார்.

நின்றுபோன தென்றல்

கவிஞர் ஆரம்பித்த முதல் இலக்கிய இதழ்தான் 'தென்றல்' இதனைத் தொடர்ந்து திரைப்படச் செய்திகள் அடங்கிய 'தென்றல் திரை' நடத்தினார். கூடவே 'முல்லை' என்ற இலக்கியத் திங்கள் இதழையும் ஆரம்பித்தார். இவற்றுள், ஆவேசமாக வாழ்ந்திருந்த கண்ணதாசனின் எழுத்துப் பசிக்குச் சரியான தீனியாகத் 'தென்றல்' அமைந்திருந்தது. அரசியலும் இலக்கியமும் அவருடைய இரு கண் களாகத் திகழ்ந்தன. எனவே அரசியல் கருத்துக்களையும் எழுதினார். தன்னுடைய பல்வேறு இலக்கிய முகங்களையும் காட்டினார். பத்திரிகையைப் படித்த பேராசிரியர்கள், புலவர்கள், இலக்கிய ஆர்வலர்கள், மாணவர்கள் என அனைத்துப் பிரிவினருடையவும்

பாராட்டினைத் 'தென்றல்' பெற்றிருந்தது. வார ஏட்டை தினசரியாக மாற்றிய பின்னர், சரியான நிர்வாகமில்லாததால் நிறுத்த வேண்டியதாயிற்று. நின்று போன தென்றலுக்கு இரங்கற்பா பாடினார்.

'கண்மணி தென்றல்' என்ற தலைப்பில் பாடிய கவிதை கவிஞரின் மன வேதனையை வெளிக்காட்டுகிறது.

மூடர் அகத்திருந்த
முள்ளெடுத்து நோய்தீர்க்கும்
ஏடாக வந்த
இளந்தென்றல் செல்வமது!
கற்றோர் அவைக்குக்
களிப்பூட்டுந் தென்றலது!
கல்லாத மாந்தர்க்கும்
கண்கொடுத்த தென்றலது!
..................
பேரா சிரியர்களும்
பெரும் பொருளைத் தேர்ந்துணர
ஓரா சிரியனை
ஓடிவந்த தென்றலது!
..............
வெண்பாவில் ஊறி
விளையாடும் தென்றலது!
.................
தூக்கி யணைத்துத்
தொட்டிலிட்டுத் தாலாட்டி
வாக்கில் மனத்தில்
வைத்திருந்த தென்றலது
போக்கறியார் கையிற்
புகைபோல் மறைந்ததம்மா.

என்று தன் வேதனையை கவிதையில் வடித்துள்ளார். தன்னுடைய பிற பத்திரிகைகள் எல்லாம் நின்று போனபோதும் கூட தென்றலுக்கு மட்டுமே கவிஞர் இரங்கற்பா பாடினார். தென்றலைக் கண்ணதாசன் எவ்வளவு தூரம் நேசித்தார் என்பதற்கு இது ஓர் எடுத்துக்காட்டு.

*சீசருக்கு அஞ்சலி*

நண்பர்களிடம் நன்றியைக் காணாததால் விரக்தியடைந்தவர் கண்ணதாசன். நன்றி கெட்ட மனிதனைவிட நாய்கள் மேல் என்று *சீசரை* வாங்கி வந்தார். ஆசையாய்ச் சுமந்து அணைத்து மகிழ்ந்தார். அன்புடன் காலடியில் வந்து நின்று அன்பு காட்டும் *சீசர்* கண்ணிலே உறவையும் காட்டியதாம். கவிஞரின் குரல் கேட்டால் எங்கிருந்தாலும் ஓடிவந்து தன் முழு உடலும் நடுங்கப் பாசத்தைக் காட்டுமாம். *சீசருக்குத்* தான் தோழனே என்கிறார் கண்ணதாசன். சோறு கொடுக்கும் கை மீளுமுன்பே வெடுக்கென கடிக்கும் மாந்தர்கள் வாழும் உலகிலே தன்னிடம் பாசங்காட்டிய *சீசரைக்* கவிஞருக்கு மிகவும் பிடித்திருந்தது. அவர் விரும்பும் பொருட்கள் அவருக்குக் கிடைக்காமல் போவதென்பது அவருக்கே உரித்தான ஒன்று. அவ்வாறு கண்ணதாசன் மிகவும் விரும்பிய *சீசரும்* மரணத்தைத் தழுவி அவரைத் தனியாக்கி விட்டுச் சென்றபோது அதற்கு அஞ்சலி செலுத்தி 'என்னருமை *சீசர்*' என்று கவிதையும் பாடினார்.

தமிழ் மொழிமேல் பற்று

தமிழ் மொழிமேல், தமிழக மக்கள் மேல் கண்ணதாசனுக்கு அளவு கடந்த அன்பு இருந்தது. மனதின் ஆழத்தில் நேர்மையும் இருந்தது. அதனால் தான் கட்டாய இந்திக்கு எதிராகக் குரல் கொடுத்தபோது ஆவேசத்துடன் பாடினார். அடிமை விலங்கறுக்கப் புறப்படுவீர் என்று தமிழக மக்களுக்கு அறை கூவல் விடுத்தார். கைகளில், கால்களில், கண்களில், கருத்தினில் எங்கும் இந்தியின் பெயரால் விலங்கு வைக்கப் பார்க்கிறார்களே என்று வெகுண்டெழுந்தார். தமிழைக் காப்பதற்காக வடவர் நாட்டை இடுகாடாக ஆக்க வேண்டுமென்றும் ஆவேசங் கொண்டார். இங்கு உணர்ச்சி பூர்வமானக் கண்ணதாசனைக் காண்கிறோம்.

இந்தியையும் அணைத்தார்

மொழிக்கப்பால், மனிதனுடைய தேவைகள் பொதுவானவை என்பதனை உணர்ந்தபோது அவர் பார்வையும் அதனைப் பிரதிபலித்தது. நதிகள் பலவானாலும் நீர் ஒன்றே தான் என்று ஆற அமர உட்கார்ந்து சிந்தித்து உணர்ந்தார். அன்பால் முதலில் அணைக்க மறந்த மத்திய அரசு, கட்டாய இந்தியை ஆறப்பட போட்டபோது கண்ணதாசன் மனமும் மாறுகிறது. இப்போது இந்தியையும் வடநாட்டாரையும் எதிரிகளாகக் காணவில்லை.

*இளகியதோர் காலையில் புதுடில்லி ஓடுவேன்*
*இந்தியில் பேசி மகிழ்வேன்*

என்று பாடினார். இது முரண்பாடு அன்று. மனித நேயச் சிந்தனையின் அடிமன ஓட்டமே இங்கு வெளிப்பட்டுள்ளது.

## பொதுவுடைமைத் தத்துவம்

பொதுவுடமையை விரும்பிய கண்ணதாசன் அந்தப் பொருளாதாரக் கொள்கையை மட்டும்தான் வரவேற்றார். பொதுவுடமை பேசும் நாடுகளின் செயல்கள் மனித நேயத்திற்கு எதிராகப் போகும் போது அவற்றைக் கண்டிக்க கண்ணதாசன் தவறியதே இல்லை. விலை கொடுத்து விடுதலையடைந்த இரண்டு வரலாற்று நிகழ்ச்சிகளைக் கண்ணதாசன் சுட்டுகிறார். அங்கேரி நாட்டை சோவியத் சேனை சூழ்ந்து மக்கள் வாழ்வை பறித்தது என்றும் அவர்கள் தலைவனின் உயிரை மாய்த்தது என்றும் கொதிப்புடன் கூறியிருக்கிறார் கண்ணதாசன்.

அதேபோல் வங்கதேசம் விடுதலை காணத்துடித்து நின்றபோது

அமெரிக்கப் பாவிகளின் ஆயுதங்கள்
அடுத்திருக்கும் சீனர்களின் ஆள்பலங்கள்
சுமை சுமையாய்ப் பிணக்குவியல் காட்டுதம்மா
உலகத்துப் பொதுச்சபையோ தூங்குதம்மா
வங்க தேசமே என்னஉன் விதியோ
வாழ நினைத்தால் இதுதான் கதியோ?

என்று வேதனைக் குரல் கொடுத்திருக்கிறார்? பொதுவுடமை என்ற பெயரில் மோசடி நடந்ததைச் சுட்டும் கண்ணதாசன் அதே வேதனையோடு அமெரிக்கா, சீனா செய்த செயல்களையும் சுட்டுகிறார்.

## மனித நேயம்

மக்களின் உரிமைக்காகவும் பெருமைக்காகவும் பாடும் பரந்த நோக்கம், கண்ணதாசனிடமிருந்தது. மனித செயல்பாடுகள் தான் ஏற்றத் தாழ்வுகளுக்குக் காரணமென்று நம்பினதால் எதிர்ப்புத் தெரிவிப்பதிலும் ஆதரவு கொடுப்பதிலும் வேகம் அதிகமாக இருந்தது. கவிஞருடைய உணர்ச்சிப் பெருக்கின் வேகம் தன்னியல்பானது. மனித அநீதிக்கு எதிராகப் பாடினார். மக்களுக்கு எதிராக அல்ல. மனித நேயத்துடன் பாடினார்; மக்கள் நன்மை பெற.

## மானிட இன்பம்

மனித குலம் இன்பமடைய வேண்டுமென்பது கண்ணதாசனுடைய மற்றொரு குறிக்கோள். அதற்கான வழிகளைக் கூறும்போது தடைகளை நீக்கவும் ஆலோசனைகள் வழங்கினார். எல்லோரும் இன்பம் பெற, சமுதாய அமைப்போ, மனித நீதிகளோ

இடையூறாக இருப்பதாகப்பட்டால் அவற்றை மாற்றியமைக்கும் பணியில், நினைவில் மூழ்கினார்.

நேரு, தனக்கென ஏதுமில்லாத் தலைவர் என்றும் நாட்டைக் காப்பவர் என்றும் எண்ணி அவர்பால் கவிஞர் நம்பிக்கை வைத்தார். ஆனால் விளக்கிருக்கும் இடமெல்லாம் வெளிச்சம் வருமென்றாலும் விளக்கின் கீழே இருட்டு இருக்கும். அதுபோல் அகிலமெல்லாம் பண்டிதரைப் போற்றியபோது சில கூன் விழுந்த ஞானிகள் ஏசுகிறார்களே என்று மனம் பொறுக்காமல் குமுறியவர் கண்ணதாசன். மக்களாட்சியில் நன்மை மலரவில்லை என்று நேருவை மட்டும் குறை கூற வேண்டாமென்ற கருத்தினையும் கண்ணதாசன் தெரிவித்தார். மக்களாட்சியை வேண்டுமானால் சற்றே நிறுத்தி வைப்போமே என்றும் யோசனை கூறியுள்ளார். அதேபோல்,

மேட்டுக் குடி வாழ்க்கை
மென்மே லுயர்ந்து வர
நாட்டுக் குடி வாழ்க்கை
நடுத் தெருவில் நிற்பதனை

மாற்றியமைக்க வேண்டுமென்றும் பாடியுள்ளார். மனித இனம் நலம் பெற வேண்டும் என்ற நினைப்பு எப்போதும் கண்ணதாசன் மனதில் இருந்திருக்கிறது. அதனால் தான் பின்னாளில் கூட,

ஜனங்களுக் கெல்லாம் வாழ்வினை நல்கும்
சமதருமம் ஒன்றே - அதை
சந்திக்கும் வரையில் சிந்தனை ஒன்றே

என்று பாடினார்.

### கண்ணதாசன் பார்வையில் பெண்கள்

பெண்களைப் போதைப் பொருளாக மட்டுமே பார்த்தவர் கண்ணதாசன் என்று குற்றஞ்சாட்டுபவர்களே ஏராளம். பெண்மையை அவர் ரசித்தார், சுவைத்தார். பெண்மையின் இன்பத்தில் தன்னையே இழந்தார் என்பது உண்மை. அதே நேரத்தில் தன்னுடைய அளவு கடந்த இன்ப ஈடுபாட்டினால் வந்த விளைவுகளையும் பின்னாளில் வருந்திப் பாடினார். தனி மனிதனின் செயல், சமுதாய ஒழுக்கத்திற்கு ஊறு விளைவிக்கும் நிலையில் கவிஞர் நடந்து கொள்ளவில்லை. சட்டங்களும் தர்மங்களும் எல்லாம் அவர் அரசாங்கத்தில் அவர் விருப்பப்படி தான் அமைந்திருந்தன.

பெண்களுக்குச் சமத்துவம் தரவேண்டுமென்று குரல் கொடுத்திருக்கிறார். மனைவியை இழந்த கணவன் மறுமணம் செய்யலாமென்றால் அதை ஏன் பெண்களுக்கும் பொதுவாக்கி வைக்கவில்லை

என்றும் கண்ணதாசன் கேட்டிருக்கிறார். பழமையின் பெயரில் பொசுக்கும் பருவமும் பொய்யென அவள் கிடக்க வேண்டுமோ என்று வெடிக்கிறார். அறிவு பூர்வமாக ஆராய்ந்து பேசும் கவிஞனை இங்கு நாம் காண்கிறோம்.

## இனப்பகை வேண்டாம்

மக்களுக்குள்ளே சாதியின் பெயராலும் மதத்தின் பெயராலும் இனப்பகை கூடாது என்று கண்ணதாசன் விரும்பினார். அவருடைய வேண்டுகோளைப் பார்ப்போம்.

இனங்களுக் குள்ளே பகைமை பாராமல்
எதிர்த்து நிற்போம் தாயே - நாம்
இருக்கின்ற பொருளைக் கிடைக்கின்ற புகழைப்
பகிர்ந்து கொள்வோம் தாயே

என்று பாடியுள்ளார். கவிஞருடைய ஏக்கங்களும் ஆசைகளும் அச்சங்களும் எல்லாம் மானிட இன்பம் என்ற இலக்கை நோக்கி பயணம் செய்வதை இங்கு காண்கிறோம்.

## ஆன்மீக ஈடுபாடு

இந்திய நாட்டினோடும் அதன் பாரம்பரிய ஆன்மீக பண்பாட்டுச் சிந்தனைகளோடும் பற்று மிக்கவராய் இருந்த கண்ணதாசன், தன்னுடைய அரசியல் போக்கிற்கு ஏற்ப தன்னைச் சிலநாள் மறைத்துக் கொண்டார். வெளியே நாத்திகம் பேசுபவராகவும், உள்ளே ஆத்திகராகவும் வாழ்ந்து கொண்டிருந்தார். இந்து சமயத்தின் மீது மட்டுமல்லாமல் கிறித்துவ மதத்தின் மீதும் புத்தத் தத்துவங்கள் மீதும் அளவு கடந்த ஈடுபாடு கொண்டிருந்தார். இந்து கடவுள்கள் மேல் கவிதைகள் பாடினார். இந்துமதத் தத்துவங்களுக்கு விளக்கங்கள் கொடுத்தார். அர்த்தமுள்ள இந்துமதம் என்று கட்டுரைகள் எழுதினார். பகவத் கீதைக்கு விளக்கவுரையும் தந்தார்.

அகிம்சையின் பால் அளவு கடந்த ஈடுபாடு கொண்டிருந்த கண்ணதாசன், புத்தமதத் தத்துவங்களை மிகவும் நேசித்தார். அதனாலேயே தன்னுடைய மாங்கனியின் இறுதியில் தலைவியை புத்தபிக்குவாகச் சித்தரிக்கிறார். கலிங்கத்துப்போரில் உயிர்களைக் கொன்று குவித்த அசோகனின் மனம் மாறுவதாக 'வெண்புறா' கவிதை நாடகத்தில் சுட்டியுள்ளார். அன்பே அனைத்தும்; அதன் சக்தியே ஆண்டவன் தத்துவம் என்று உணர்ந்து 'சாவிலா வீட்டில்' என்னும் கவிதை பாடினார்.

### எம்மதமும் சம்மதமே

எல்லாவற்றிற்கும் மேலாக எம்மதமும் சம்மதமே என்று இயேசுகாவியம் படைத்தார். இறைமகன் மகிமையை எடுத்தியம்பும் காவியமாக இதனை உருவாக்கினார். ஆன்மீகத்தின் பால் தன் மனதை முழுமையாக திருப்பிவிட்ட நேரத்தில் தான் இந்த இறவாக் காவியத்தைத் தந்தார். சமயங்கள் ஒன்றோடொன்று உறவு கொண்டும் மானிட உலகம் அன்பும் அமைதியும் கொண்டு வாழ வேண்டுமென்ற கருத்தினையும் மக்கள் நன்குணரும் படி 'இயேசுகாவியம்' படைத்தது வழி கண்ணதாசன் உணரச் செய்துவிட்டார்.

### வித்தியாசமான ஆளுமை

தமிழ்மொழி மேல் பற்றுகொண்டு பாடியபோது அவருடைய சிந்தனை, தன்னம்பிக்கையும் விழிப்புமுற்ற ஒரு பகுதி மக்களின் மேம்பாடு கருதியே செயல்பட்டது.

இளைஞர்கள் மேல் கொண்ட அன்பும், தான் வாழ்ந்த கால கட்டத்துத்தலைமுறையின் மீது கொண்ட பற்றும் சமுதாயத்தில் மாற்றம் ஏற்படச் செய்ய வேண்டுமென்று கண்ணதாசனைப் பாடச் செய்தது.

திராவிட முன்னேற்றக்கட்சியின் உறுப்பினரானதோடு கண்ணதாசனின் அரசியல் வாழ்வும் ஆரம்பமாயிற்று. அவர் நடத்திய அரசியலோ மிகவும் வித்தியாசமானது.

1927ஆம் ஆண்டு காங்கிரஸ் கட்சி ஆட்சியை விட்டு வெளிவந்த முத்தையா அமைச்சராகி பனகல் என்பவரின் உதவியோடு வகுப்பு வாரிச்சட்டத்தைக் கொண்டு வந்தார். கல்வி அறிவில்லாதவர்கள் கல்வி பெறவும் இதனால் வழி வகுக்கப்பட்டது. அரசாங்க அலுவல கங்களிலும் வேலை நியமனங்களிலும் இம்முறையை புகுத்தச் செய்தார். அப்போது காங்கிரஸ் கட்சியிலிருந்த இராஜாஜி இதனை எதிர்த்தார். பின்னாளில், அதனை விமர்சனம் செய்கையில் கண்ணதாசன், அவர் சார்ந்திருக்கும் கட்சி தான் வகுப்புவாதக் கட்சி என்றும் அதனால் தான்

நோய் மனத்து முப்புரியார் கூவுகின்றார்
நுழைந்த தய்யா வகுப்புவாதம்

என்று கிண்டல் செய்கிறார்.

பிறப்போடு வந்த சில உணர்ச்சிகளை மறைத்துக்கொண்டு, தான் சார்ந்த இயக்கத்தின் நடைமுறை இயல்புக்கேற்ற உணர்வுகளை மேற் கொண்டார். நமக்கென தனிநாடு இருந்தால் தான் நாம் தன்னிறைவுடன் நலமாக வாழ முடியும்; நம் சமுதாயம் சிறப்பு நிலை அடைய முடியுமென்றும் நம்பினார்.

நம்மரசு வேண்டும்

சுதந்திரத்திற்கு முன் 1937 ஆம் ஆண்டு சென்னை நகரில் இராஜாஜியின் ஆட்சி நடந்து கொண்டிருந்தது. அப்போது நமக்கும் பொது எதிரி வெள்ளைக்காரன் என்பதால் இந்தியர்கள் அனைவரையும் ஒன்றுபடுத்துவதற்காக இந்தியைக் கட்டாயப் பாடமாகக் கொண்டு வந்தார். திராவிட இயக்க வரலாற்றினை 'பெரும் பயண'மாக எழுத வந்த கண்ணதாசன் இங்கு அவரை விமர்சிக்கிறார். காரணம் திராவிட இயக்கம் கட்டாய இந்திக்கு எதிரான கொள்கையுடையதாய் இருந்ததே. நமக்கெனத் தனிநாடு இருந்தால் இந்தி திணிக்கப்படும் என்ற அச்சம் இல்லையே என்று கண்ணதாசன் எண்ணினார். நிலைமை மாறி சுதந்திர இந்தியாவில் வாழ்ந்து கொண்டிருந்த போதும் இந்தி திணிக்கப்படலாம் என்ற நிலை இருந்தது. ஒரு கட்டத்தில் அது மத்திய அரசால் அமுல்படுத்தவும் பட்டது. இதனால் மனங்கொதித்த கண்ணதாசன்,

*நடுவரசு நமக்கெதற்கோ என்ன தேவை?*

*நம்மரசு நமக்கிருந்தால் இந்தி ஏது?*

என்று கேட்டுள்ளார்.

தமிழகம் சுதந்திர இந்தியாவில் இருந்தபோதும் நமக்கென நாம் வாழ முடியாத நிலை இருப்பதாகக் கண்ணதாசன் எண்ணினார். தமிழக மக்களை அவர்களே ஆள முடியாத நிலை இருப்பதாக எண்ணி வேதனைப்பட்டார். கையைக் கட்டிப்போட்டிருக்கும் அழகு ஒரு பக்கம்; கட்டாயமாக நம்மேல் எதையும் திணிப்பார்கள் என்ற அச்சம் மறுபக்கம். இது காங்கிரசுக்கு எதிராக கண்ணதாசனுக்கு கிடைத்த கொள்கை.

அப்போது தமிழகத்திலும் தில்லியிலும் காங்கிரஸ் ஆட்சி தான் நடந்து கொண்டிருந்தது. அதனால் நாட்டு நலன் என்ற பெயரில் நம்மேல் அவர்களால் எதையும் சுமத்த முடியும். நாட்டு நலன் என்றும் தேசிய ஒற்றுமை என்றும் பேசி நம்மை நிரந்தர அடிமைகளாக்க முயற்சி செய்கிறார்கள் என்றே கண்ணதாசன் மனம் குமுறினார். இதனால், காங்கிரஸை எதிர்த்து நாம் நமக்கென விடுதலை பெற வேண்டும் எனவும் தனிநாடு பெற வேண்டும் என்ற கொள்கையோடும் கண்ணதாசன் உடன்பாடு கொண்டார். அதனாலேயே

*கைம்முதல் ஒருதுளியும் இன்றியே*

*கணக்கில்லாத் தொழில் புரியும் ஆரிய!*

என்று காங்கிரஸ் கட்சிக்காரர்களைப் பார்த்து நீங்கள் என்ன முதல் இங்கு கொண்டு வந்தீர்கள் என்று கேட்கிறார். நம் மக்களின் தேவை களை நாம் மட்டுமே கவனித்தால் போதும். நாம் வேறொரு வருக்கும் அடிமைப்பட்டு வாழவேண்டாம் என்ற எண்ணத்தின் பிரதிபலிப்பே அது

தனிநாடு

நாம் நமக்கென்று தனியாகச் சுதந்திரம் பெற்றுத்தனிநாடு அமைக்க வேண்டுமென்ற எண்ணத்தில் குரல் கொடுத்தவர்களில் ஒருவர் தான் வரதராஜுலு நாயுடு. நாம் நமக்குத் தனிநாடு கேட்பதனால் சிறையிலடைக்கப்படுவோம் என்பதையும் கொடுமை செய்யப்படுவோம் என்பதையும் கேட்டுப் பயந்து விட வேண்டாம். சிறைகளும் போர்முளும் என்ற முழக்கங்களுமெல்லாம் நம் மன உறுதியை மாற்றுமெனில் நீதியெல்லாம் சுடுகாடு நோக்கிச் செல்லும். நாமேன் பயப்படவேண்டும்? அன்னியர்க்கு நாம் அடிமைகளல்ல என்ற கருத்தினை வலியுறுத்தி அவர் பேசினார். அதனை அடியொற்றியே கண்ணதாசனும்

கெஞ்சுவதோ! தாள் பணிந்து கேட்பதுவோ
தாயகத்தின் சுதந்தி ரந்தான்!

என்று உரிமைக்குரல் கொடுத்துப்பாடியுள்ளமையை அறிகிறோம்.

இந்தி எதிர்ப்பு

தமிழகம் சுதந்திர பூமிதான். இருந்தாலும் மத்திய அரசின் அடிமைகள் என்ற நிலையுந்தான். நம் பிரச்சனைகளுக்கு நாமே தீர்வு காண முடியாத நிலை. நமக்கு என நாம் திட்டங்கள் தீட்டி, கொள்கைகள் கொண்டு, நம் இனத்தவர் என்று மட்டுமே அரசாள முடியாத காலகட்டத்தில் இந்தியைக் கட்டாயமாக்கும் நேரமும் வந்தது.

அரசாங்க மொழியாக இந்தி வேண்டும்
அத்தனையும் இந்திவழி மாற வேண்டும்
பெருநீதி மன்றத்தின் செயல்கள் யாவும்
பிறழாமல் இந்தியினில் அமைதல் வேண்டும்

என்று தில்லியில் ஆட்சியில் உள்ளவர்கள் கூறிடத்தமிழரோ நித்திரையில் சுகங் காணுகின்றனர். உறங்கும் தமிழனை

நித்திரையில் சுகம்காணும் தமிழா! நல்ல
நேரமிதே சிறைபோக! தயக்கம் வேண்டாம்
இத்தரணி உள்ளவரை இந்தி நாயின்
இடுப்புவலி மாறாமல் உதைத்தா லன்றிக்
கத்திரியால் பைகவரும் கள்வனைப்போல்
காசினியை அந்தமொழி கவர்ந்தே செல்லும்!

என்று தன் தமிழ்ப் பாட்டால் தட்டி எழுப்பினார்.

சமூக மாற்றம்

சமுதாயத்தில் காணப்படும் குறைகளைக் களைய அரசியல் தான் வழி. என்றநம்பிக்கையே கண்ணதாசனை அரசியலில் நுழையச் செய்தது. அநியாயங்களுக்கு எதிராக போர்க்கொடி எழுப்ப வேண்டுமென்ற எண்ணம் ஆழமாக அவர்மனதில் பதிந்திருந்தது. அது தனியொரு மனிதனால் இயலாது. எனவே மக்கள் மனதில் பதியுமாறு எல்லாப் பிரச்சனைகளையும் எடுத்துப் பேசி புரிய வைக்க முனைந்தார். மக்களிடம் மனமாற்றம் ஏற்படச் செய்து அதன் வழி சமூக மாற்றத்தைக் காணவே கண்ணதாசன் விழைந்தார்.

பொதுவாக, ஒரு கவிஞர் இரண்டு நிலைகளில் சமநிலை தவறுவதைக் காணலாம். தன் மனத்துக்குப் பிடித்த ஒன்றில் ஈடுபாடு கொள்ளும் போதும் மனதை உலுக்கும் செய்திகளைப் பேசும்போதும் கவிஞன் தன் மனநிலையை தெளிவாக்கி விடுவான். தனக்கென சில எண்ணங்களை கவிஞன் கொண்டிருக்கும் போது படைப்பில் அவை எதிரொலிக்கும். அது தான் கவிஞனின் பார்வை. அந்தப் பார்வையோடு நாம் உடன்பாடு கொள்ள வேண்டுமென்பதில்லை. ஆனால், கவிஞன் சமுதாயத்தில் நிலவும் ஒரு பொது பிரச்சனையை சுட்டும் போது பொதுத் தன்மை அதிலே கலக்கிறது. இந்தப் பொதுத் தன்மையிலிருந்து நாம் காணும் கவிஞனின் பார்வையே அவனுடைய ஆளுமையை நமக்குக் காட்டுகிறது.

முழுக்க முழுக்க தன்னுணர்ச்சிகளால் ஆளுப்படும் கவிஞன், இன்றைய சூழலின் விளைவு நாளை என்னவாயிருக்கும் என்றும் எப்படியிருக்கும் என்றும் கற்பனை செய்து பார்க்கும் திறனுடையவன். இந்தப் பார்வையின் திறமே அவனை வேதனைப்பட வைக்கிறது. மன வேதனை எல்லைமீறுகையில் தோன்றும் எதிர்ப்புணர்ச்சியும் ஆளுமையின் பாற்படும்.

ஆளுமையின் வெளிப்பாடு

நாட்டுக்குக்கிடைத்த சுதந்திரம் ஏழை மக்களின் பசியைப் போக்கவில்லை. அவர்களுக்கான பங்கு அவர்கள் கைக்குப்போகவில்லை என்பதால் வந்த கோபம் கண்ணதாசனை

..............இங்கு
வந்த சுதந்திரம் ஏழைக்கல்ல - அது
வாழும் முதலைகள் தூங்க! - பசி
வாட்டும் வயிறுகள் ஏங்க!

என எழுதத் தூண்டியது அத்துடன் அவர் கோபம் நிற்கவில்லை.

இப்படியே பசி நீளுமென்றால் இது

*என்ன சுதந்திர பூமி? - ஏன்*
*இத்தனை ஆயிரம் சாமி? - ஒரு*
*கைப்பிடியில் பல பூட்டை உடைத்தின்று*
*காத்திடுவோம் எங்கள் வீட்டை - பழி*
*தீர்த்திடுவோம் இந்த நாட்டை!*

என்று ஏழை மக்களின் பசி மாற வேண்டும் என்றும் அதற்கொரு வழி காண வேண்டுமென்றும் முழங்கினார். ஏழைகளின் நிலை உயர வேண்டுமென்ற நினைப்பு அவரை இப்படி எழுத வைத்தது. கவிஞரின் மனமும் எண்ண ஓட்டமும் இங்கு சரியாகப் பிரதிபலித்துள்ளது.

தனியொரு மனிதனின் பிரச்சனை சமுதாயத்தை எங்ஙனம் பாதிக்கிறது என்பதனை ஒரு மறுமலர்ச்சிக் கவிஞனால் குறிப்பிடாமல் இருக்க இயலாது. சமூகத்தின் இயக்கத்தினால் ஏற்படும் பாதிப்பையும் அதன் போக்கினையும் எடுத்துச் சொல்பவனாக, புரட்சி மனப்பான்மை உடையவனாக இருப்பான். மக்களுக்கு எது வேண்டும், எது நன்மை செய்யும், எது கூடாது என்றும் இனங் கண்டு கூறுவான். இந்த உணர்த்துதல் வழி மக்களிடையே விழிப்புணர்ச்சியை ஊட்டி தான் காண விழைந்த குறையற்ற சமுதாயத்தை உருவாக்க இயலுமென கண்ணதாசன் நம்பினார்.

சுதந்திரம் கிடைத்த பிறகு தங்களுக்கு அரசு எல்லாம் தரும் என்று மக்கள் எதிர்பார்த்தனர். எல்லா உரிமைகளையும் அரசு ஒருசேர மக்களுக்குக் கொடுத்தது. இதனால் சாதாரணக்குடிமகன் சுதந்திரம் என்றால் என்னவெல்லாமோ சும்மா கிடைத்துவிடுமென்ற எதிர்பார்ப்பு களுடன் இருந்தான். சுதந்திரம் கிடைத்தபிறகு எங்களுக்கு நாடு என்ன செய்தது, என்ன தந்தது, என்று கேட்கத் தொடங்கினார்கள்.

*எண்ணும் உரிமை எழுதும் உரிமை*
*ஏசும் உரிமை பேசும் உரிமை*

எல்லாம் பெற்றுக் கொண்ட மக்கள் உழைக்கும் உரிமையை மறந்துவிட்டனர். தன்னுடைய கடமையை உணராமல் சத்தம் போட்டால் அது சாப்பாடு போடுமா? மக்கள் என்ன செய்தால் அவர்களுக்கு இனிமேல் நன்மை வரும் என்பதனைக் கண்ணதாசன் உணர்த்தத் தவறவில்லை. அவர்களிடம் தான் கண்ட குறையை விளக்குகிறார்.

*கட்டுத் திண்ணையில் கால்கள் மடக்கி*
*கவுளி வெற்றிலை கடித்துக் குதப்பி*
*சட்டம் பேசி சரித்திரம் பேசி*
*......................*

விமர்சனம் செய்யும் வெள்ளை வேட் டி
வேதாந் தத்தில் வேதனை தீருமா?

என்று கேட்ட கண்ணதாசன் எங்கே, எப்படி பிரச்சனை உருவானது என்பதையும் கண்டறிந்தார். சுதந்திரம் கிடைத்த போது சோம்பேறித்தனம் கூடவே வளர்ந்தது. இது முன்னேற்றத்திற்கு முட்டுக் கட்டையாய் ஆனது. சமுதாயத்தில் தான் கண்ட குறையை எடுத்துச் சொன்ன கண்ணதாசனை நாம் இங்கு காண்கிறோம்.

கண்ணதாசன் சமூகத்தின் அடிப்படையை மாற்றியமைக்க விரும்பினார். அதற்சிசைவாகத்தான் தன்னை அரசியல் கட்சிகளோடு பிணைத்தும் கொண்டார். அரசியல் கட்சிகளின் துணையுடன் மக்களுக்கு நன்மை செய்ய விரும்பினார். ஆனால் அவர் மனம் எண்ணிய வேகத்தில் மாற்றங்கள் நடக்கவில்லை. இதனால் கவிஞர் பொறுமையிழந்தார். தலைவர்களின் மெத்தனமும் நேர்மைக் குறைவுமே மாற்றங்கள் தாமதிப்பதற்கான காரணங்கள் என்று நினைத்தார். அரசியல் அமைப்பு முறையிலும் சட்ட ரீதியிலும் நின்று கொண்டு செயல்படும்போது சிக்கல்கள் தோன்றும் என்பது கவிஞருக்குத் தெரியாதது அல்ல. ஆனால் அவர் மனம் மக்களுக்குச் சீக்கிரமே நன்மைகள் கிடைக்க வேண்டுமென்று விரும்பியது. அதனால் தான் அரசியல் தலைமைகளுடன் முரண்பட்டார். அத்துடன் நில்லாமல் மாற்றம் எனது மானிடத் தத்துவம் என்று கூறவும் துணிந்தார்.

## சென்னை மாநகர் மன்றத் தேர்தல்

1960ம் ஆண்டு சென்னை மாநகர் மன்றத் தேர்தல் வந்தது. அப்போது தென்றலில் கண்ணதாசன் ஒரு தலையங்கம் எழுதினார். அதில் முன்னேற்றக் கழகத்தவரே நகரத் தந்தையாக வருவாரென்று குறிப்பிட்டிருந்தார். அந்த நம்பிக்கையைக் கொண்டு அதற்காக உழைக்கவும் செய்தார். நிதி வசதியும் அப்போது கண்ணதாசனுக்கு அதிகமிருந்தது. அச்சமயம் தமிழகத்தை ஆண்ட காங்கிரசாரை எதிர்த்துத் தீவிரப் பிரச்சாரம் செய்தார்.

புதுவரிகளை மக்கள் மேல் சுமத்துவது என்பது ஆண்டு தோறும் இடம் பெறும் நிகழ்ச்சிதான். ஆனால் பிறப்பு வரி, இறப்பு வரி, என்று பல வரிகள் போட்ட காங்கிரஸ் ஆட்சி காய்கறிகளுக்கும் வரி போட்டது. அதனைக் கண்டு கொதிப்படைந்த கண்ணதாசன்.

அண்டமுழு தாய்ந்தாலும் அழுகலுக்கு
வரிபோட்டே அழவைத் தாரை
கண்டதில்லை

என்று குற்றஞ்சாட்டிப் பேசினார். காங்கிரஸ் கட்சியின் மேலுள்ள அதிருப்தி முழுமையாகக் கவிதை வரிகளாகின்றன.

வாழ்க்கை வளம் அழிவதற்கோ, வரிகொடுத்தே
இளைப்பதற்கோ மக்கள் ஆட்சி!

..................

வீழ்ந்திருக்கும் சமுதாயம் மென்மேலும்
வீழ்வதற்கோ காளை மாட்டை(த்)
தேர்ந்தெடுக்கக் கோருகிறார்? ஏழையரே!
காளைகளின் திமிர றுப்பீர்!

என்று பாடினார். இரட்டைக் காளைச் சின்னம் அன்று காங்கிரஸ் கட்சியின் சின்னமாக இருந்தது. அதனால் தான் காளைகளின் திமிரறுப்பீர் என்று பாடினார். அதாவது காங்கிரஸ் கட்சியைத் தோற்கடியுங்கள் என்று கூறினார். அவர்கள் ஆட்சியில் மக்கள் மேன்மையுறவில்லை என்பதனையும் அழுகிப் போகும் காய்கறிக்குக் கூட வரி போட்டிருக்கிறார்கள் என்பதனையும் எடுத்துப் பேசி மக்கள் மனதில் காங்கிரஸ் கட்சிக்கு எதிரான ஓர் அபிப்பிராயத்தை உருவாக்கினார். இதன் விளைவால் முன்னேற்றக் கழகமே நகரசபை ஆட்சியைக் கைப்பற்றியது. கழகத்தவரே நகரத் தந்தையுமானார்.

### கழகத்திலிருந்து வெளியேறல்

முன்னேற்றக் கழகக் கட்சியில் பெரும்பான்மையானவர்களுடன் ஒத்துப் போக முடியாத சூழ்நிலையில் தான் எதிர்பார்த்த 'தனிநாடு' ஆசையும் பூர்த்தியாகாத நிலையில் அந்த இயக்கத்திலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டார். 'போய் வருகிறேன்' என்ற தலைப்பில் தன் எண்ணத்தைத் தென்றலில் எழுதினார்.

என் இனிய நண்பர்களே!

உங்கள் வானத்திலிருந்து ஒரு நட்சத்திரம் விழுந்து விடப் போகிறது.

உங்கள் சோலையிலிருந்து ஒரு குயில் கண்காணா உலகிற்குப் பறந்து விடப் போகிறது.

உங்கள் மலர்த் தோட்டத்திலிருந்து ஒருமலர் உதிர்ந்து பறந்து விடப் போகிறது.

என்று எழுதிய அவர் 1961 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 9 ஆம் நாள் கழகத்தை விட்டு வெளியேறினார்.

### தமிழ் தேசியக் கட்சி

கழகத்திலிருந்து பிரிந்து வந்தவர் பிற தலைவர்களின் பின்னால் நிற்க விரும்பாமல் 'தமிழ் தேசியக் கட்சி' என்ற தனிக் கட்சியைத் தொடங்கினார். இவ்வேளையில் தான் சீனப் படையெடுப்பு நிகழ்ந்தது.

கட்சி வேற்றுமைகளையெல்லாம் மறந்து நாமெல்லாரும் ஒன்று என்ற நினைப்பில் அரசியல் கட்சிகள் எல்லாம் மத்திய அரசுக்கு ஆதரவு தெரிவித்தன. அந்த நேரத்தில் தான் கழகத்தினரால் திராவிட நாட்டுக் கொள்கையும் கைவிடப்பட்டது. அப்போது பொது எதிரியைச் சந்திப்பது என்பதே அனைவருடையவும் நோக்கமாயிருந்தது. சமுதாயப் பிரச்சனைகள் தமிழ்ச் சமுதாயத்திற்கு மட்டுமானதல்ல, நாடு தழுவியதாகும் என்பதனை இதன்வழி கண்ணதாசன் உணர்ந்தார். கழகத்திற்கும் தமிழ்ச் சமுதாயத்திற்கும் மறுமலர்ச்சி காணத் துடித்த கண்ணதாசன், நாடே மறுமலர்ச்சி காண வேண்டிய ஒன்று எனப் புரிந்து கொண்டார்.

1963 ம் வருடம் நேரு சென்னை வந்த போது அவருக்குக் கண்ணதாசன் ஒரு கவிதை படித்துக் கொடுக்க வேண்டுமென அன்று அகில இந்திய காங்கிரஸ் தலைவராக இருந்த காமராஜர் விரும்பினார். அவர் விருப்பப்படியே தமிழில் கவிதையை வாசித்துக் கொடுத்ததோடு அதன் ஆங்கில மொழி பெயர்ப்பையும் நேருவிற்கு அளித்தார். நேருவை அப்போது தான் கண்ணதாசன் நேருக்கு நேராகப்பார்த்தார். சீனப் படைபெடுப்பினால் மனம் நொந்து போயிருந்த நேரு மிகவும் வயதானவராகக் கண்ணதாசனுக்குத் தோற்றமளித்தார்.

### *தேசிய வெள்ளத்தில் கலந்தார்*

நேருவின் மறைவினை ஒட்டிக் காமராஜர் ஓர் அழைப்பு விடுத்தார். நாட்டின் நலனைக் கருதி தனித்தனியாகப் பிரிந்து நில்லாமல் சமதர்மத்தை நம்புகிற சக்திகளெல்லாம் ஒரு குடைக் கீழ் வரவேண்டுமெனத் தன் விருப்பத்தை வெளியிட்டார். ஒரே கொள்கையுடன் இரண்டு கொடிகள் வேண்டாமென நினைத்துத் தமிழ் தேசியக் கட்சியை காங்கிரசுடன் இணைத்தார். தானும் தேசிய வெள்ளத்தில் கலந்தார்.

தேசிய நீரோட்டத்தில் கலந்த கண்ணதாசன் இந்தியக் குடிமகன் என்ற நிலையில் இந்தியச் சமுதாயத்தின் ஓர் அங்கமென்ற நிலையில் இந்நாட்டின் பிரச்சனைகளைத் தீர்ப்பதில் தனக்கும் பங்கு உண்டு என்றுணர்ந்து செயலாற்ற முனைந்தார். இந்த உணர்வு அவருடைய பார்வையை விரிவடையச் செய்தது. ஆளுமைக்குப் புதிய பரிமாணத்தையும் தந்தது.

### *காங்கிரசில் பிளவு*

1969ம் ஆண்டு காங்கிரஸ் கட்சியில் ஏற்பட்ட பிளவு அவரை மீண்டும் மனவேதனையில் ஆழ்த்தியது. ஏழைகள் பக்கம் நிற்பது இந்திராகாந்திதான் என்று நம்பினார். அதே சமயம் ஏழைப் பங்காளன் காமராஜர் எதிரணியில் இருக்கிறாரே என்று வேதனையுமுற்றார்

காமராஜரால் நாட்டின் பிரதமராக்கப்பட்ட இந்திராகாந்தி தான் ஒத்துப் போகக் கூடாதா என்றும் நினைத்துப் பார்த்தார். இதனால் கண்ணதாசனுக்குக் குழப்பமே மிஞ்சியது. இருவரும் இணைந்து செயல்பட வேண்டுமென்றும் குரல் கொடுத்தார். தமிழகம் மேன்மையடைய அந்த மனிதனை அழையுங்கள் என்று காமராஜர் பக்கம் கைகளை நீட்டவும் செய்தார். தலைவர்கள் பால் மீண்டும் நம்பிக்கை குறைந்த நிலையில் அரசியலிலிருந்து ஒதுங்க ஆரம்பித்தார்.

*பக்தன் கண்ணதாசன்*

சிறு கூடல் பட்டிக் கிராமத்தில் ஆத்திகனாக வளர்ந்த கண்ணதாசன் சென்னையில் அரசியல் ஈடுபாடு வந்த போது சுயமரியாதைக்காரராக மாறினார். அப்போது அவரிடம் இரண்டு குணங்களினுடையவும் தாக்குதல்கள் இருந்தன. சில இடங்களில் வைதீகத்தையும் சில இடங்களில் சுயமரியாதையையும் காட்டிக் கொண்டார். இருந்தபோதும் அடிமனதில் ஆழமாகப் பதிந்திருந்த ஆத்திகம் அவரை எழுபதுகளின் ஆரம்பத்தில் முழுமையாக ஆட்கொண்டது.

1972ம் ஆண்டு 'தினமணிக் கதிரில்' அர்த்தமுள்ள இந்துமதம் தொடர் எழுதத் தொடங்கியதோடு தீவிரமான ஆத்திகரானார். பக்திப் பெருக்கில் பல கவிதைகள் இயற்றினார். கட்டுரைகள் பலவும் எழுதினார். மத ஈடுபட்டினையும் பிற மதங்களிடையே ஒற்றுமையை வளர்க்கவும் செய்தார். தன் கடந்த கால வாழ்வின் தவறுகளுக்காக இக்கால கட்டத்தில் மனம் வருந்தவும் செய்தார். தவறான போக்கின் பலன்களைப் பின்னாளில் அறுவடை செய்யும் நேரம் வந்த போது மனம் தானாக இறைவனிடம் சரணடைந்தது. இளமையில் செய்த தவறுகளுக்கு வடிகாலாக வைதீகத் துறையைப் பயன்படுத்திக் கொள்ளவும் முன் வந்தார்.

நேர்மைக் குணமுள்ள தன்னைக் கைவிட்டு விடாதே என்ற கோரிக்கையைத் தன் கிராமத்துத் தெய்வமான மலையரசியின் முன் வைக்கிறார் கவிஞர். பழகின பழக்கத்தாலும் நெஞ்சின் பாசத்தாலும் படும்பாடுகோடியாகும். ஆனால் அதனை உணர்ந்து கொள்வாரில்லையே என்று மனம் விம்முகிறார். பொய்யின் சபையிலே கை கட்டி நின்றிருந்தால் ஏராளமான பொருள் ஈட்டியிருக்கலாம். அதன் மூலம் புகழும் கிடைத்திருக்கலாம். ஆனால் உண்மையை நம்பினேன் எனும் கவிஞர்

புத்தியால் வாழவும் வைக்கலாம் ; நல்லவர்
புகழையும் மாய்த்து விடலாம்
பொருள் மட்டும் சேருமேல் நன்மையும் தீமையும்
பொருளால் நடத்தி விடலாம்

மத்தளம் போலிதில் சத்தியம் படும்பாட்டை
மாற்றவோர் சக்தி யிலையே!

என்று தன் இயலாமையைக் குறித்து வேதனையுடன் பாடுகிறார்.

தான் பிறந்ததையும் திருமணம் செய்ததையும் குழந்தைகள் பெற்றதையும் எல்லாம் நினைத்துப் பார்க்கிறார். ஆண்டுகள் ஒவ்வொன்றாய்ப் போகின்றன. வயதும் ஏறிக் கொண்டே போகிறது. நாளையே கூட மரணம் நேரலாம். இல்லை, நன்மை தீமை என நிகழ்ச்சிகள் மாறிமாறி வரலாம். எது வருவதானாலும் சரி, அதற்கு முன்னால் நம்மை ஆண்டவனிடம் அர்ப்பணித்து வரும் நாளிலெல்லாம் நல்ல வழிகாட்டு என்று அன்புடன் வேண்டுவதே சரி என்ற மனப்பான்மையையும் கொண்டார்.

துன்பங்களிலிருந்து விடுதலை

தானே ஏற்படுத்திக் கொண்ட துன்பங்களிலிருந்து, தானே போட்டுக் கொண்ட விலங்குகளிலிருந்து விடுதலை பெறச் சரியான வழி இறைபக்தியே என்று உணர்ந்து கொண்டார் கண்ணதாசன். உள் மனதில் ஒளித்து வைக்கப் பட்டிருந்த ஆத்திகக்கரு பின்னாளில் அர்த்தமுள்ள இந்து மதம் என்ற ஆலமரமாக வளர்ந்து தழைத்தது.

இளமைக் காலத்தில் நேராக நடக்காமல் போனோமே என்று பிற்காலத்தில் கண்ணதாசன் மிகவும் வருத்தப்பட்டார். உடலில் இருந்த சுறுசுறுப்பும் துருதுருப்பும் குறையத் தொடங்கிய வேளையில் தான் பக்தி உச்ச கட்டத்தைத் தொட்டது. பல படைப்புக்களையும் இயற்ற வேண்டுமென்ற ஆர்வமும் மேலோங்கியது. சோதனைகள் இல்லாமலிருந்த காலங்களில் வீண் வம்புகளில் ஈடுபட்டு அவ்விளையாட்டுக்களே வாழ்க்கை என்றிருந்தார். காலம் மாறி ஞானம் பிறந்த போது இறைவனிடம் அடைக்கலமானார்.

இறைவனிடம் அடைக்கலம்

சமயத் துறையில் ஈடுபட்ட பின்னர் ஒரு புது உற்சாகம் இருக்கிறது என்றார். தற்காலத்தைய இளைஞர்கள் இறை நம்பிக்கையுடன் வாழ வேண்டுமென்று அறிவுரையும் வழங்கினார். கடந்த காலத் தவறுகளின் பலன்களை அறுவடை செய்ய வேண்டி வந்த போது தான் இறைவனின் பெருமையை உணர்ந்தார். அந்நேரம் முதல் கண்ணனின் திருவடிகளை இறுகப் பற்றிக் கொண்டு ஒரு குழந்தை போலத் தனக்கு உடல் வலுவினைக் கொடு என்று கேட்க ஆரம்பித்து விட்டார். கண்ணனை நினைத்துக் கதறினார். கண்ணனிடம் யாசித்தார். அதன் எதிரொலியே அவர் வரிசையாக எழுதிய பாடல்கள்.

### கண்ணனே கவசம்

கண்ணனை நினைக்காத நாளில்லை; கண்ணன் புகழ் பாடாத நேரமில்லை என்றவாறு கண்ணனே எல்லாம் என்று தன்னை அர்ப்பணித்துக் கொண்டார். எப்போது எந்த இடம் என்று பார்த்து கணக்காக அளந்து தருபவன். ஆல்போல் நிழல் தருபவன். வாழ வைக்கும் கண்ணன் துயர்களிலிருந்து விடுவிப்பான் என்றும் பாடினார். தேவைப்பட்ட காலத்தில் தோன்றி கை கொடுப்பான் கண்ணன் என்றும் போற்றினார். சுமை தாங்கியாய்க் கண்ணனைக் கண்டார். நாம் அவனை நாடாவிடிலும் அவன் நம்மை விடமாட்டான். கெட்டோரையும் கீழோரையும் கெட்டதனால் அழுவோரையும் தேற்ற ஓடி வருவான் என்கிறார்.

தட்டாரைப் போல் நின்று
தங்கத்தால் மெருகேற்றி
பட்டாளத் தளபதி போல்
பலங்கொள்ள வைப்பான்

என்று மனமுருகிப் பாடுகிறார். இனியவனான அவனைப் பற்றிக் கொண்டால் எல்லா இன்பமும் வந்து சேருமென்கிறார்.

கண்ணன் மேல் அந்தாதி பாடியவர் கண்ணனே தனக்குக் கவசமாக வேண்டுமென்றும் பாடினார். தன் கவலைகளைமாற்ற வேண்டு மென்றும் பாடினார். கண்ணனின் புகழை மணிமாலையாக அடுக்கினார். கண்ணனை நினைப்போம் சொன்னது பலிக்கும் என்றும் நம்பிக்கையோடு கூறினார்.

இதனை அடியொற்றியே பகவத் கீதைக்கு விளக்கவுரை எழுதினார். மனிதனாகப் பிறவி எடுத்து, மனித இயல்புகளுக்குத் தன்னை ஒப்புக் கொடுத்து விட்ட தெய்வநிலையே கண்ணன் அவதாரமென்று பேசுகிறார். கண்ணன் ரத்த பாசம் முதல் புத்த தருமம் வரை போதிக்கிறான். தொழில் செய்வதிலிருந்து தொழிலைத் துறப்பது வரை விளக்குகிறான். அன்றாட கருமங்களில் இருந்து சத்திய தருமம் வரை தெளிவுபடுத்துகிறான் என்று கண்ணதாசன் கூறும் போதே அவருடைய கடந்த கால வாழ்வு நம் கண் முன்னே நிழலாடுகின்றது.

### வாழ்வின் எதிரொலி

தன் மனம் போன போக்கில், தான் விரும்பிய வழியில் எல்லாம் நடந்தவர் ஆனந்தத்தின் ரகசியமான சிருஷ்டி ரகசியத்தைப் பேசுகிறார். ஆசை வயப்பட்டவனுக்கு ஒரு நாளும் நிம்மதியில்லை. ஆதி சங்கரர் அதனால் தான் கோவிந்தனைப் பாடுங்கள் என்றார். அவருடைய 'பஜ கோவிந்தம்' ஆனந்தத்தின் ரகசிய இருப்பிடம் என்று கண்ணதாசன் மொழி பெயர்த்துள்ளார்.

பெண்களின் மார்பழகையும் தொப்புள் அழகையும் பார்த்து மதி மயங்கி ஆவேசம் கொள்ளாதே. மாமிசம், கொழுப்பு, இவற்றின் வேறுபட்ட உருவங்களே அவை என்று மனதில் எண்ணிக்கொள் என்கிறார்.

நல்லோர் உறவால் பற்றின்மை ஏற்படும். அது மதி மயக்கத்தை நீக்கும். அசையாத உண்மையை விளக்கும், வயது கடந்தபின் காதல் ஏது? செல்வம் அழிந்த பின் சுற்றம் ஏது? எனவே செல்வத்தாலும் சுற்றத்தாலும் இளமையாலும் அகங்காரம் கொள்ளக் கூடாதென்கிறார். யாரிடத்தும் சண்டைக்கோ சமாதானத்திற்கோ முயலாதே என்கிறார்.

பொன்மழை

தனக்கு எவ்வளவு வருமானம் வந்த போதும் போதாது என்ற நிலை உண்டானதால் பொன்மழை பொழிய வேண்டி ஆதிசங்கரரின் கனகதாரா தோத்திரங்களுக்குத் தமிழ் வடிவம் தந்தார். இந்த நூலை எழுதிய பிறகு தனக்குப் பண நெருக்கடி குறைந்து விட்டது என்று கூறிய கண்ணதாசன் தன்னைப் போல் பிறருக்கும் நன்மை வரட்டுமென்று விரும்பினார்.

பக்தியின் ராகங்கள்

திருமாலைத் தமிழில் பள்ளியெழுப்பினார். ஆண்டாள் திருப்பாவைக்கும் அபிராமி அந்தாதிக்கும் விளக்கம் கொடுத்தார். அம்பிகையின் அழகைத் தரிசனம் செய்துபாடினார். இவற்றையெல்லாம் மன அமைதி தேடியே கண்ணதாசன் படைத்தார். காசு பண ஆசையில் வேசியரைப் போல் கறக்கும் புத்தி கூடாதென்றும் நோய்கள் பல வந்தாலும் தாங்கும் மனம் வேண்டுமென்றும் பாடினார்.

தவறுங்கள் ; திருந்துங்கள்
திருந்திய பின் தவறுங்கள்
தடம் புரண்ட
விவரங்கள் மட்டும் அவன்
சந்நிதியில் ஒரு நாளில்
வெளியிடுங்கள்

அவன் உங்கள் பாவத்தை அப்போதே மன்னிப்பான் என்று கண்ணன் மேல் தன் பாரங்களையெல்லாம் இறக்கி வைத்து விட்டார்.

கண்ணா, உன்னை ஒரு வயதில் உணர்ந்திருந்தால் உனைப் போலிருந்திருப்பேன். ஒன்பதாம் ஆண்டில் உணர்ந்திருந்தால் உனைப் பற்றி வாழ்ந்திருப்பேன். இருபதில் கூட உனைத் தெரிந்து கொள்ளவில்லை. நாற்பது வயதும் கடந்த பின்னால் நாய்பட்டபாடு

பட்ட பின்னால் உன்னை நாடினேன் என்றவர். தூய நாதனிடம் எழுபது வயது கொடுத்து காத்தருளும் படியும் வேண்டினார்.

### நெருக்கடி நிலைக்கு ஆதரவு

உள்நாட்டு நெருக்கடி நிலை அமுலுக்குக் கொண்டு வரப்பட்ட போது கண்ணதாசன் மகிழ்ந்தார். சோம்பேறிகளாய் இருக்கும் மனிதர்கள் சுறுசுறுப்புடன் இயங்குவார்கள் என்று மன அமைதி கொண்டார். மக்களைக் கட்டாயப்படுத்தி சமுதாயத்தில் முன்னேற்றம் கண்டு விடலாமென்று எண்ணி இந்திராவுக்கு முழு ஆதரவு தெரிவித்தார். நேருவே, மக்களிடம் கடுமையாக நடந்து கொண்டிருக்க வேண்டுமென பாடிய கண்ணதாசன், அவர் மகள் அதைச் செயல்படுத்திய போது ஆதரித்ததில் அதிசயமில்லையே!

### அரசியல் துறவு

பின்னர் நடந்த நாடாளுமன்றத் தேர்தலில் காங்கிரஸ் தோல்வியுற்ற பிறகு கவிஞர் மௌனமானார். தீவிர அரசியலிலிருந்து ஒதுங்கி வாழலானார். ஏகதேசம் அரசியல் துறவறம் பூண்டவராகவே காட்சியளித்தார். பிரச்சனைகளைச் சுட்டிக் காட்டி அவற்றை மாற்றும் வழி முறைகளையும் கூறும் கவிஞனது கருத்தை மக்கள் ஏற்றுக் கொள்ள வில்லையெனில் அவை தீரவும் வாய்ப்புக்கள் இல்லையே

### நாம் காணும் ஆளுமை

கவிஞரின் மனதை முழுமையாக அவர் படைத்த இலக்கியங் களிலிருந்தும் வாழ்ந்த முறையிலிருந்தும் தெரிந்து கொள்ள முடிகிறது. கவிஞருடைய மனம், பல்வேறு கால கட்டங்களில் பல்வேறு விதமாகச் செயல்பட்டதனால் பல மாற்றங்களையும் பார்க்கிறோம். தன் மன இயல்புக்குத் தக்கவாறு மாறுபட்டக் கருத்துக்களைக் கூறியிருக்கிறாரே தவிர கொள்கைகளில் முரண்படவில்லை. ஒவ்வொரு கூற்றும் ஏதேனுமொரு வழியில் கொள்கையை நோக்கிய பயணத்திற்குத் துணை செய்வதாக அமைவதாகும். சூழ்நிலைகளுக்கேற்ப மனத்தளவில் ஏற்பட்ட பாதிப்புக்களால் உருவான கவிதைகளின் அடிப்படையில் ஆளுமையில் முரண்பாடு காண்பது முறையன்று. வாழ்த்துக்களும் வசை பாடல்களும் காரண காரியங்களோடு அமைந்திருக்கின்றன. இவற்றின் பின்னணியையும் நாம் அளந்து பார்க்க வேண்டும். எதிர்ப்புப் போக்கு எதனால் ஏற்பட்டது என்றும் சிலரை வெறுப்பதும் பழிப்பதும் சிலரை ஆதரிப்பதும் போற்றுவதும் எதன் அடிப்படையில் என்றும் விளக்கமாக நாம் பார்க்க வேண்டும். தொடக்க நிலையிலிருந்து போகப் போக வளர்ந்து பெருகிவரும் பண்பு, கொள்கையாக விளங்குவதே ஆளுமையாகப் பரிணமிக்கிறது.

தொடக்கத்திற்கும் இறுதிக்கும் இடையே அற்றுப் போகாத பாலமாக அமைந்து கிடக்கும் அடிப்படைக் கொள்கையைப் பார்க்கும் போது கவிஞரின் ஆளுமை வெளிப்படுகிறது.

தான் இருந்த தளத்திலிருந்து புதிய தளமொன்றை உருவாக்கும் முயற்சி கண்ணதாசனிடம் இருந்தது என்பதனைத் தெளிவாகக் காண்கிறோம். மக்கள் குறையையோ தலைக் குனிவையோ நீக்கும் போதனைக்கு அவரது ஆளுமை இலக்காகியது. கவிஞருடைய சோகம் நிறைந்த மனம் தொடக்கம் முதல் இறுதிவரை புதைந்தும் மறைந்தும் நிறைந்தும் நின்று, தலையினை நீட்டியும் கவிழ்த்தும் அவருடைய ஆளுமையைச் சுட்டுகிறது.

---

# 3

# தன்னுணர்ச்சிக் கவிஞன்

தன்னுணர்ச்சியைப் பாடாத கவிஞனே இல்லை ஒரு கவிஞன் தன்னுடைய அனுபவத்தை வெளியிடுவதில்தான் எத்தனை விதம். மிகவும் வெளிப்படையாகப் பேசும் போது அனுபவம் ஆடை போர்த்தாமல் வெளிவரும். இந்த அனுபவம் கவிஞனுக்கு ஏற்பட்ட சொந்த அனுபவமாக இருக்கலாம். இல்லை, பிறர் அனுபவத்தோடு தன்னை ஒன்றிக்கொண்டு பாடுவதாகவும் அமையலாம்.

தன் சொந்த உணர்ச்சிகளையும் எண்ணங்களையும் ஆசைகளையும் அச்சங்களையும் நம்பிக்கைகளையும் காலத்தின் அனுபவத்தினூடே கவிஞன் பிரதிபலிக்கிறான். அவை இதயத் தளத்திலே பிறந்து ஆன்மாவின் ஒலியைக் கேட்க வைக்கின்றன.

கண்ணதாசன் கவிதைகளில் இதயத்தின் மகிழ்ச்சியும் ஆதங்கங்களும் வேதனைகளும் ஆழமாக வெளிப்பட்டுள்ளன. அனுபவங்களை அவை அப்படியே உணர்த்துகின்றன.

கவிஞர் ஓர் அனுபவக்களஞ்சியம். தெரிந்தும் தெரியாமலும் அனுபவங்களைப் பெற்றவர். விரும்பியும் விரும்பாமலும் அனுபவங்களை வரவு வைத்தவர். எல்லாம் வந்த பிறகு, அவை வந்ததற்காக அழுதவர். தனக்குக் கிடைக்க வேண்டியவை கிடைக்காமல் போனதற்காகவும் துயரம் கொண்டவர். எதையும் ஒளித்து வைத்தவரல்ல கவிஞர். எல்லாவற்றையும் நம் முன்னே கடைபரப்பி வைத்துவிட்டுத் தன்பால் நம் அனுபவத்தைக் கேளாமலே பெறுகிறார்.

அவருடைய அனுபவங்கள் பொருளாக விரிந்து தானே வடிவமைத்துக் கொண்டுள்ளன. அவை அவருடைய இதயத்தை நமக்குக் காட்டுகின்றன. அதற்குள்ளே நாம் பயணம் செய்யும்போது தான், ஊர்ந்து செல்லும் உணர்ச்சிகளின் உருவங்களை நாம் அடையாளங் கண்டு கொள்கிறோம்.

இன்பங்களை, காதலை, அதன் தோல்வியை, மனச் சோகங்களை வெளியிடும் குரலாக அக்கவிதைகள் அமைந்துள்ளன.

ஒரு கிண்ணத்தை ஏந்துகின்றேன்
பல எண்ணத்தில் நீந்துகின்றேன்

என்று பாடிய கவிஞர் தன் வாழ்வில் இன்பத்தை முழுமையாகத் துய்க்க விரும்பியவர்: துய்த்தவர்.

பித்தனிருக்கின்ற காலம் வரையிலும்
பெண்ணை ரசிக்கட்டுமே - மது
கண்ணை மறைக்கட்டுமே

என்பது கண்ணதாசனின் மனம். தன்னைப் பம்பரம்போல் ஆட வைக்கும் ஆசைகளையும் அதற்குக் காரணமான பெண்களையும் அவரால் மறக்கவே முடியவில்லை. தத்துவம் பேசி ஞானிகள் சிலர் சுடலைக்குப் போகும் இந்த உடம்பில் என்னதான் இருக்கிறதென்று கேட்கும் போது அவர் மனம் தடுமாறுகிறது. ஆனால் உடனே அவர் மனம் இன்பத்தின்பால் திரும்பி மனதுக்கு தைரியத்தை வரவழைத்தும் கொள்கிறது.

## பாலுணர்வும் பெண்மையின்பமும்

இளமை கொலுவிருக்கும், பெண்ணையும் இனிமை மயக்கந்தரும் மதுவையும் தன்னிரு கண்களாகக் கொண்டிருந்தார் கண்ணதாசன். இயற்கையின் சீதனப் பரிசான பெண்ணின்பால் கண்ணதாசனுக்கு அளவு கடந்த அன்பு. பெண் இல்லாமல் சுகமில்லை உலகத்திலே என்பது அவரது கணிப்பு. இளமைக்காலம் முதலே மனம் போனபடி வாழ்ந்தவர். பாலுணர்ச்சியிலும் பெண்மையின்பத்திலும் அளவுக் கதிகமாக மன போதையும் அடைந்தவர் கண்ணதாசன். இவ்விரு பழக்கங்களும் அவரிடம் இணைபிரியா நட்புக் கொண்டிருந்தன.

மோகத்தை வைத்து அதில் வேகத்தைக் கொடுத்து விசைதட்டும் பாணியிலே தாகத்தையும் வைத்து இவ்வுடலை இறைவன் ஏன் படைத்தான்? நாம் அனுபவிக்கத்தானே! அதனால்தான்,

பெண்களை விட்டென்ன பேரின்பம், வழிகாட்டும்
கண்களை விட்டென்ன கடவுணெறி

என்று கேட்கிறார். காமுகனும் மாண்டான், கடவுள் நெறி பேசும் மாமுனியும் மாண்டான். இதிலே பெரியவன் என்று காலம் யாரையும் விட்டு வைக்கப் போவதுமில்லையே! எனவே நாம் சுக சரித்திரம் படைப்போம் என்கிறார்.

பெண்மணீ உன்னைப் பெரிதாய் மதிக்கின்றேன்!
கண்மணி உந்தன் காலை வணங்கு கின்றேன்!
உன்மணி வாய்ச்சரம் ஊற்றிக் கொடு, தினமும்
என்மணி வாயோடு இணைந்தே, கிடந்துவிடு!

என்று கேட்டுக் கொள்கிறார்.

மங்கைக்கோர் அழைப்பு

பெண்ணே! கிண்ணத்தில் மதுவை ஊற்று. போதையில் மூழ்கும்போது உன் எண்ணங்களெல்லாம் இதழ்களில் ததும்பட்டும். வண்ண மேனியைக் காட்டு. வடிவம் முழுவதும் கண்ணாலே பார்க்கின்றேன் எனப் பாடுகிறார்.

................கண்ணாடி மேனியிலே
*சிற்றெம்பு போலச்சிற் றணுக்கா லத்தனையும்*
ஒவ்வொன்றாய்ப் பார்த்தே ஓடித் திரிகின்றேன்

என்று இன்பக் கதையைப் பேசிய கவிஞர் மங்கையே உன்னை ஆரத் தழுவுகின்றேன். ஏட்டில் எழுதாத எழுத்தெல்லாம் பாட்டாய் உன் உடலில் படிக்கின்றேன் என்று மங்கைக்கோர் அழைப்பும் விடுக்கிறார். மா கவிஞன் பைரன் தழுவாத பாவையரே! பாரசீகக் கவிஞன் உமாரைச் சேராத பைங்கிளிகளே என்னை உங்கள் மார்பினில் வைரம் போல் சூடுங்கள் என்கிறார்.

ஓர்கையிலே மதுவும் ஓர்கையில் மங்கையரும்
சேர்ந்திருக்கும் வேளையிலே ஜீவன் பிரிந்தால்தான்
நான்வாழ்ந்த வாழ்க்கை நலமாகும்; இல்லையெனில்
ஏன் வாழ்ந்தாய் என்றே இறைவன் எனைக்
கேட்பான்.

என்பதனால் மதுவிற்கும் மங்கைக்கும் அடிமையானதற்குத் தன்னளவிலான காரணம் ஒன்றும் கற்பிக்கிறார்.

மது விரட்டிய மரணபயம்

மனித மனம் எதிர்நோக்கி நிற்கும் ஒன்று மரணம். அது தரும் அச்சம், சிலர்க்கு அளவிட முடியாதது. சில மனங்கள் அதனையும் ஏற்றுக் கொள்ளும் பக்குவம் பெற்றிருக்கும். ஆனால் கண்ணதாசனோ, வசமான பெண்மையும் வளமான கிண்ணமும் உள்ள மட்டும் மரண பயம் வராது என்கிறார்.

சுட்டெரித் தாலிந்த மேனியும் சாம்பலாய்
சுடுகாட்டு மண்ணி லுருளும்
சுவையான பாடகன் போயினான் எனச்சொல்லி
சொந்தமும் வீடு செல்லும்
................
கண்மூடி மேனியை மண்மூடு முன்னமே

காலத்தை அனுப விப்பேன்
தட்டத்திலே கிண்ணம் மதுவைத் தெடுத்துவா
தங்கமே! பக்கம் நின்று
தழுவாத மேனியைத் தழுவுநீ எப்போதும்
சாராது மரண பயமே!

என்கிறார்.

மதுவே தருமம்

ஒரு கிண்ணத்தைக் கையில் ஏந்தியதற்கான காரணத்தையும் கண்ணதாசன் கூறுகிறார். பொய்யரையும் புல்லரையும் புறம் பேசுவோரையும் ஒரு பொழுதேனும் மறக்க வேண்டும். கையில் நில்லாமல் ஓடிக் கொண்டேயிருக்கும் பொருளை போதையினூடே காணவேண்டும். தையலின் செவ்விதழைத் தையல் போட்டுண்ண வேண்டும். அமைதியான மனதுடன் சங்கீதம் பாடவேண்டும். இதற்காக மதுவையும் மங்கையையும் அருகே அழைத்தால் அது தர்மத்திற்கு விரோதமான செயல் அன்றோ? என்ற கேள்வியும் அவர் மனதில் உடன் எழுகிறது. அதற்கு விளக்கம் தருமுகமாக

தர்மாதர் மம்எலாம் சாவுக்குப் பின்னரே
தங்கமே கிண்ண மெங்கே!
சரிபாதி நீயுண்டு தருவாய்என் கையிலே
தழுவாது மரண பயமே!

என்று பாடியிருக்கிறார். உலகம் பிறந்ததே இந்த இரண்டிலுந்தான் என்பவர், மதுவே! நின் ஊற்றில் ஆடாதவர்க்கெல்லாம் வாழ்க்கையே மரணபயமென்று பேசுகிறார்.

காலமோ யாருக்காகவும் நில்லாமல் போய்க் கொண்டேயிருக்கிறது. நேற்றைய பொழுது முடிந்துவிட்டது. நாளைய பொழுது இனிமேல் தான் பிறக்க வேண்டும். இந்நிலையில் கவிஞர் பாடுகிறார்.

ஐயகோ! காலமே போகின்ற தையகோ!
அருகில்வா மதுக்கிண் ணமே!
ஆண்டவன் நேர்வந்திங் கழைத்தாலும் என்னையே
அணுகாது மரண பயமே!

நேற்றைக்கும் நாளைக்கும் நடுவிலே இன்றுநான்
நினைப்பவை எனது வசமே!

*நிழலாடும் கிண்ணமே நீயுள்ள வரைஎன்னை*
*நெருங்காது மரண பயமே!*

இங்கு கவிஞரின் புது விளக்கத்தை உணர்கிறோம்.

*தீராத ஆசை*

பெண்கள் மடியிலே புரண்டும் மதுவைக் குடித்தும் உலக இன்பங்களை அனுபவித்துக் கொண்டேயிருக்க இருபதே வயதாய் என்னை இருநூற்றி ஐம்பதாண்டுகள் இறைவன் வைத்திருக்க வேண்டுமென்று தன் ஆசையை வெளியிடுகிறார். ஆனால் இந்தக் கோரிக்கையை இறைவன் ஏற்க மாட்டானே என்றும் ஆதங்கம் கொள்கிறார்.

இறைவனா விடுவான்? என்னை
இருபாலும் விலங்கு போட்டுக்
குறையுள்ள மனித னாக்கிக்
குரங்கென ஆட்டு வித்து
முறையாக வயது போக
முதுமையும் நோயும் தந்து
சிறைவாசம் முடிந்த தேபோல்
ஜீவனை முடித்து வைப்பான்

என்று வருத்தப்படுகிறார் கவிஞர்.

சோகத்தை மீறின சுகம்

இன்பத்தின் கதையைப் பாடினாலும் காதலைப் பாடினாலும் கண்ணதாசனின் அடிமனம் சோகத்தையே ஒலித்துக் கொண்டிருக்கிறது. அதனால் தான் இன்பத்தைப் பாடும் மனம் அதன் ஈரம் காயும் முன்னே துன்ப வீணையையும் மீட்டுகிறது. அணைக்கவோ கைகள் இரண்டு தான். உறவை அனுபவித்து வாழ்வில் இணையவோ உள்ளம் ஒன்றுதான். பெரும் பெரும் நினைவுகளையெல்லாம் காலன்தான் கவர்ந்து செல்வானே! எல்லாவற்றையும் அளந்துதான் அந்தத் தேவன் கொடுத்திருக்கிறான் என்று தனக்குத்தானே மன அமைதி கொள்கிறார். துன்பங்களுக்கிடையிலும் கண்ணதாசன் தன் உள்ளக் கிடக்கையை தெள்ளத் தெளிவாகச் சொல்லியிருக்கிறார்.

கட்டழகானதோர் கற்பனை ராஜ்ஜியம் கட்டி முடிந்ததாம். அதிலொரு கட்டிலும் அமைந்ததாம். அங்கு

..........கொடும்
சட்டங்கள் தர்மங்கள் ஏதுமில்லை - இன்பச்

சக்கரம் சுற்றுதடா - அதில்நான்
சக்கர வர்த்தியடா

என்று பெருமையாகப் பாடுகிறார்.

கன்னி ஒருத்தியைக் கூடுகின்ற ஆசை நெஞ்சில் குன்றாத வேளையில் மனந்திறந்து பேசுகிறார். தன் கடந்த கால வாழ்வின் நிகழ்ச்சிகளைப் படம் பிடித்துக் காட்டுகிறார். கட்டிலிற் கிடந்த பெண்களைக் காவியமாக்கியதையும் கூறுகிறார். அவர்கள் கட்டளைக் கிணங்க அவர்கள் கைகளில் ஒடுங்கியதையும் மறைக்கவில்லை.

பட்ட இன்பம் பார்த்த இன்பம் பத்து நூறு ஆயிரம்
கொட்டுகின்ற ஆசை இன்னும் கோடி கோடியே

என்று அதனாலேயே அழுத்தந்திருத்தமாகப் பாடினார்.

ஒன்றுக்குள் ஒன்று

ஊமைக் காயங்களின் வேதனையை மறந்து வாழத்தான் மதுவையும் மங்கையையும் நாடினார். மனதையும் நினைவையும் ஏதாவதொன்றில் மூழ்கடித்துத் தன் சோகங்களை மறக்க முயன்றார். மயக்கமும் கலக்கமும் வரும்போதெல்லாம் இவற்றின் உதவியால் தன் கவலைகள் பறந்தன என்று நினைப்பதும் திரும்பவும் மன வேதனையைப் பெறுவதும் அதை மாற்ற இவற்றின் உதவியை நாடுவதும் ஒன்றுக்குள் ஒன்றாகக் கலந்தது உண்மை.

மது தந்த துயரம்

விளையாட்டுப் போக்கில் பழகிக் கொண்டது தான் மதுப்பழக்கம். அதை விட்டுவிட பலமுறை முயன்றும் முடியாமல் போனது. இதனால் மனத்துயரம் அதிகமானதே தவிர குறையவில்லை. குடிக்கின்ற நேரம் வந்துவிட்டால் கவிஞருக்கு இருப்புக் கொள்ளாதாம். அந்நேரம் அருந்துவதற்கு மது கிடைக்காவிட்டால் எல்லோர் மீதும் எரிச்சல் வருமாம். கிடைக்காதது கிடைத்ததுபோல் மனம் மகிழ்ந்து, அந்த ஏக்கத்தில் கிடைக்கும் எதையும் குடித்திட மனம் வேகம் கொள்ளுமாம்.

நல்லது கிடைத்திட வில்லை என்றால் - மனம்
நாட்டுச் சரக்கினைத் தேடச் சொல்லும்
இல்லையென் றால் அது விஷங்குடிக்கும் - புத்தி
இருப்பதும் அன்று மறந்து விடும்!

என்று உண்மையைப் பாடியுள்ளார். குடித்தபின் பேசும் பேச்சுக்களால் பிறருடன் வழக்குகளே வளரும். மறுநாள் விடிந்தபின் யாரும் எடுத்துரைத்தால் பேசிய பேச்சுக்கள் நினைவில் தங்காமல் மறந்திருக்கும்

சுயமரியாதையை இழக்கச் செய்யும் மது நம் பெருமையை மட்டுமல்ல, உடலையும் கெடுக்கும். மதுவைப் பழகிவிட்டுத் தவித்த கண்ண தாசனின் மனநிலையை இங்கு நன்குணர்கிறோம்.

மதுவைத் தொடாவிடில் சபைகள் எல்லாம் நம்மை மதிக்கும். அந்த மதிப்பினால் பற்பல லாபங்கள் உண்டாகும். அதிகநாள் உழைத்திட உடலில் வலுவிருக்கும். அனைவரும் வணங்கிப் போற்றும் நிலையுமிருக்கும். மது அருந்திய பின்னால் என்ன செய்தோம் என்று புரிவதில்லை. இருக்கும் இடமும் மனதில் நிற்பதில்லை. குடும்ப கௌரவமும் மறைந்து போகும்.

ரகசியம் அனைத்தையும் உளற வைக்கும் - தினம்
ராத்திரி முழுதும் விழிக்க வைக்கும்

அவசரமான வேலைகளையும் அப்புறம் ஆகட்டுமென மாற்றி வைக்கத் தூண்டும். எனவே கண்ணதாசன் நமக்கோர் எச்சரிக்கை விடுக்கிறார்.

சுயமரி யாதையை இழக்காதே - உயர்
சுத்தசன் மார்க்கத்தை மறக்காதே
பெயரினைப் பழக்கத்தில் கெடுக்காதே - உன்
பெருமையைக் காத்திடக் குடிக்காதே!

கவிஞரின் வெளிப்படையான இந்த வேண்டுகோளும் அன்புக்கட்டளையும் தான் நம் மனதில் சோகத்தை எழுப்புகிறது.

காதல் மனம்

கண்ணதாசன் மிகவும் இளம் வயதில் ஒரு பெண்ணின்பால் காதல் கொண்டார். கிராமத்துச் சூழ்நிலையில் அந்த நாளில் நினைத்த பெண்ணின் கரம்பிடிக்க வழியில்லாமல் போனது. அடுத்து, சென்னைக்கு வந்தபோது நகரத்தின் பரபரப்புக்கிடையே கட்டுப்பாடுகளற்ற சூழ்நிலையில் மீண்டும் மனம் காதல் சிறகை விரித்தது. இங்கு அந்தக் குயில் கண்காணா இடத்திற்கே போய்விட்டது. ஒரு சோகத்தை மறக்க முயன்றபோது மீண்டும் மனம் தோல்வியில் விழுந்தது. இந்தக் காதல் தோல்வியின் சுமையைத் தன் கவிதைகளில் வடித்துத் தந்து ஆறுதல் தேடிக் கொண்டுள்ளார் கண்ணதாசன்.

கவிஞரின் அனுபவங்கள் கவிதையின் பொருளாக விரிந்து தானே வடிவம் கொண்டுள்ளன. அவர் இதயத்தை அவை நமக்குக் காட்டும்போது அடிநாதமாக ஓடும் தன்னுணர்ச்சிகளின் உயிரூட்டமான சொல்லோவியங்கள் உருவாகியுள்ளன.

முதற்காதல்

மனதில் கள்ளமில்லாத பருவம், குழந்தை மனம் கொண்ட காவிரி, அவளை நினைவு கூர்கிறார். என்னவென்று அறியாத உள்ளுணர்வில் இரு மனங்களும் ஒன்றின. அவளுக்குத் தன் இதயத்தில் இடம் கொடுத்தாயிற்று. ஆனால், தன் காதலை வெளிப்படுத்தவோ, அவளைத் தன் மனைவியாக்கிக் கொள்ளவோ முடியாத நிலை. இருவருமே வாய் வார்த்தை பேசவில்லை. காதல் நாடகம் கண்ணில் அரும்பி மனதினுள் மடிந்தும் விட்டது. அவள் நாணத்தைப் போர்த்திக் கொண்ட ஏக்கம் ஒரு பக்கம்; தன்னுடைய இயலாமை மறுபக்கம். இந்நிலை அவர் மனதை வாட்டுகிறது.

அவளுடைய திருமண நாளும் வருகிறது. மனதினுள் மணப் பந்தலைக் கண்டும் மேளத்தின் ஆரவாரத்தைக் கேட்டும் வேதனைப் படுகிறார். தன்னுடைய பேதைத் தன்மைதான் இதற்குக் காரணமோ என்றும் அவர் மனம் அலை மோதுகிறது. அவள் சிரித்தபடியே தாலியை ஏற்றிருப்பாளென்று நினைத்துக் கொண்டிருந்த வேளையில் தான் நண்பர்கள் வருகிறார்கள். மணப்பந்தலில் காவிரி, சிலையாக நின்றிருந்ததைக் கேட்டு, கண்ணதாசன் மனம் மேலும் உருகுகிறது. நாழிகைகள் நாளாக, வாரமாக, தீப்பட்ட மனங்களும் தேறின.

இந்நிகழ்ச்சி நடந்து சிலநாள் கழித்துத்தான் திருச்சிக்கருகே புதுக்கோட்டையில் 'திருமகளில்' வேலைக்கமர்ந்தார். ஐந்தாண்டு களுக்குப் பிறகு தன் கிராமத்திற்குப் போனபோது அவர் கண்ட காட்சி. கனவல்லவே அது. அவருடைய காவிரி அங்கே வந்திருந்தாள்.

அழுதகண்; வரண்ட மேனி
தாயெனும் நிலையில் நின்று
தரித்திரப் படுக்கை கொண்டு
.....................
வாழ்வினை இழந்த தோற்றம்!
சேய்களை அணைத்த வாறு
தீயிடை மலர்போல் நின்றாள்!

அவளிடமிருந்த பசுமையெல்லாம் எங்கே? தாயான காலத்தில் அந்தக் கூத்து நிறைவேறின நேரத்தில் - கரைந்ததோ என்று மனம் நோகிறார்.

பதினேழு வயதே நிரம்பியிருந்த கண்ணதாசன் தான் அந்தப் பெண்ணை மனைவியாய் அடைய என்ன முயற்சிகள் செய்திருக்க முடியும்? அவரை விட வயதில் குறைந்த காவிரிதான் தன் வீட்டில் எப்படித்தன் காதலைச் சொல்லியிருக்க முடியும்? பார்வைக்கு மேலே

காதலைத் தொடர அன்றைய பண்பாட்டு நிலையும் சமுதாயக் கட்டுப்பாடும் வீட்டுச் சூழ்நிலையும் இடமளிக்கவில்லை. கவிஞரின் மனதில் இக்காதல் ஆறாத காயத்தை ஏற்படுத்திவிட்டது.

### அடிமனதின் கதை

கண்களின் காதல் மயக்கம் தெளிந்தபோது ஞானம் பிறக்கிறது. தன் நிலையை எண்ணிப் பார்க்கிறார்.

தாயும் கடன்பட்டாள்
தந்தையவன் உடன்பட்டான்
யானும் உயிர்பெற்றேன்

சேயின் நிலை பெற்றுத் தினம் தினம் வளர்ந்து ஆய கலைக ளெல்லாம் கற்றேன். ஆசை வயப்பட்டேன்; மனையாளைப் பெற்றேன். நண்பர்களைப் பெற்றேன்; அவர்கள் நினைவாகவே வாழவும் செய்தேன். குற்றங்களே சொத்தாகிவிட்டன. குணம் கடைச்சரக்காக மாறிவிட்டது. சுற்றமும் பகை கொண்டது. மானிடரைச் சரியாகப் புரிந்து கொள்ளாமல் பம்பரம் போல் ஆடுகிறேன்' என்று தன் அடிமனதில் புதைந்துள்ள சோகத்தைப் பேசியுள்ளார்.

### ஞானம் பிறந்த கதை

மனம் போனபடி அனுபவித்த பின்னர் ஞானம் பிறந்த கதையைச் சொல்கிறார். நூலிடையின் கீழ் அழுந்தி ஆலிலையின் மேல் விழுந்து இன்பங்கள் நுகர்ந்தது ஒரு காலம்.

முத்தமென்றும் மோகமென்றும்
சத்தமிட்டுச் சத்தமிட்டுப்
புத்திகெட்டுப் போனதொரு காலம் - இன்று
ரத்தமற்றுப் போனபின்பு ஞானம்!

நாடித் துடிப்புள்ள மட்டும் நாடிவந்த மங்கையர்கள் தேடித்தந்த இன்பம் ஒரு கோடி என்றால் இன்று ஞானம் வந்தது தன்னைத்தேடி என்கிறார். கால நேரம் அறியாமல் விளையாடின விளையாட்டின் பலன், இன்று சோர்ந்து போன உடலும் மனமும் வந்தது. வெட்டுப்பட்ட புண்களிலும் விம்மி நின்ற கட்டியிலும் கட்டுப்பட்டு நின்ற காலம் ஒன்றுண்டு. இன்று கொட்டுகிறது ஞானமென்னும் மேளம் என்று மனந்திறந்து பாடியுள்ளார். தன் மேனிபட்ட பாடும் பல ராணிகளின் மேனி தன்னிடம் பட்ட பாடும் தன்னை ஞானியாக்கியது என்கிறார்.

பொன்னிறதி யவ்வளவு
போனரத்தம் போனபின்னர்

கன்னியரை ஏசுதடி உள்ளம் - இது
காலிடறி யானைவிழும் பள்ளம்!

என்று சுயவிமர்சனமும் செய்து கொள்கிறார்.

பட்டகடன் தீர்ப்பதற்குக்
கட்டிக்கொண்ட பெண்களுக்குக்
கொட்டித்தந்த இன்பம் ஒரு கோடி - அதில்
ஒட்டி வந்த ஞானம் ஒரு பாதி

என்று ஞானம் வந்த வழியைப் பின்னும் தெளிவாக்குகிறார்.

இளமைக் காலத்தில் இன்பம் வேண்டும் இன்னும் வேண்டும் என்ற நினைப்பு மட்டுமே இருந்தது. இரத்தத்தின் வேகம் குறைந்த போது தான் கணக்குப் போட்டுப் பார்க்கிறார். தான் கூட்டி வந்த இன்பங்களெல்லாம் ஏட்டிலே நின்று கணக்கு காட்டும் வேளையில் உடலை நோய்வந்து வாட்டுகிறது. ஆடும் வரை ஆடி, உடல்·ஆடுகின்ற காலமும் வந்தபோது கண்ணதாசனின் மனம் இறைவனை நாடுகிறது.

காட்டுவதைக் காட்டிரசம்
கூட்டி வைத்த பெண்மைஎன்னை
வாட்டுதடி நோய்வடிவில் வந்து - அது
கூட்டுதடி ஞானமென்னும் சிந்து!

எனும் கண்ணதாசன், தன்னுடைய பழக்கவழக்கங்கள் தன்னை எவ்வளவு தூரம் பாதித்தது என்பதனை இங்கு வாக்கு மூலமாக்கி யிருக்கிறார்.

நினைவுகள் தன்னை ஓட ஓட விரட்டுவதனால் உறவுகளை விட்டே ஓடத்துணிகிறார். கூட இருந்த நண்பர்களின் துரோகச் செயலுக் காக வருந்துவேனா? பாமரர்களுக்குப் பரிந்து பேசப் போவேனா? கொட்டுகின்ற தேளை கும்பிட்டு நிற்பேனா? கொல்லுகின்ற சூழ்நிலையை மறக்கக் குடிப்பேனா? என்றெல்லாம் கேட்பவர்

சொல்லி அழுதுவிட்டால்
துயரமெல்லாம் தீர்ந்துவிடும்
சொல்ல வொரு நண்பரில்லை;
சொல்வதற்கும் வார்த்தையில்லை

என்று வேதனைப் பட்டிருக்கிறார்.

### துயர கீதம்

தானாக வாங்கிய நோயின் வேகம் மோதுவதாலே பாட்டு அழுகைப் பாட்டாக வருகிறது என்கிறார் கண்ணதாசன். ஆனால்

உடலை வருத்தும் நோயை அனுபவித்துத்தானே தீரவேண்டும். படும் முன்பே தெரிந்திருந்தும் அதைச் சட்டை செய்யாமல் போனார். இந்தத் துயரம் பிறவழிகளிலும் வரலாமென்றும் கவிஞர் பாடுகிறார்.

மண்வழி வரலாம்! பெற்ற
மகன்வழி வரலாம்! சேர்ந்த
பெண்வழி வரலாம்! செய்த
பிழைவழி வரலாம்

என்று முத்தாய்ப்பாகப் பாடியுள்ளார்.

### கல்வியின் ஏக்கம்

படிக்க வேண்டுமென்ற ஆசை கண்ணதாசனுக்கு நிறைய இருந்தது. பட்டப்படிப்பு படிக்க ஆசையும் கொண்டிருந்தார் வீட்டு வறுமைச் சூழ்நிலையினால் எட்டாம் வகுப்புக்கு மேல் படிக்க முடியாமல் போய்விட்டது. பின்னர், ஏழ்மையிலே என்னை உலகில் விட்டார். கரை காணாத் தோணியெனக் கண்கலங்கினேன். கற்றவர் களைக் கண்டு கரையில் நின்றேன் என்று ஏங்கியுள்ளார். கிராமத்து ஊருணிக்கரையில் உட்கார்ந்து எதிர்காலத்தைக் கனவு கண்டு கொண்டு ஐந்தாண்டுக் காலம் பட்ட பாட்டினை எண்ணி வேதனைப்படுகிறார்.

பிறப்பிலும் அழுதேன்! வந்து
பிறந்தபின் அழுதேன்! வாழ்க்கைச்
சிறப்பிலும் அழுதேன்

என்று பாடுகிறார். அழுவதை ஊரார் கண்டால் ஆறுதல் சொல்வார் என்றே தான் விழிகளில் கண்ணீரை வைத்தானாம் இறைவன். ஆனால் கண்ணதாசனோ விழிகளில் கண்ணீர் காய்ந்து விட்டதால் மொழிகளிலே அழுகிறாராம்.

### கையறு நிலை

தன்னுடைய அன்புக்கு ஆளானவர்களின் மறைவு கண்ணதாசனை மிகவும் பாதித்துள்ளது. தனக்கும் பிரிந்தவர்களுக்கும் இடையே இருந்த அன்பின் ஆழத்தை கவிதைகளில் வடித்து மன பாரத்தைக் குறைத்துக் கொள்ளவும் செய்துள்ளார்.

### தமக்கையின் பிரிவு

தன் தமக்கையார் ஞானாம்பாள் ஆச்சி மறைந்தபோது துக்கம் தாளாமல் பாடுகிறார்.

என்னை அழவிடு! என்னை அழவிடு!
அன்னை என்னை அழவே படைத்தாள்!

தன்னந் தனியே சாய்ந்து படுத்து
தலையணை நடுவே இருவிழி புதைத்து
தாயொடு தந்தை தமக்கை தலைமுறை
சரஞ்சர மாகப் பிரிவதை நினைத்து....

அழுகிறார் கண்ணதாசன். இந்த இறப்பு, வாழ்வைப் பற்றிய ஒரு நுண்ணாய்வுக்கு அவர் மனதை ஆழ்த்தியது. மரணத்தை நம்மால் தடுத்து நிறுத்திவிட முடியாதென்பதால் தத்துவத்திடம் அடைக்கலம் போகிறார். நமக்கு உயிர்க்கடன் தந்தவன் மேலே இருக்கிறான். பொருள் கடன் தந்தவனோ வெளியில் நிற்கிறான். இந்த இருவரிடமிருந்தும் கடன் பெற்ற நாம் இதயக் கடனைக் கண்களால் தானே இறக்கி வைக்க வேண்டுமென்கிறார். எல்லாமே முடிவில் சோகத்தைத் தந்தமையால் தன்னை அழவிடும்படிச் சொல்கிறார் கண்ணதாசன். அதனால்தான் கண்ணீர் ஒன்றே கவலையைத் தீர்க்கும்; கவலையின் முடிவில் அனுபவத்தைச் சேர்க்கும் என்றார். இவ்வாறு, கண்ணீரிலேயே ஆழ்ந்திருந்தால் என்ன பொருள் என்று நமக்குக் கேட்கத் தோன்றும் நேரம் பதில் கூறுமுகமாக

கண்ணீர் வடித்துக் கரைந்து இளைத்து
மாண்டு படுத்தால் மயானம் வரைக்கும்
தூக்கி வருவோர் தோள் வலிக்காது
சுடப்படும் போதும் நெய் கேட்காது...

என்கிறார். துயரைப் பாத்தி கட்டி உள்ளே நிறுத்தி வைக்காமல் வெளியே சொல்லி அழுதால் அமைதி கிடைக்குமென்றே தன்னந் தனியே படுத்து அழுதிருக்கிறார்.

### பேரனின் பிரிவு

கவிஞரின் பேரன் தொட்டிலில் ஆழ்ந்து தூங்கிக் கொண்டிருக்கிறான். அவனைப் பார்க்கும்போது அவர் மனதினில் தன் கடந்த காலவாழ்வு அலை மோதுகிறது. கவிஞர் கூறுகிறார் - இப்போது பேரன் அமைதியாக உறங்குகிறான். நாளை அவனுக்கு என்னென்ன நேருமோ என்று அவர் மனம் உடனே எண்ணுகிறது. தன் வாழ்வில் நேரிட்ட போராட்டங்களின் நிழலாட்டம் அப்படியோர் எண்ணத்தைக் கொடுக்கிறது. அதனால் அவனை எழுப்ப வேண்டாம், அப்படியே தூங்க விடுங்கள் என்கிறார். ஆழ்ந்த தூக்கத்தில் அவன் அமைதியை காணட்டும்; ஆறே மாதமான அன்புக்குழந்தை இந்த வயதினில் இப்பொழுது தூங்குவதே சுகமான தூக்கம் என்பதனால் அவன் சுகமாகத் தூங்கட்டும் என்கிறார். அவன்,

கண்ணை விழித்திந்தக்
காசினியைப் பார்க்குங்கால்
என்ன துயர்வருமோ
எங்கெங்கே அடிவிழுமோ
காதல் வருமோ
காதலுக்குத் தடை வருமோ

என்று பயப்படுகிறார். பிறருடன் அவனுக்கு மோதல் வருமோ, முறைகெடுவார் துணை வருமோ என்றெல்லாம் கவலைப்படுகிறார். தனக்கு நேர்ந்ததுபோல் நன்றி இலா நண்பர்கள் தாம் சூழ்வரோ என்றும் நலமிழந்த பெண்ணொருத்தி நாயகியாய் வருவாளோ என்றும் சிந்திக்கிறார். இந்தச் சமுதாயத்தில் நாளை அவனுக்குச்

செய்யத் தொழில்வருமோ
திண்டாட்டந்தான் வருமோ
வெய்யில் அழைத்து வரும்
வியர்வையிலே நீராடி
'ஐயாபசி' என்
றலைகின்ற நிலைவருமோ

என்ன வருமென்று இப்போது யாரறிவார்? எனவே அவனை எழுப்பாதீர் அவன் அப்படியே தூங்கட்டும் என்று பாடினார். நாளை அவன் கோடிக்கதிபதி ஆனாலும், நாட்டுத் தலைவன் ஆனாலும் கேட்ட பொருள் கிடைத்தாலும் அவன் வீட்டு மாட்டுக்குக் கூட மரியாதை கிடைத்தாலும் எவ்வளவு வசதிகள் இருந்தாலும் சொத்துள்ள காரணத்தால் தூக்கம் பிடிக்காது. அதனால்

அவனை எழுப்பாதீர்;
அப்படியே தூங்கட்டும்!
பூப்போலத் தூங்குகிறான்
பூமியிலே உள்ளதெலாம்
பார்க்காமல் தூங்குகிறான்

என்று பாடினார். பாவிகளை இன்றுவரை சேராமல் தூங்குகிறான்; தெய்வத்தின் காதினிலே ரகசியங்கள் பேசுகிறான். இந்தப் பிள்ளைக் கனியமுதை எழுப்பாதீர்; அவன் அப்படியே தூங்கட்டும் என்கிறார். அவனுடைய அமைதியான நிலையைக் குலைக்க வேண்டாமென்கிறார். வாழ்வில் அவனை என்னவெல்லாம் எதிர்நோக்கும்! நம்பிக்கை, ஏமாற்றம், நடுக்கம், பயம், கோபம், வெம்பி

அழுதல், கும்பி எரிதல், கொதித்தல், துடித்தல், அம்மம்மா எவ்வளவோ அவனை எதிர்நோக்கும். அவற்றையெல்லாம் தாங்குவதற்கு அவனுக்கு அடித்தளங்கள் வேண்டுமே! அதனால்தான்

இப்பொழுது தூங்கட்டும்
இனிமேல் விழிப்பதற்கு
இப்பொழுது தூங்கட்டும்
இனிமேல் அழுவதற்கு
அவனை எழுப்பாதீர்
அப்படியே தூங்கட்டும்!

என்று பாடினார். இப்படிப் பாடி ஏழுநாள் ஆகுமுன்பே பேரன் இறந்து விடுகிறான். பதை பதைத்துப் போகிறார் கவிஞர்.

பிள்ளைப் பருவத்திலே யாரும் தங்கள் இல்லத்தில் இறந்ததில்லை என்று விம்முகிறார். அவனை எழுப்பாதீர், அப்படியே தூங்கட்டும் என்று அறம்பாடி விட்டேனா என்று வேதனைப்படுகிறார்.

'தாத்தா'வென் றென்னைத்
தழுவப் பிறந்த மகன்
பூத்தாற்போல் பூத்துப்
பொழுதில் உலர்ந்துவிட்டான்!

என்று பாடும்போது நெஞ்சின் ஆழத்திலிருந்து துயரம் துளும்பி வழிவதைப் பார்க்கிறோம்.

நூறு வயதானவர்கள் எல்லாம் நோய்நொடி இல்லாமலிருக்கப் பால்வடியும் பாலகனைக் காலன் பறித்துவிட்டானே என்று விம்முகிறார். கூற்றுவனுக்கென்ன குணக்கேடா என்று கொதிக்கிறார். இப்படியெல்லாம் பாடி, தனக்குத்தானே அமைதி கொள்ள முயன்றாலும்

மக்கள் தொகையும்
வருங்காலச் சூழ்நிலையும்
தக்க இடம் நமக்குத்
தாராதோஎன் றஞ்சி

சிரிக்குமிளம் பூந்தோட்டம் வானில் பறந்தோடி விட்டதம்மா என்று பாடுமிடத்து, கண்ணதாசன் சோகத்தின் உச்சிக்கே போய் கையறுநிலைப் பாடலுக்கே ஒரு புதிய பரிமாணம் அமைத்து விடுகிறார்.

உள்ளத்துடன் கலந்த ஆழ்ந்த உணர்வைக் கவிஞர் இங்குப் பேசியுள்ளார். வாழ்வின் குணாதிசயங்களைப் பேசித் தன் துக்கத்தைக்

குறைத்துக் கொள்ளவும் முயன்றுள்ளார். ஆனால் அவருடைய அன்பின் வெளிப்பாடு மனதின் சோகத்தை அதிகரிக்கவே செய்துள்ளது.

### சகோதரரின் மறைவு

கண்ணதாசன், தன் சகோதரர் ஏ.எல்.எஸ். மறைந்தபோது அவரைப் பற்றி நினைவு கூர்கிறார். தாயின் தொட்டில் தாலாட்டுக் கேட்டு வளர்ந்ததையும், தன் கிராமத்துச் சோலையில் பந்து விளையாடியதையும், அன்னை வட்டில் கறிவகைகளை வைத்துக் கொடுத்ததையும் நினைவு கூர்கிறார். கவர்ச்சியான நகரத்தில் கிடைத்த பதவிகளையும் செய்த தொழில்களையும் கிட்டிய நண்பர்களையும் உறவுகளையும் சகோதரரின் சிறப்பியல்புகளையும் எல்லாம் அடுக்கி வைக்கிறார். மக்கள் துயரத்தையும் அரசுச் சுமையையும் கையளவு இதயம் வாங்கிக் கொண்டது. சுமையின் வலிமையினால் வந்த நோய்கள் தாக்க தினமும் மருத்துவம் தேவைப்பட்டதாம். உடல்நலம் தேறுவதும் மீண்டும் நலம் குன்றுவதுமாக இருந்தாராம். கடைசியில்

இறைவன் எழுதிய இறுதிக் கடிதம்
இரவில் வந்தது இரண்டரை மணிக்கு

என்று பிரிவுத் துயரின் ஆற்றாமையைப் பங்கு வைக்கிறார். வாழ்வுக்கும் மரணத்துக்குமிடையில் தடைச்சுவரொன்று இருக்கிறது. அதைத் தாண்ட வைக்கும் இறைவன், தன்னைத் தீண்டவில்லையே என்றும் வருந்தியிருக்கிறார்.

### ஊமைக்காயம்

தன்னுடைய உள்மனதின் ஆசைகளையும் ஈடேறாமல் போன எண்ணங்களையும் பேசுகிறார் கண்ணதாசன். தென்றலில் நடனமிடும் தென்னைகளும், ஆதிரைக்கும் கார்த்திகைக்கும் ஏற்றும் தீபங்களைப் போன்று சிரிப்பும், சிவப்பும் வெள்ளையுமென மலர்களுள்ள ஒரு தோட்டமும் வேண்டுமாம். சோலையில் பாட்டிசைக்கும் பூங்குயிலும் முத்தான கிள்ளைகளும் வேண்டுமாம். அத்தோட்டத்தில் ஓர் இளம் பெண்ணின் தங்க மேனியும் வேண்டுமாம். ஆனால்,

தோப்பிருந்தால் வாங்குவதற்குத் தொகையில்லை
தொகையிருந்தால்
தோப்பில்லை என்றபடி தொடர்ந்ததம்மா என்வயது!

என்று கண்ணதாசன் கூறும் நிலையில் வாழ்வு அமைந்துவிட்டது.

அடுத்து இன்னோர் ஆசை. கோயில் சிலை போலச் சேலை கட்டிச் சிற்றிடையில் பின்னலிட்டு, பூ முகத்தில் பொட்டுமிட்டு நங்கையொருத்தி வரவேண்டுமாம். நால்வகை குணங்களில் நாணம்

முந்திவர ஆசையின் வேகத்தால் அச்சம் பின்னலிட நறுங்குழலில் போதையூட்டும் மலர் சரிய

ஆதார மில்லாமல் ஆடிவரும் தேர்போல
மங்கை ஒருத்திஎந்தன் மடிமீது வந்தமர்ந்து

காதல் பேசி பற்றும் வைக்க வேண்டும். அவள், தன் இதழால் அவர் சிந்தையில் கடைவிரித்து, உடலை ஆரத்தழுவி, அன்புடன் குழல் கோதி 'பாவலனே இன்றோர் பாட்டெழுத மாட்டாயா' என்றுரைக்கும் காட்சியினை எண்ணித் தவங்கிடந்தாராம். அந்த இன்பமும் தன்னைத் தீண்டவில்லையென்று வேதனைப்படுகிறார்.

பிறவா வள்ளல்

கை நிறையப் பொருளை வைத்துக் கொண்டு இல்லாதவர்களுக்கும் ஏங்கி அழுவோர்களுக்கும் தொல்லைப்படுவோர்களுக்கும் துணையாக வாழ்ந்திருக்க எண்ணினார்.

கல்யாண மாகாத காளையர்க்கும் கன்னியர்க்கும்
நல்லமண முடித்து நல்வாழ்வுக் கைகொடுத்து
எல்லோர்க்கும் நல்லவனாய் இரக்கம் மிகுந்தவனாய்
வாழ நினைத்திருந்தேன் வாழ்வும் முழுமையில்லை

என்று பாடியிருப்பதிலிருந்து இந்த ஆசையும் கனவாகவே நின்று விட்டதை அறிகிறோம்.

தன்னுடைய ஆசைகள் எல்லாம் ஆசைகளாகவே நின்று போய்விடக் காரணம் என்னவென்றும் கண்ணதாசன் கூறுகிறார்.

மங்கையர்க்கும் மானிடர்க்கும் மண்ணிலுள்ள யாவருக்கும்
ஒன்றல்ல உள்ளம் உள்ளே இரண்டு மனம்!

என்பதால் துயரங்களே தன்னை வந்தடைந்தன என்கிறார். கையில் கிடைத்த பணத்திற்குக் குறைவேயில்லை. ஆயினும், அவரால் சேமித்து வைக்கவோ சொத்துக்கள் வாங்கவோ முடியவில்லை. நாடகக் குழுவில் நடிக்க வந்த பானுவைப் போல் ஒரு பெண் தன்னுடன் எப்போதும் இருக்க வேண்டுமென்று விரும்பினார். தன்பால் அக்கறையுள்ள மங்கையை அவர் மனம் கேட்டது. ஆனால் இந்த ஆசைகள் எல்லாம் நிறைவேறவில்லை. ஊமைப் புண்கள் ஏராளமாய் உள்மனதில் இருப்பதனால் சொல்ல நினைத்ததையெல்லாம் சொல்லவில்லை என்கிறார். கள் விழுந்து தேற்றுவதால் கவலைகளை மறக்க முடிகிறதென்று கூறுகிறார். அதனால் வீழ்ந்திருக்கும் இடிபாட்டுக் குள்ளிலிருந்து மீள வழியின்றி,

பற்றறுக்க மாட்டாமல் பாடிப் புலம்புகிறேன்

சுற்றறுக்க மாட்டாமல் துயரத்தால் விம்முகிறேன்

என்று கண்ணதாசன் பாடினார். சுற்றுச்சுவர் நடுவில் எனைச் சுமந்தவள் சற்றே விலகித் தனித்திருந்தால் இன்று பிறவாமல் இருந்திருப்பேன். பெற்ற பின்னால் இந்தப் பிரளயத்தில் வட்டமிட்டு முற்றுங்குமைந்தழுது இவ்வுலகை உணர்ந்த பின்னர்

வண்ண மணிக் கிண்ணத்தில் வார்க்கும் மதுவகைகள்

இல்லா திருந்தால் இன்றோர் கவிஞனில்லை

என்றும் வாக்குமூலம் தருகிறார்.

### ஆழமான உணர்ச்சி

மேலோட்டமாகப் படிக்கும்போது தோன்றாத ஆழம் கவிதைகளை ஊன்றிப் படிக்கும்போது உணரக் கூடியதாய் இருக்கிறது. கலை மனம் சிரித்தாலும் சரி, அழுதாலும் சரி, கலை வடிவம் பிறக்குமென்பதற்கு கண்ணதாசனின் தன்னுணர்ச்சிப் பாடல்களே சான்று. கண்ணதாசன் மனதிலிருந்த வீறாப்பு, குழைவு, தெளிவு, இறுமாப்பு இறந்தநிலை இவற்றை இங்கு நாம் காண்கிறோம். அவர் கவிதைகளில் மென்மையும் நளினமும் விரவி வந்திருக்கின்றன.

அனுபவங்கள் உணர்ச்சி வடிவம் எடுத்து கவிதையாகப் பரிணமிக்கும் பாடல்களில் அவருடைய ஆத்மாவின் இசையைக் கேட்கிறோம். அவருடைய ஆசைகள், நம்பிக்கைகள், அனுபவங்கள், கனவுகள் இவற்றைப் பார்க்கிறோம். மனதின் எழுச்சி ஏக்கங்களாய் துயரங்களாய் ஆவேசம் கொண்டு வெளி வந்திருக்கின்றன.

காதல் தோல்வியினாலும் அன்பு காட்டியவர்களை இழந்ததனாலும் நிறைவேறாச் சில ஆசைகளாலும் கண்ணதாசன் எழுத்தில் சோகம் இழையோடிக் கொண்டே இருக்கிறது. அவர் மட்டும் அறிந்த கதைகளும் ஊமைக்காயங்களும் இதனாலேயே அரங்கேறின. இப்படி இரண்டிற்கும் இடையேயான நிலையிலிருந்து மனம் படும் வேதனை தாளாமல் தான் இரண்டு மனம் வேண்டுமென்று இறைவனிடம் கேட்டார்.

அனுபவம் தாமாகவே பீறிட்டு வரும் கவிதைகள் கண்ணதாசனை ஒரு தன்னுணர்ச்சிப்பாக் கவிஞனாக இனங்காட்டுகிறது. தன்னுணர்ச்சிக் கவிதைகளுள் விஞ்சி நிற்கும் உணர்ச்சியாய் சோகம் தனித்து நிற்கிறது.

# 4
# அரசியலும் சமுதாயமும்

மக்களுடன் தொடர்புள்ள எந்தக் கவிஞனும் அரசியல் பாடாமல் இருந்ததில்லை. தான் வாழும் காலத்தின் பிரச்சனைகளைப் பற்றிப் பேசும் போதும் சிந்திக்கும் போதும் செயல்படும் போதும் அரசியல் வந்து விடுகிறது. அது போல் காலத்தின் நியாயமான இன்றியமையாத தேவைகளைப் புரிந்து கொண்டு பாடியிருக்கிறார் கண்ணதாசன். எதிர்பாராத விதமாக அரசியல் கட்சியில் அங்கத்தினராகி அரசியல் வாதியாகச் செயல்பட்ட போதும், ஓர் இலட்சியத்தை நோக்கியே பயணம் செய்தார். போக வேண்டிய பாதை இதுவென்பதில் கவிஞருக்குத் தெளிவிருந்தது. அவர் செய்த பயணத்தில் ஒரு நேர்மையும் இருந்தது.

கண்ணதாசன், தவறு செய்யும் மனங்களைத் திருத்தவும் பண்படுத்தவும் மக்களுக்கு நன்மை செய்யவும் அரசியல்தான் சரியான வழி என்று நம்பினார். சமுதாயத்தின் மேடுபள்ளங்களை நிரப்ப, அதனுடைய மொத்த அமைப்பை மாற்றத் தன் பங்கைச் செய்யப் புறப்பட்டார்.

### இந்தி எதிர்ப்பு

இந்தியா சுதந்திரம் பெற்று இரண்டாண்டுகள் ஓடிவிட்ட நேரமது. மத்திய அரசின் மொழிக்கொள்கை கண்ணதாசன் மனதை அலைக் கழிக்க ஆரம்பித்தது. தமிழ்மக்கள் மீது இந்தியைத் திணிக்க இவர்கள் யார் என்ற கோபம் வருகிறது. தமிழகத்தின் சுதந்திரத்தில் மத்திய அரசின் குறுக்கீடாகவே அதனைக் கண்ணதாசன் கண்டார். ஒரு தேதியைக் குறிப்பிட்டு அதற்குள் தமிழகம் இந்திக்கு ஆதரவு தெரிவிக்க வேண்டுமென்று தமிழகத்தைச் சார்ந்த மத்திய அமைச்சர் ஒருவர் கெடு வைத்தார். அப்போது கண்ணதாசன் வீராவேசத்தோடு பேசுகிறார். அதில் சோகமும் இழையோடுகிறது.

வழக்கறிஞர்கள் ஆங்கிலத்தோடு இந்தியும் கற்று வந்தால் தான் வாதாட முடியும்; தீர்ப்புக் கூற நீதிபதிகளும் இந்தி கற்றேயாக வேண்டும். குற்றவாளியும் கூட இந்தி படித்தே குற்றம் புரிய வேண்டும் என்று ஏளனம் செய்கிறார். நமக்கெனத் தனிநாடு இருந்தால் இந்தத் தொல்லை இல்லையே என்று பாடியதும் இந்தப் பின்னணியில் தான்.

### மக்கள் நலன்

எல்லோருக்கும் எல்லாமும் கிடைக்க வேண்டுமென்று விரும்பியவர் கண்ணதாசன். நாடும் மக்களும் நலம் பெற வேண்டுமென்ற இலட்சியத்திலிருந்து இறுதிவரை மாறவில்லை. அவருடைய பக்குவப்பட்ட மனத்தையும் அரசியல் தத்துவங்களையும் இலட்சியங்களையும் கவிதைகளில் இழைந்தோடும் உணர்வுகள் வெளிப்படுத்துகின்றன. தன்னுடைய தத்துவங்களை மாற்றிக் கொள்ள கூடாதென்பதற்காக பல மாற்றங்களுக்கு ஆட்பட்டவர் கண்ணதாசன்.

### முதல் சுதந்திரப் போர்

1957 ம் ஆண்டு இந்திய சுதந்திரப் போரின் நூற்றாண்டு விழா கொண்டாடப்பட்டது. அந்த ஆண்டு தான் முதன் முதலாக வெள்ளையனுக்கு எதிராகப் பாஞ்சாலங்குறிச்சியில் வைத்து வீரபாண்டிய கட்டபொம்மன் ஆரம்பித்த போரின் 175ம் ஆண்டு. தமிழகத்தில் நடந்த முதல் சுதந்திரப் போர். இதற்கு மத்திய அரசு முக்கியத்துவம் கொடுக்கவில்லையே என்று வருந்தியுள்ளார் கண்ணதாசன்.

### நாமே ஆள வேண்டும்

வரலாற்றில் நமக்கு இடமில்லை; தபால் தலைகளிலும் நம்மோரில்லை. பொருளாதாரத்திலும் தேய்ந்த வாழ்க்கை. நமது நாடு ஒரே இந்தியா என்றால் இந்தப் பேதங்கள் எல்லாம் ஏன்? என்று கேட்கிறார் கவிஞர். நமக்கு நேரமில்லை ; நம் பொறுமையெல்லாம் இழப்புக்கே வழியாதல் கண்டோம். நம் நாடு நமக்கேயாகும். அதைப் பெற வேண்டு மானால் போராட்டம் நடத்தவும் தயாராவோம் என்று குரலும் கொடுக்கிறார். இத்துடன் நிற்காமல் அவர் பார்வை மிகவும் விரிவடைந்து

'......... பிற நாட்டில் வாடு வோரின்
துயர்தீர்க்கும் வழிவேண்டும்; நமக்குள் நாமே
இணைகின்ற அரசொன்றே வேண்டும்!

என்று பாடுமளவுக்குச் சென்றது. தமிழக விடுதலை உலக விடுதலையாக விரிந்திருப்பதை இங்குப் பார்க்கிறோம்.

### காங்கிரஸ் வேண்டாம்

மத்திய அரசின் கொள்கைகளைத் தமிழகம் ஏற்பதைக் கண்ணதாசன் மனம் ஒப்புக் கொள்ளவில்லை. காரணம், தேசியத்தின் பெயரில் நமது உரிமைகளை கோரிக்கைகளை விட்டுக் கொடுக்க வேண்டி வரும். கட்டுப்பாடு என்ற நிலையில் அக்கட்சியின் கொள்கைகளுக்கு எதிராகக் குரல் கொடுக்க முடியாமல் போய் விடுமென்ற அச்சமிருந்தது.

காங்கிரஸ் கட்சியின் ஆட்சியிலே பசியின் கொடுமை கடுமையாக இருந்தது. பெற்ற தாயே தன் குழந்தையை அழிக்கும் அளவிற்கு மோசமாக இருந்தது. அந்தக் கோபத்தைக் கண்ணதாசன்

நாடல்ல ஈது! பொய்மை
நரகத்தின் உண்மை ஆக்கம்!
வீடல்ல ஈது! சாவில்
வீழ்பவர் துலங்கும் பாதை

என்று கவிதையில் காட்டியுள்ளார். இந்நிலை மாறினால் தான் இல்லங்களில் களை சேரும் என்றும் பாடினார். ஒரு பக்கம் விலைவாசி உயர்ந்துகொண்டே போகிறது. மறுபக்கம் தவறுதள் திருத்தப்படாமல் தொடர்ந்து கொண்டேயிருக்கின்றன. இந்நிலையில் கவிஞர் பாடுகிறார். அமெரிக்காவின் முன்னேற்றத்தோடு ஒப்பிட்டு, நாம் பின் தங்கியுள்ளதை எடுத்துக்காட்டுடன் பேசுகிறார்.

ஆளின்றிப் பறக்கின்ற விமானம் அங்கே!
அலுங்காமல் செல்கின்ற ஊர்தி அங்கே!
ஆளுள்ள விமானங்கள் விழுவ திங்கே?
ஆட்கொல்லி ஊர்திபல ஊர்வ திங்கே!

என்று பாடியவர் நம் நாட்டுப் பொருட்கள் நல்ல பலனைத் தரவில்லை என்ற மனத் துயரையும் வெளியிட்டார். விஞ்ஞானத் துறையிலே வளர்ச்சி உண்டா? வீரமிகுந்த படைகள் தான் நம்பாலுண்டா என்றும் ஆவேசமாய் பாடியிருக்கிறார்.

### சாதி அரசியலுக்கு எதிர்ப்பு

சாதியின் அடிப்படையிலான அரசியலைக் கண்ணதாசன் முழு மூச்சுடன் எதிர்த்தார். தமிழ்நாட்டில் முதுகுளத்தூர்க் கலகத்தில் ஏராளமான பேர் மாண்டனர். இது சாதியின் பெயரால் விளைந்த ஒன்று. மீண்டும் மீண்டும் தேர்தல் களத்தில் அதனை ஒரு கருவியாகப் பயன்படுத்து கிறோமே என்று வேதனைப் பட்டுள்ளார் கண்ணதாசன்.

நாமெல்லோரும் ஓரினம்தான். அப்படியிருக்கையில் இனம் பேசிப் பிரித்து வைப்பதில் லாபமென்ன என்று கேட்கிறார் கண்ணதாசன். சுடுகாட்டெலும்புகளிலே வட நாட்டெலும்பென்றும் தென்னாட்டு எலும்பென்றும் பேதம் இல்லையே.

ஒரு நாட்டு மக்களுக்குள் ஓராயிரம் பிரிவை
எரியூட்ட வில்லையெனில் எந்நாளும் துன்பமடி

என்று அதனால் தான் பாடினார். ஒற்றுமை வேண்டுமென்பவர்களே வேற்றுமைகளையும் வளர்க்கிறார்கள் என்றெண்ணிய கவிஞருக்கு கட்சி அரசியல் பால் கசப்பு தோன்றிற்று.

*சுதந்திரத்தின் அருமை*

சுதந்திரம் - அனுபவிக்கும் பொழுது தான் இதன் முழுப் பொருளும் புரிகிறது. எவ்வளவு அருமையானது இந்தச் சுதந்திரம்! நம் குழந்தைகளுக்குச் சுதந்திரம் பற்றியும் மக்களாட்சி பற்றியும் தெரியுமா? சுதந்திரத்தின் அருமை இந்தத் தலைமுறையினர்க்குத் தெரியுமா என்ன? கிடைத்திருக்கும் சுதந்திரத்திறகுப் பின்னால் எத்தனைபேர் எத்தனை வழிகளில் தியாகங்கள் செய்திருக்கிறார்கள் என்பது பற்றி நம் குழந்தைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கிறோமா? இந்தத் தியாகிகளுக்குக் கொடுக்க வேண்டிய மரியாதை பற்றி நம் பிள்ளைகளுக்கு என்ன தெரியும்? நாம் தியாகிகளின்

ஊரறியோம் ; பேரறியோம் ஆனால் அவர்கள்
உறங்கிவிட்ட கதையறி வோம்.

என்று கண்ணதாசன் வேதனையுடன் பாடியிருக்கிறார்.

சுதந்திரத்திற்காக உயிர்த் தியாகம் செய்தவர்கள் தாம் நமக்கு அடிப்படை. இந்தத் தியாகிகளினால் கண்ணீர் சிந்திய உறவினர் தாம் எத்தனைபேர்? துடித்தழுத தாயார்கள் எத்தனை பேர்? இந்த நாடே அவர்களுக்காக அழ வேண்டும். ஆனால், இந்த அஸ்திவாரங் களுக்காக, யார் அழுதார்கள். நீங்கள் அழ வேண்டுமென்றல்ல, வெள்ளையன் விழ வேண்டுமென்றுதான் அவர்கள் தியாகம் செய்தனர் என்று கண்ணதாசன் கூறும் போது வேதனை கலந்த நாதமே இழையோடுகிறது.

*வெள்ளிவிழா*

வெள்ளி விழா கொண்டாடும் பாரத தேசமே! நாட்டின் அடிமை விலங்குகள் நொறுங்கத் தங்களையே தியாகம் செய்தவர்களை நினைத்துப் பார்க்காத தாயகமே வெள்ளி விழா கொண்டாடு! விருதுகளை வழங்கிவிடு! என்று தன் மனக் குமுறலைத் தொடர்ந்து வெளிப்படுத்துகிறார்.

பள்ளியிலே விழும் போது
பாலகனின் கையாலே
கொள்ளிவிழ வேண்டியவர்
கூட்டங்களாய் மடிந்து
பேர்தெரியாப் பிணங்களெனப்
பேருலகம் சென்றுவிட்டார்!

அவர்களை நினைக்காமல் இருக்கிறீர்களே என்று நாட்டு மக்களைப் பார்த்துக் கேட்கிறார். ஏந்தும் மணிக்கொடியும் எரியும் விளக்குகளும் பல உரிமைகளும் வழங்கிவிட்ட அரசியலை உருவாக்க

வேண்டி உடல் துண்டானோர்கள் எத்தனை பேர்? அவர்களை நினையுங்கள். ஊரெங்கும் தேடுங்கள். அவர்கள் உழைத்த கதை கேளுங்கள். யாரென்று பார்த்து அவர் பெயர் கூறுங்கள் என்றும் கேட்டுக் கொண்டார்.

*மக்களாட்சி*

நம் நாட்டில் மக்களாட்சி என்ற பெயரில் சிலர் ஒன்று சேர்ந்து கொள்கிறார்கள். அவரவர்களுடைய வசதிகளுக்கேற்ப கொடிகளின் நிறம் மாறும்; கொள்கை மாறும். மேற்கொள்ளும் மாற்றங்களுக்காகத் தரப்படும் விளக்கங்கள் தலை கீழாகும். மக்கள் முன் வைக்கும் செய்திகளும் பொய்யாயிருக்கும். மக்கள், தங்களைத் தாங்களே ஆளச் செய்து கொண்டிருக்கும் இந்த ஏற்பாடு, எவ்வளவுதூரம் மக்கள் நலனில் அக்கறை கொண்டவர்களை இத்துறைக்கு அழைத்து வந்திருக்கிறது பாருங்கள் என்கிறார் கண்ணதாசன்.

ஒரு கட்சி இரண்டாகும், அவை ஒன்றோடொன்று பொருதும். இந்தக் கட்சிச் சண்டையில் அப்பாவி மக்களின் இடுப்பொடு மண்டையும் உடையும், மாற்றுக் கட்சியின் கொடிகள் இரவோடு இரவாக வெட்டி எறியப்படும். பொருள் மிக்கத் தத்துவமாம் மக்களாட்சி இந்தப்புழுதியில் ஓடி மறையும். அப்பாவி மக்கள் நலனும் பலியாகும். ஆரவாரங்களால் பாழ்பட்ட மக்களே அழிவது தான் உங்கள் விதி என்று வேதனை கலந்த கோபத்தில் பாடியுள்ளார்.

*திருத்தமிலாத் தவறுகளைச் செய்து செய்து*
*தேய்கின்ற தலைவரிடம் எங்களுக்கு*
*வருத்தமில்லை! அவர்மனதின் வலிமை நம்பி*
*வாழ்கின்ற ஏழையர்க்கே வருந்து கின்றோம்*

என்று அதனால் தான் பாடினார். அரசியல் வாதிகளின் ஆசைக்கும் அறிவுக்கும் எல்லை அறியாத மக்களே

வாக்கினால் நாட்டவர்
வாழ்வையே மாற்றிடும்
வசமான ஜனநாயகம்
வாழுமோ சாகுமோ
வருங்கால மென்னவோ

என்று கண்கலங்கியதும் அதனால் தான்.

*வரையிலாச்சுதந்திரம்*

சுதந்திர இந்தியாவில் குடிமகனுக்கு அனைத்து உரிமைகளும் ஒரே நாளில் வழங்கப் பட்டன. வரையிலாச் சுதந்திரம் கிடைத்ததனால்

என்ன நிகழ்ந்தது என்பதனையும் கண்ணதாசன் அடையாளங் கண்டுகொண்டார்.

எண்ணும் உரிமை எழுதும் உரிமை
ஏசும் உரிமை பேசும் உரிமை
கண்ணும் மனமும் கதவு திறந்து
காணும் உரிமை காட்டும் உரிமை

எல்லாம் கிடைத்த போதும் மக்கள் உழைக்கவில்லை. சோம்பேறித்தனம் அதன் உச்சியில் இருந்தது. ஆனால் விமரிசனக் கணைகள் இடைவிடாமல் வந்து கொண்டேயிருந்தன. அப்போது கவிஞர் வெகுண்டெழுகிறார். மக்களாட்சி வெற்றி பெற நேருவிற்குச் சர்வாதிகாரம் தருவோம் என்றார்.

நாடுமுன் னேற நலங்கள் பெருக
வேண்டு மென்றால் விதியொன்று செய்வோம்
ஜனநா யகத்தைச் சற்றே நிறுத்தி
சவுக்கை எடுப்போம்! தரித்திரம் நீங்கும்!

கவிஞரின் இந்தத் தீர்க்கதரிசனம் 1975ம் ஆண்டு நிறைவேறியது. சவுக்கை எடுப்போம் என்ற சொல்லைச் சற்று அழுத்திப் படிப்போமானால் நெருக்கடி நிலை என்ற சொல்லின் பொருள் விளங்கும். இதனால் கண்ணதாசன் உள்நாட்டு நெருக்கடி நிலையை வரவேற்றதிலும் வியப்பேதுமில்லை.

அந்த மனிதனை அழையுங்கள்

காங்கிரஸ் கட்சியில் ஏற்பட்ட பிளவினால் தலைவர்கள் இரு சேரிகளில் ஆனார்கள். இருந்த போதும் கவிஞரின் மனம் தலைவர்களையும் திறமையையும் தொடர்ந்து ஆதரித்து வந்தது. காமராஜரின் மீது அலாதியான பாசம் இருந்தது. அதனால் தான் தமிழகத்தின் நல்வாழ்வுக்காக காமராஜரை அழைக்கும்படி பாடினார்

அந்த மனிதனை அழையுங்கள் ; உங்கள்
அன்னைக் கோவிலுக்கு அவனோர் கோபுரம்
முன்னம் உலகின் முடியுடை மன்னன்
தன்னந் தனியே தவம்புரி கின்றான்.

என்று பாடி, தனியாக ஒதுங்கியிருக்கும் அவரை அழைத்துப் பொறுப்பை ஒப்படையுங்கள் எனத் தன் மன ஆசையை வெளியிட்டார். அவரால் ஆக வேண்டிய காரியங்களோ அனேகம். அவரை நம்பி இருப்போரோ ஆயிரம் ஆயிரம் பேர். அதனால்,

அந்த மனிதனை அழையுங்கள்; உங்கள்
அடுத்த கட்டத்தை அழகுற நடத்த!
அந்த மனிதனை அழையுங்கள் ; ஐயா!
இந்த நானிலம் இன்புறுதற்கே!

என்றும் பாடினார்.

## இந்திராவுக்கு ஆதரவு

இந்தியாவில் இந்திராகாந்தியின் தலைமையினால் வகுப்பு வாதம் வீழ்ந்ததாம். பொதுமக்கள் பால் இருந்த விரோதப் போக்கும் நின்றதாம். மன்னர்களின் கொற்றம் தாழ்ந்ததாம். செல்வர்களின் கொட்டம் தளர்ந்ததாம். வங்கதேச விடுதலைக்குப் பக்கபலமாக நின்று பாரத நாட்டையும் வல்லரசாய் உலகின் முன்னே காட்டினாராம். அதனால் இந்தியா இந்திராவே என்று பாடினார். அவர் தலைமையில் நாட்டில் ஒருமைப் பாட்டினையும் கண்டு சமதர்மத்தையும் காணலாமென விழைந்தார். தொடர்ந்து நெருக்கடி நிலை நேரத்தில் இருபது அம்சத் திட்டங்களைப் பாராட்டியும் புகழ்ந்தும் கவிதைபாடினார் கண்ணதாசன்.

வேலை செய்யும் ஏழைப்பெண்கள்
சாலை வழி மீதினிலே
சேலையினில் தங்கள் உடல்மூடி - அங்கே
சேய்களையும் பெற்றதுண்டு வாடி!
நான்கு சுவர்தான் எழுப்பி
நாட்டு மக்கள் யாவருக்கும்
தூங்க ஒருவீடு தரும் அம்சம் - அதில்
துள்ளி எழும் பாரதத்தின் வம்சம்

என்று மனநிறைவுடன் கவிதை பாடவும் அவரால் முடிந்தது

## சமதருமம்

காசு பணம் மிக்கவர்கள் கையிலிருந்து கிடைக்கும் உபரி நிலம் ஏழைகளுக்குப் பகிர்ந்தளிக்கப்படும் என்பது இருபது அம்சங்களுள் ஒன்றாக இருந்தது. ஆயிரம் பேர் வேலை செய்து ஒருவர் வாழ்ந்த காலம் போனதே! செல்வங்களெல்லாம் பூமிக்கு வந்ததே! புதுச் சட்டத்தினால் சமதருமம் விளைந்ததே என்று ஆரவாரத்தோடு பாடினார்.

**உலக அரசியல்**

உலக அரசியல் பற்றிப் பேசும்போது, ஆதிக்க வெறியர்களின் போக்கை வன்மையாகக் கண்டித்திருக்கிறார் கண்ணதாசன். வியட்நாமில் அமெரிக்காவின் தலையீடு பற்றிப் பேசும்போது

வாதிட்டு வெல்லாத தத்துவங்கள்
வாள் கொண்டு களமேறி வெல்லுமாயின்
நீதிக்குக் காலேது?

என்று மக்களின் அதிருப்தியை அழகாக வெளியிட்டுள்ளார். உலக அரசியலின் எதேச்சாதிகாரப் போக்கைக் கண்டு எதிர்க்குரல் கொடுத்திருக்கிறார்.

நேசிக்கும் உறவினுள் பகைமை மூண்டால்
நிலப்பாசம் தீர்ந்துவிடும்; கடல்கடந்த
வேசிக்கேன் அவ்விடத்தே வேலை?

என்று கோபப்படுகிறார். ஆசியாக் கண்டத்தை அரிவாள் சுத்தி அணுகாமல் காக்கின்ற கடமை தன்னுடையது என்ற நினைப்போ அமெரிக்காவிற்கு என்றும் கேட்கிறார். இதனை அவர்கள் யாரிடம் யாசித்துப் பெற்றனர்? உலகிலுள்ள பெரும்பாலோரும் பொதுவுடமை வேண்டுமென முடிவு செய்தால் அமெரிக்கர்கள் தான் என்ன செய்யமுடியும்? என்றும் கேட்கிறார் கண்ணதாசன். ஒரு நாட்டின் விவகாரத்தில் இன்னொரு நாடு தலையிடுவதைக் கண்ணதாசன் ஆதரிக்கவில்லை.

வங்க தேசம் வாழ நினைத்த போது அடக்கியாள ராணுவம் வந்தது. குருதி ஆறாகப் பாய ஜீவனுக்கே விலையின்றி போனது. அப்போது கவிஞர், முஜிபுரின் நிலைமையை

வங்கமக்கள் அனைவருமே அவன்பால் நின்றார்
மன்னவனை பாரதம்தான் காக்க வேண்டும்!......

என்று பாடி மீண்டுமொரு முறை தன் தீர்க்க தரிசனத்தை மெய்ப்பித்துக் கொண்டார்.

**மௌனம்**

1977ம் ஆண்டு நடந்த நாடாளுமன்றத் தேர்தலில் காங்கிரஸ் தோற்றபோது வெறுப்புற்ற கவிஞர் அரசியலில் இருந்து ஒதுங்க ஆரம்பித்தார். 1980 ம் ஆண்டு ஆட்சி மாற்றம் ஏற்பட்டு மீண்டும் இந்திராகாந்தி பிரதமர் ஆன போதும் உற்சாகம் குன்றியே இருந்தார். மக்களின் தேவைகள் நிறைவேற மக்களாட்சி அமைப்பும் மக்களின் மனப் பான்மையும் உயரவில்லை என்றுணர்ந்து கொண்டார். இந்த

அமைப்பினில் மக்களுக்கு உதவ தன்னால் இயலாதென்ற நினைப்பு கண்ணதாசனை மௌனம் கொள்ளச் செய்தது. மக்களின் மேன்மைக்கான இயக்கமாகக் கண்ணதாசன் அரசியலைக் கண்டார். அந்தப் பயணத்தின் நோக்கம் மனித குல மகிழ்ச்சியாய் இருந்தது. அதில் மக்கள் தோற்றார்கள் - கண்ணதாசன் தோற்கவில்லை.

### கண்ணதாசன் காண விழைந்த சமுதாயம்

தான் வாழ்ந்த சமுதாயம் எதிர்நோக்கும் பிரச்சனைகள் என்னென்ன என்றும் அவற்றை மாற்றும் வழிகள் என்னென்ன என்பது பற்றியும் கண்ணதாசனுக்குத் தெளிவான பார்வை இருந்தது. அரசியல் கட்சிகளும் அரசியல்வாதிகளும் சேர்ந்து செய்யும் அட்டகாசங்களும் ஆர்ப்பாட்டங்களும் அவர் மனதை உறுத்தின. அதனால் அவர்கள் மேல் கோபங்கொண்டார். அதே போல் மக்களின் மெத்தனமான போக்கும் அவரை வெகுண்டெழச் செய்தது.

### சாதியும் சண்டையும்

நம் சமுதாயத்தின் மிகப்பெரிய கொடுமை சாதியமைப்பு. அதே சமயம் சாதி பேதமற்ற ஒரு சமுதாயத்தைக் காணவே கண்ணதாசன் விழைந்தார். நிலையில்லாப் பதவியினர் நிகழ்த்திய கூத்தால், தமிழ்நாட்டு முதுகுளத்தூரில் காவல் துறையினர் சுடவேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. இதனால் ஏராளமான பேர் மாண்டனர். அது சாதியின் பெயரால் நடந்த ஒரு சண்டையின் விளைவு. இதனால், மனங்கொதித்த கண்ணதாசன்,

சாதியைப் புலமாய்க் கொண்டு
தலைவர்கள் அமைந்தால், ஆங்கு
நீதியே அமைவ தில்லை?
.................
சாதியே! பேயே! சாவின்
தளத்திலே கிடந்த உன்னை
தேர்தலால் மீண்டும் கொண்டு
திணித்தவர் அழத்தான் வேண்டும்!

என்று வேதனையுடன் பாடியுள்ளார்

### அழிவைத் தடுக்கும் குரல்

சமுதாயத்தை இந்த அழிவிலிருந்து தடுத்து நிறுத்த ஏழை மானிடச் சாதியைக் காப்பதே நம் கடனென்று ஒவ்வொருவரும் பணியாற்ற வேண்டுமென்றார்.

வித்திலே தவறுண்டானால்
விளைபொருள் தவறாகாதோ
புத்தியே பொய்யாய்ப் போனால்
புதல்வரும் பொய்யாகாதோ

என்ற கண்ணதாசன், சமுதாயத்தின் மேல்தட்டிலுள்ளவர்கள் கீழ்த்தட்டிலுள்ளவர்களைக் கரையேற்ற வேண்டுமென்றார். அவர்களை ஒதுக்கி வைக்காமல் அவர்களுடைய முன்னேற்றத்திற்கு இடையூறாக இல்லாமல் அவர்களும் வாழ்வில் முன்னேற உதவ வேண்டுமென்பதே கவிஞரின் எண்ணமும் வேண்டுகோளுமாக இருந்தது. அதே நேரம் நடுத்தர வர்க்கத்தினரும் கீழ்மட்டத்தில் இருப்பவர்களும் தங்களுக்குக் கிடைத்துள்ள உரிமைகளை முறையாகப் பயன்படுத்திக் கொள்ளவும் கடமைகளை ஒழுங்காகச் செய்யவும் அறிவுறுத்துகிறார். அவர்கள் நசுக்கப்படுவார்கள் என்று வந்தால், ஒடுக்கப்படுவார்கள் என்று தெரிந்தால் துணிவுடன் எதிர்த்துப் போராட வேண்டும் என்றும் குரல் கொடுத்திருக்கிறார்.

### நன்மை தரும் ஒற்றுமை

நம் நாடு, இனமும் மதமும் பல கொண்ட நாடு. அதனால் மக்கள் ஒற்றுமையுடன் இருக்க வேண்டியதன் அவசியத்தைக் கண்ணதாசன் நயம்படப் பேசியுள்ளார். இனங்களுக்குள்ளே பகைமை வராமலும் கிடைப்பதைப் பகிர்ந்து கொள்ளவும் அறிவுரை கூறியுள்ளார். நமக்கு நன்மை தரும் பாதையில் ஒருமித்த சிந்தனையுடன் செயல்படுவோம் என்றார். மக்களுக்குச் சமதருமம் ஒன்றே வாழ் வினை நல்குமென்றும் அதைக் காணும் வரையில் சிந்தனையுடன் செயல்படுவோம் என்றும் வீறுடன் பாடினார்.

### புதிய சமுதாயம்

புதியதோர் சமுதாயம் அமைக்கவே கண்ணதாசன் விழைந்தார். கல்வி இல்லாதவர், கடமை இல்லாதவர் இல்லை என்று ஆக்குவோம் என்றும், இனப்பகை, மொழிப்பகை எப்பகையாயினும் அவ்வாறு நினைப்பவர்களை நெருப்பில் வீழ்த்துவோம் என்றும் சூளுரைத்தார். இல்லை என்ற சொல்லையே இல்லை என்றாக்குவோம் என்றார்.

### நாட்டின் நிலை

ஏழ்மையும் வறுமையும் நிரம்பியது இந்திய நாடு. இது நமக்கு மிகப்பெரிய ஒரு சாபம். இதனை மாற்ற வேண்டுமென்ற துடிப்பு கண்ணதாசனிடமிருந்தது. நாட்டுச் சேவைக்கென முன் வந்தோரில் பலரும் சொந்த வீட்டுக்கே பாடுபட்டார். இந்த வேளையில்தான்

சமதரும சமுதாயத்தை இந்தியாவில் கொண்டு வர காமராஜர் முன் வந்தார். நேருவின் காலத்திற்குப் பிறகு. இந்த

*முழந்துண்டு சட்டைக்கும் முதலில்லாத் தொழிலாளி*

விடுத்த அழைப்பை ஏற்று அவருடன் சேர்ந்து புதிய சமுதாயத்தை அமைக்கத் தன்னைத் தயார் செய்து கொண்டார். ஒன்றே போல் வாழ்வு. ஒன்றே போல் சிந்தனைகள் உருவாக வேண்டுமென்று காமராஜர் விரும்பினார். தன் உள்ளத்தில் ஆழமாகப் பதிந்திருக்கும் அந்த ஆசையைத் தானும் சேர்ந்து அமுல்படுத்த வேண்டுமென்று கண்ணதாசன் எண்ணினார்.

### இரட்டைக் குழந்தை

சில நாட்டில் மக்களாட்சி உண்டு. ஆனால் சமதருமப் பேச்சில்லை. சமதருமம் உள்ள நாட்டில் மக்களாட்சி இல்லை. ஏனிந்த நிலை என்று கண்ணதாசன் சிந்தித்திருக்கிறார்.

*.....அரசாங்கம் எல்லோர்க்கும் வாழ்வுதர*
*தொழில்களிலே தானும் சொந்தங்கொண் டாடுகையில்*
*வழக்குமன்றம் ஏறி வாதிடுவான் முதலாளி*

இதனால் சமதருமம் அடிவாங்கும் நிலையே தோன்றும்.

*ஜனநாயகத்தைச் சவக்குழியில் வைத்துவிட்டால்*
*சட்டத்தால் சமதர்மம் தழைத்துக் குலுங்கிவிடும்*

என்பதால் சமதருமம் குடியரசை ஏற்பதில்லை. ஆனால் இந்தியாவிலோ எனில் இந்த இரட்டைக் குழந்தையைப் பேணி வளர்க்கும் பணியில் ஈடுபட்டோம். இதுமட்டும் வளர்ந்து விட்டால் இந்தியா வல்லரசு ஆகிவிடும். ஆனால் நாட்டின் நிலையும் மக்களின் போக்கும் எப்படியிருக்கிறது என்று கண்ணதாசன் ஆராய்கிறார். நாளைப் பொழுதே பெரும்பாலானோர்க்குப் பெருங்கேள்வி. நாற்காலி தேடி அலைபவர்களால் இதற்குப் பதில் கூறமுடியாது. நம்மைச் சரியாக வழி நடத்திச் செல்ல வேண்டுமென்றால் பதவி ஆசை இல்லாத ஒரு தூயவர் தான் வேண்டும்.

*முதலாளித்துவச் சுமையை முதுகேற்றி நிற்பவர்க்கு*
*ஜனநாயகத்தின் தனிப்பெருமை விளங்காது!*
*பணக்காரன் கால்களுக்குப் பன்னீர் தெளிப்பவர்க்கு*
*மணக்காது சமதர்மம்! மக்கள்நிலை தெரியாது!*

என்கிறார் கண்ணதாசன். தனியார் தொழிலால்தான் சமதருமம் வருமென்றால் தலையிலே ஏதோ தகராறு என்று பொருள். மன்னர் வளர்ச்சியிலேதான் மக்கள்நிலை மேன்மை பெறுமென்றால் மனதில்

ஏதோ தவறென்று பொருள். அதனால், சரியான பாதையில் பயணம் செய்யச் சரியான வழியைத் தேர்ந்தெடுக்க வேண்டும். இல்லையென்றால்,

இதந்தெரியாப் பாதையிலே இனந்தவறிப் போய்விழுந்தால்
சுதந்திரத்தில் முன்னேற்றம் தூங்கி விழுந்துவிடும்!

என்று எச்சரிக்கையும் செய்கிறார். அத்துடன் நிற்காமல் கொள்கைகளை அடையும் வழியை

*சித்தத்தால் நாட்டுவோம்! சீறும்பணக் காரன்*
*ரத்தத்தால் நாட்டுவோம்*

என்று சீற்றத்துடன் குறிப்பிடுகிறார். இதற்குப் பின்னும் மனம் தேறவில்லை. மனதில் ஒளித்து வைத்திருக்கும் ஓர் ஆசையை அடுத்து வெளியிடுகிறார்.

...........ரகசியத்தில் சொல்வதென்ன
எல்லோர்க்கும் எல்லாமும் கிடைக்க வேண்டும்
இல்லையெனில் இந்நாடு அழிய வேண்டும்
வல்லவனை வாழ்விக்க வந்தோ மில்லை
வளமான சுதந்திரத்தைத் தந்தோ மில்லை

என்று சமதருமத்திற்குத் தீவிரமான ஆதரவு தெரிவிக்கிறார் கண்ணதாசன்.

தனியொருவனுக்கு உணவில்லையெனில் செகத்தினையே அழித்துவிடவேண்டுமென்று குரல் கொடுத்த பாரதிக்குச் சரியான வாரிசாகக் கண்ணதாசன் உருவாகியிருப்பதை இங்குப் பார்க்கிறோம். மக்கள்பால் கவிஞருக்குள்ள ஆழ்ந்த ஈடுபாடு இக்கவிதை வரிகள் வழி வெளிப்படுகிறது.

### மறுமலர்ச்சி வேண்டும்

சமுதாயத்தில் மறுமலர்ச்சி ஏற்பட்டால்தான் சமதருமத்தின் அரிச்சுவடியை எழுத முடியும். இருப்பவன் ஒரு பக்கமும் இல்லாதவன் ஒரு பக்கமும் என்பது இன்றைய நிலை. தேவையில்லாத போதும் வசதிகள் சேர்ந்து கொண்டே போவது ஒரு பக்கம். இருக்கும் தேவை கூட நிறைவேறாதது மறுபக்கம். இருப்பவர்கள், இல்லாதவர்களுக்குத் தாங்களாகவே கொடுக்கப் போவதுமில்லை. இந்நிலை மாற வேண்டுமென்று கண்ணதாசன் விரும்பினார்.

ஏழையும் இந்தப் பூமியில் பிற இந்தியச் சகோதரர்களுடன் வாழவேண்டுமே! அதற்கேற்ப சமுதாயத்தின் அடிப்படை விதியை மாற்றியமைக்க வேண்டுமென்கிறார். இருவேறு வர்க்கம் என்பதே

இல்லாமல் செய்ய வேண்டும்; மறுமலர்ச்சியையும் உருவாக்க வேண்டும். புதிய விழிப்புணர்ச்சியை ஊட்ட வேண்டும். எல்லோர்க்கும் எல்லாமும் என்ற நிலையைக் கண்ணால் காணவும் வேண்டும். அதே வேளை மக்களாட்சி அமைப்பிலிருந்தும் மாறக்கூடாது. இரட்டைக் குழந்தைகளான இந்த இரண்டும் நீண்ட நாள் பலனைத் தர வேண்டுமென்று கண்ணதாசன் ஆசைப்பட்டார்.

## இருவேறு வர்க்கம் வேண்டாம்

காமராஜர் சொன்ன அந்தத் தத்துவத்தை அடையும் வழியையும் கண்ணதாசன் கூறுகிறார்.

வீங்குகின்ற செல்வம் வீங்குவதும் ஆபத்து!
ஏங்குகின்ற நெஞ்சம் ஏங்குவதும் ஆபத்து!
அங்கம் பருத்துவிட்டால் அழகுக் கலைகளுக்கே
பங்கம் வருவதுபோல் பணமும் ஒருபக்கம்
சேர்ந்து கொண்டேபோனால் சீரான சமுதாயம்
அழகிழந்து போகுமடி!.

அதனால் மேட்டை உடைத்துப் பள்ளத்தில் விடவேண்டுமென்று அதை நாட்டக் கிளம்பினார் கண்ணதாசன். தன் மகிழ்ச்சியையும் அப்போது மிகவும் வெளிப்படையாகக் காட்டிக் கொள்ளவும் செய்தார். சமதருமம் வந்தே தீரும் ; இருப்பவன், இல்லாதவன் என்ற பேதமும் மாறும் என்றும் கனவு கண்டார்.

## மாற்றத்திற்கான வழி

மாற்றம் தேவை என்றெண்ணியவர் அதனை அடையும் வழிகளையும் இனங்காட்டினார்.

இருப்பவர்க ளெல்லாம் இப்பொழுதே கொண்டுவந்து
கொடுப்பார்க ளானால் குற்றத்தை மன்னிப்போம்!
கொடுப்பார்கள் கொண்டுவந்து கொடுக்கவில்லை என்றாலோ
எடுப்பார்கள் உட்புகுந்து எடுப்பார் வெகுவிரைவில்

என்று முன்னெச்சரிக்கை செய்தார். இக்கவிதையைக் கண்ணதாசன் பாடியது 1965ம் ஆண்டு. அவ்வேளை காங்கிரஸ் ஆட்சி தமிழகத்தில் நடந்து கொண்டிருந்தது. இராஜாஜி தலைமையிலான சுதந்திரா கட்சியோ முதலாளித்துவக் கொள்கையை ஆதரித்த காலம். அவர்களுக்குச் சாட்டையடி கொடுக்கிறார் கண்ணதாசன்.

மந்திரங்கள் போட்டாலும் மறைத்துப் பதுக்கிவைத்துத்
தந்திரங்கள் செய்தாலும் சாணக்யர் தலைமையில்

*சுந்தரங்க ளெல்லாம் தோள்தட்டி நின்றாலும்*
*சமதர்மப் போருக்குத் தப்பிவிட முடியாது!*
*இருவேறு வர்க்கம் இனிமேல் கிடையாது!*

என்று பாடியதோடு மட்டும் நிற்கவில்லை. சமதர்மத்தைக் கேலி செய்பவர்களிடம் கூறுகிறார் - வயதான பெரியோர்களே வம்புமொழி பேசாதீர்கள். நீங்கள் வந்தவழி மறவாதீர்கள். உங்கள் சாணக்கிய தந்திரங்களையும் சற்றே நிறுத்தி வைத்துக் கொள்ளுங்கள் என்று அறிவுரையும் வழங்கினார்.

### சமதரும சமுதாயம்

சமதரும சமுதாயம் நடைமுறையில் வந்து விட்டால் அந்தக் காட்சி எப்படியிருக்கும் என்பதனைக் கண்ணதாசன் மனம் நினைத்துப் பார்க்கிறது.

*ஏழைக்கு வாழ்வு! எல்லோர்க்கும் ஒருவீடு!*
*ஆளுக்கு இவ்வளவு ஆதிக்கம் எனும்படிக்கு*
*மாறிவரும் காலம்! மாறத்தான் வேண்டும் இதில்*
*சாவுவரும் என்றாலும் சமுதாயம் துணிந்து வரும்!*

என்று பாடியிருப்பதிலிருந்து மக்கள் தேவையை உணர்ந்த கவிஞனின் மனக்கருத்தை உணர்ந்து கொள்கிறோம். சம பங்கீட்டுமுறை அமுலுக்கு வந்துவிட்டால் ஏழைகளுக்கு அதைவிடப் பாதுகாப்பு வேறொன்று மில்லையே! அந்நிலையை அடைய முடியும்படியான ஒரு மாற்றம் சமுதாயத்தில் வருமென்று ஆணித்தரமாகப் பேசிய கண்ணதாசன் ஒரு நம்பிக்கை வாதியாக இங்குத் தோற்றமளிக்கிறார்.

### மாற்றத்தைப் பெறும் வழிகள்

தேவைகளை நியாயமாகக் கேட்டுப் பாருங்கள். அது நிறைவேற வில்லையென்றால் அதனை அடைய வேறுவழிகளைப் பாருங்கள் என்கிறார் கண்ணதாசன். கூழுக்கு அழுவோருக்கு அதைக் கொடுக்க வில்லையெனில், அதனைப் பெற அவர்களைக் குத்திக்கிளப்பி விட வேண்டுமென்கிறார். இருப்பவர்களிடமிருந்து பறித்துக் கொள்ளுங்கள் என்று சொல்லிக் கொடுக்க வேண்டு மென்கிறார். அது போல் காசுக்கு அழுவோரை அழிக்க வேண்டுமாம். அவர்களது தனி உரிமைக் கோட்டையாக இருக்கும் மேட்டை இடித்துத் தகர்க்க வேண்டு மாம். கூடவே இருந்து பொதுமக்களின் நன்மைக் கெதிராகச் செயல் படும் குள்ளநரிக் கூட்டத்தாரையும் குழிதோண்டி மூடவேண்டு மென்கிறார் கண்ணதாசன்.

### பொதுவுடமையும் சமதருமமும்

தான் மனதில் கண்ட பொதுவுடமைத் தத்துவமே இன்னொரு முறையில் குடியரசு சமதருமமாக மலர்ந்திருக்கிறது என்றபோது கண்ணதாசனுக்கு தாங்க முடியாத மகிழ்ச்சி. நாடும் மக்களும் தன்னிறைவுடன் வாழும் வழிகள் தெரிந்தாயிற்று. வழிகாட்டவும் சொல்லவும் தலைவரும் இருக்கிறார். இனி, பயணம் செய்தால் போதுமே! என்று குதூ கலங் கொண்டார்.

### மக்களின் மெத்தனம்

ஆனால் மக்களோ தங்களைத் தேடி எல்லாம் வருமென்று பேசாமலிருந்தனர். மக்கள் சோம்பேறிகளாகவே இருந்தனர். அதைப் பயன்படுத்திக் கொண்டு போராட்டங்கள் ஆரம்பமாயின. நாச வேலைகளும் நடந்தன. இதனால் நாடு சீரழிவை நோக்கிப் போக ஆரம்பித்தது. சமதருமம் மலருமென்ற நம்பிக்கையும் குறையத் தொடங்கியது. அப்போது தான், மக்களாட்சியில் தேசிய அளவிலான சமத்துவம் வர நம் நாட்டமைப்பு போதாது என்ற எண்ணம் கண்ணதாசனுக்கு வந்தது.

### கவிஞரின் வேதனை

பாரத நாட்டின் வீரசுதந்திரம் கண்ட பலன்களை அடுக்கத் தொடங்குகிறார். நீரும் வளமும் நீண்டு கிடக்கும் நிலமும் தொழிலும் பாராய்! பிறர்பணி செய்தே பேதையராகிப் பேடியராகி, காசுக்கு இச்சகம் பேசும் மனிதனைப் பாராய்! கூனிக் குறுகி, குழைந்து வளைந்து, கொத்தடிமைத் தனக்கோலமடைந்து, மானமிழந்து, மதியுமிழந்து, வாழ்வும் சாவும் ஒன்றென வாழ்ந்து கொண்டிருந்த வனுக்கெல்லாம் ஒரு மதிப்பைக் கொடுத்த சுதந்திரத்தைப் பாராய்!

உரிமைகள் சோறு போடாதே! தேவைகளை நிறைவேற்றாதே! தத்தம் கடமை உணரா மனிதர் தங்கள் வீட்டுக்குள்ளே நியாயம் பேசிக் கிடக்கும் பேதமையைக் கண்டு கண்ணதாசன் மனம் வெதும்பினார்.

> நிதந்தரும் வயலில் நீரோடா விடில்
> சுதந்திரம் வந்து சோறு போடுமா?
> மாடு படுத்து மயங்கி விழுந்தால்
> மணிக்கொடி வந்து வயலில் இறங்குமா?

என்று கேட்டவர், மக்கள் இதனைக் குறித்துச் சிந்திக்க வேண்டுமே என்றும் வேதனப்பட்டார். இவர்களுக்கு வழங்கப்பட்டிருக்கும் பேச்சுரிமையினால்,

கட்டுத் திண்ணையில் கால்கள் மடக்கி
கவுளி வெற்றிலை கடித்துக் குதப்பி
சட்டம் பேசிச் சரித்திரம் பேசி
ஜான்சன் முதலாய் ஜவகர் லால்வரை
விமர்சனம் செய்யும் வெள்ளை வேட்டி
வேதாந் தத்தில் வேதனை தீருமா?

என்றும் கோபப்பட்டுள்ளார் கண்ணதாசன். குற்றம் மக்கள் மனதிலும் குணத்திலும் தான் என்பதனைக் கண்டறிந்தவர்

முன்னே ஒருவன் முட்டியி லடித்தும்
பின்னே ஒருவன் பிடரிபிடித்தும்
ஜனநா யகத்தைச் சகதி யாக்கினால்
தொழிலா வளரும் தொல்லையே வளரும்

என்று மிகச்சரியாகப் பாடியுள்ளார்.

### மக்களின் மனநிறைவின்மை

மக்களாட்சியினால் பலன் ஒன்றும் விளையவில்லையென்றும் புதுத்தொழில்கள் மலரவில்லை என்றும் மக்கள் அலுத்துக் கொண்டனர். தங்கள் அதிருப்தியையும் தெரிவித்தனர். என்ன சுதந்திரம் இது, எதற்கிது வந்தது, நமக்கு என்ன தந்தது என்றெல்லாம் கேட்டனர். இதனால் துயரமே விளைந்தது என்றனர்.

### கவலைகளை நீக்கும் வழி

மக்களுடைய கவலைகளுக்கான அடிப்படைக் காரணங்களையும் கண்டறிந்தார் கண்ணதாசன்.

ஜனநா யகமும் சராசரி மனிதன்
அலட்சிய மதியும் அரசியல் வாதியும்
........................
தாயகக் குறையைத் தலையிற் சுமந்து
வேற்று நாட்டிலே விற்கும் வீணரும்
ஒழுங்கு பெறாத உரிமைகளுந்தான்
காரணம் இன்றைய கவலைக் கெல்லாம்

என்று அடுக்குகிறார். மக்களாட்சி அமைப்பில் இருந்து கொண்டு முன்னேற முடியவில்லை யென்றால் உரிமைகளில் கை வைக்க வேண்டிவரும். உற்பத்தி பெருகி, வறுமையும் மாற வேண்டுமானால், நாடு முன்னேறி நலங்கள் பெருக வேண்டுமானால் மக்களாட்சியைச்

சற்றே நிறுத்தி வைத்தால் என்ன என்ற யோசனையையும் வெளியிட்டார்.

மக்கள் பால் இரக்கம்

தன் பசியை விடத் தன்னைச் சேர்ந்த மக்களின் பசி கண்ணதாசனுக்குப் பெரிதாகப் பட்டது. வாட்டும் வயிறுகளின் நிலை கண்டு ஏங்குகிறார். சுதந்திர பூமியில், தான் வாழும் சமுதாயத்தில் மக்கள் பட்டினியோடு வாடுவதைக் கண்ணதாசனால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. ஏழைக் குடிசையில் கொதிக்க உலை நீரில்லாமல் ஏங்கித் தவிக்கும் பானையொன்றின் கதையினைக் கூறுகிறார் கண்ணதாசன்.

வாரத்தில் ஒருநாள் கொதிப்பேன் கஞ்சி
வார்த்துக் கொடுப்பதற் காக - பசி
தீர்த்து முடிப்பதற் காக - பின்னர்
ஓரத்திலே பலநாள் கிடப்பேன் நல்ல
ஓய்வு பெறுவதற் காக - வீட்டில்
உள்ள குழந்தைகள் சாக!

என்று அதன் அவல நிலையைப் பேசுகிறார்.

பானைக்கு நல்ல ஓய்வு தான். ஆனால் வீட்டிலுள்ள குழந்தைகளின் நிலை விபரீதமாகப் போய்விடுமே! எப்போதோ அரிசியை நேரில் காணும் நேரம் தான் கொண்டாட்டம் வரும். அன்று வீட்டுத் தலைவி மிகவும் மகிழ்ச்சியுடன் குழந்தைகளோடு சாப்பிடுவாள். பின் ஒரு மூலையில் பானையைச் சாய்த்து வைப்பாள். மீண்டும் அதனை எடுக்க எத்தனை நாள் ஆகுமோ? தெரியாது! இந்த நிலைதான் இன்றளவும் பல குடும்பங்களில் தொடர்ந்து கொண்டிருக்கிறது. இங்கு வந்த சுதந்திரம் ஏழை மக்களுக்குப் பயன்பட வில்லை யென்ற வேதனையில் பாடுகிறார்.

இப்படியே பசி நீளுமென்றால் இது
என்ன சுதந்திர பூமி? - ஏன்
இத்தனை ஆயிரம் சாமி? - ஒரு
கைப்பிடியில் பலபூட்டை உடைத்தின்று
காத்திடுவோம் எங்கள் வீட்டை - பழி
தீர்த்திடுவோம் இந்த நாட்டை!

என்று ஆவேசமாக அழைப்பும் விடுக்கிறார்.



பசி தீர்க்கும் வழி

ஏழைகளின் பசி எவ்வளவு கொடுமையானது என்பதனை நாடும் மக்களும் உணரவே நாட்டையே பழி வாங்கும் அளவிற்குச் கோபாவேசத்தைக் கவிதையில் காட்டியுள்ளார். நாட்டு மக்களின் பசியைப் போக்குவது அரசாங்கத்தின் கடமையென கவிஞர் வலியுறுத்துகிறார். அவர்கள் பசிக்கு உணவு கிடைக்க வில்லையெனில் செய்ய வேண்டியது என்ன என்பதிலும் அவருக்குத் தெளிவிருந்தது.

நெஞ்சை நிமிர்த்துங்கள் தோழர்களே இனி
நேருக்கு நேர்நின்று பார்ப்போம் - சம
நீதிக்குப் போர்ப்படை சேர்ப்போம் - இனிப்
பஞ்சைப் பராரிகள் துஞ்சி இரந்துண்ணும்
பட்டினிக் கோலத்தை மாய்ப்போம் - நெஞ்சின்
பாரத்தை வேருடன் சாய்ப்போம்!

என்று குரல் கொடுத்தார். அடிப்படையான சில மாற்றங்கள் வந்தால் தான் நிலைமை சரியாகும் என்ற எண்ணமும் கொண்டிருந்தார். ஒட்டைக் குடிசைக்குள் கூட்டுக் குடும்பங்கள் வாடி வதைகின்றன. அவர் களையும் மாளிகை மஞ்சத்தில் ஏற்றி வைக்க வேண்டுமெனக் கண்ணதாசன் விரும்பினார்.

............இந்த
நாட்டுப்பொருள் எங்கள் வீட்டுப்பொருள் என்று
நாட்டிடுவோம் படை கூட்டி - விழி
காட்டிடுவோம் கனல் ஊட்டி!

என்று போருக்கும் தயாராகிறார்.

வேண்டாம் வர்க்கப் போர்

திடீரென பெரிய மாற்றங்களைக் கொண்டு வருவது என்பது கடினமான ஒன்றுதான். ஆனால் ஒரு சாராரை வேதனையில் வாடவிட்டு மறுசாரார் சுகமாக வாழும் வாழ்க்கை நிலை சரிதானா? இந்நிலை மாற வேண்டாமா எனவும் கவிஞர் கேட்கிறார். இருப்பவர்கள், தாங்களாகவே உணர்ந்து இல்லாதவர்களுக்குக் கொடுக்கும் பட்சத்தில் எந்தச் சக்தியாலுமே அதைத் தடுத்து நிறுத்த முடியாதென்கிறார். ஆனால் அந்நிலை உருவாகவில்லையே! அப்போது ஆவேசத்தில்

ஆலைய ரசுகள் சோலைமி ராசுகள்
பாலில் மிதந்தது போதும் - அதைக்
காலில் மிதித்திட வாரும் - இங்கு
வேலை இழந்தவர் வீதி முனைகளில்

*கூழுக்க லைவதைப் பாரும் - அவர்*

*கூட்டத்தை ஓரணி சேரும்!*

என்று அறை கூவல் விடுக்கிறார். இல்லாதவர்களுக்காக இரங்கும் இந்தக் கவிஞர் சமுதாயப் பிரச்சனைகளையும் அவற்றைத் தீர்ப்பதற்கான வழிகளையும் தெரிந்து வைத்திருந்தார். வேலையில்லாத் திண்டாட்டம் சமுதாயத்தில் மிகப்பெரிய ஒரு பிரச்சனை. இவர்களுக்காகக் கண்ணதாசன் பரிந்து பேசுகிறார். அதே வேளை, இந்நிலைக்குக் காரணமானவர்கள் யாரென்றும், இது எப்படி உருவாயிற்று என்பதையும் தெரிந்து வைத்திருந்தார். அதனால்தான் ஏழைகள் எல்லாம் ஓரணியில் சேரவேண்டுமென்று அழைப்பு விடுத்தார். ஏழைக்கு நீதி கிடைக்கவில்லை எனில் அப்புறம் அவன் மட்டும் நீதி பார்க்க வேண்டுமா என்று கோபங்கொண்டதும் அதனால்தான்.

### வெற்றிக்கான வழிகள்

வாழ்க்கை வளத்தைத் தடுக்கும் தரும கர்த்தாக்கள் போன்ற மனிதர்களை நாம் ஒரு கை பார்ப்போம் என்கிறார் கண்ணதாசன்

.................இங்கு

*தீயும் வயிறுகள் சேர்ந்தெழுவோம் அந்த*

*தீயின் கிளைகளைப் போலே - கொடுந்*

*தீயவர் மாளிகை மேலே!*

நாம் பாய்ந்து போய் வாங்குவோம் நம் பங்கினை என்று கூறுகிறார். கூடிக் கலைகின்ற மேடையில் கொட்டி முழக்குகின்ற பேச்சுக்களை நம்பிய ஏழை, வெறும் கூட்டத்தை நம்பிய கோழை. மாடிவீட்டு மஞ்சத்தில் துஞ்சிடும் மந்திரிகளை நம்பி பலனொன்றும் இல்லை. தேவைகள் நிறைவேறும் காலத்திற்காகக் காத்திருக்கும் நேரம் தான் நீளுகிறதே தவிர காரியங்கள் ஆகவில்லை. அதனால்,

*மூடிய கைகளை மேலுயர்த்து - உந்தன்*

*மூச்சில் கனல்விட்டுக் காட்டு - உந்தன்*

*பேச்சில் புரட்சியை ஊட்டு - பல*

*கோடிப் பராரிகள் ஒன்று பட்டாலது*

*கோட்டைத் தகர்த்திடும் கூட்டு - அதைக்*

*கூட்டட்டும் நாட்டிலென் பாட்டு!*

என்று தன் திட்டங்களை விவரித்திருக்கிறார் கண்ணதாசன். இல்லாதவர்களை ஒன்று திரட்டி அவர்கள் நிலையை உயரச் செய்ய வேண்டுமென்று எண்ணியிருந்த கண்ணதாசன்

பன்றியும் நாயும் பந்தயம் போடும்
பாதையின் ஓரத்திலே - பல
பட்டினிப் படைகள் துடிப்பது பாராய்
பாரத தேசத்திலே!

என்று இல்லாதவர்களின் நிலைக்காக மனமிரங்கிப் பாடியுள்ளார்.

## ஏழைப் பெண்கள் நிலை

ஏழைப் பெண்களின் நிலையை முதலில் பேசுகிறார். மணந்தவனுடனே கலந்து மகிழ மறைவிடமில்லை. அவர் திறந்த வெளியில் கலந்து பிறந்தது தான் செந்தமிழ்ப் பிள்ளை. வான் இடிக்கும் கோபுரத்தில் மலர் மஞ்சம் போட்டு சுக ஞானம் படிக்கும் செல்வரை அழைத்து இந்நாடகத்தைக் காட்டு என்கிறார்.

செல்வர்கள் தான்இதன் காரண மென்றால்
செல்வர்கள் அழியட்டுமே - இது
தெய்வம் நடத்தும் நாடக மென்றால்
தெய்வம் ஒழியட்டுமே!

என்று வெறுப்பை உமிழ்ந்திருக்கிறார். அத்துடன் நில்லாமல் தோழர்களைப் புறப்பட்டு வரும்படி அழைக்கிறார். அவர்களுடைய துடிக்கும் ரத்தம் பேசட்டும்! நெஞ்சம் துணிந்து நிமிரட்டும் என்று ஆவேசத்துடன் ஆதரவு கொடுக்கிறார். உழைக்கும் வர்க்கத்தினர் அனைவரும் ஒன்று சேர்ந்து உரிமை பெற வாருங்கள் என்றழைக்கிறார். பூட்டியிருக்கும் விலங்குகளை நாம் இழப்போம் ; பொன்னுலகைக் காண்போம், வாருங்கள் என்று குரல் கொடுத்துள்ளார்.

மூலதனத்தில் பங்குண்டு
முடிவில் வெல்லும் திறமுண்டு
காலம் நமதே நமதென்று
கதவு திறக்கும் வா இன்று

என்று நம்பிக்கையுடன் பாடியுள்ளார்.

## செல்வந்தர்களின் மனநிலை

மனிதனின் தீராத ஆசைகளையும் தான் மட்டுமே சுகமாக வாழவேண்டுமென்ற அவன் எண்ணத்தையும் பார்த்துக் கண்ணதாசன் பதிலுக்குச் சாட்டையடி கொடுக்கிறார். செல்வம் உள்ளவர்கள் என்ன செய்கிறார்கள்?

எல்லாத் தலைமுறைக்கும்
இப்பொழுதே சேர்ப்பதென்று

செல்லாத பக்கமெலாம்

சென்று பொருள் தேடுகின்றீர்!

என்று அவர்களைக் கடிந்து கொண்டுள்ளார். இல்லை என்றழுவோர்க்கு கொஞ்சம் அளித்தால் இவர்கள் செல்வமென்ன குறைந்தா போய்விடும்? என்று எண்ணிய கண்ணதாசன்

இல்லைஒரு வாய் கவளம்

என்றழுவார் தம்வயிற்றில்

அள்ளிஒரு கையளித்தால்

ஆஸ்தி குறைவுறுமோ?

என்று சீறுகிறார். வேலையில்லாத் திண்டாட்டம் ஒரு பக்கம், வசதியின்மை மறுபக்கம். இதனிடையில் அகப்பட்ட மனிதனுக்கோ நாளும் பொழுதும் தொல்லைகளே. சமதருமம் வரும் ஏழையும் எல்லாமும் பெறுவான் என்றால்

வருமோ சமதருமம்

வறுமையினைப் பங்கிட்டுத்

தருமோ

என்று அந்தத் தத்துவத்தைக் கிண்டல் செய்து பேசித்தங்கள் திறமையைக் காட்டிக் கொள்கிறார்கள். ஆனால் இந்த நிலையில் எத்தனை நாட்கள் தான் தொடர முடியும்? ஏழையின்,

அடிவயிறு பற்றிவிட்டால்

அடுத்து நடப்பதென்ன?

கொடியபசி வந்து விட்டால்

குமுறும் எரிமலைதான்

என்பதால் நியாயமாக நடந்து கொள்ளுங்கள் என்று செல்வந்தர்களுக்கு அறிவுரை தருகிறார். அத்துடன் நின்று விடாமல் செல்வந்தர்களைப் பார்த்து

நீங்களே வைத்த கொள்ளி

நீள்காற்றில் மேலெழுந்து

ஓங்குவதைக் கண்ட பின்னர்

ஓலமிட்டால் என்னபயன்?

என்று முன்னெச்சரிக்கையும் செய்துள்ளார் கவிஞர். மட்டுமன்று; சமுதாய அமைப்புச் சரியாக இயங்காததனால் தான் நக்சல் பாரிப்புரட்சியே நாட்டில் எழுந்தது என்றெண்ணினார் கண்ணதாசன்.

நக்சல்பாரிப் புரட்சி

நாட்டில் எழுந்ததற்கு
நச்சுபரி மாறியநீர்
நாளும் பொறுப்பேற்பீர்

என்று செல்வந்தர்களை அவர்களுடைய கனவுலகிலிருந்து இந்த உலகிற்கு அழைக்கவும் செய்துள்ளார். பறந்ததுபோதும், பூமிக்கு வாருங்கள்; வந்து உண்மை நிலையை உணர்ந்து கொள்ளுங்கள் என்று பாடியுள்ளார்.

கொடுமைகளிலேயே வைத்து மிகப்பெரிய கொடுமை - இல்லாமை - அது எதையும் செய்யத் தூண்டும். சிந்திக்கவே விடாது. இதனால் திருட்டு வரும் ; பகை வளரும் ; பொய் விளையும் ; பசியால் உறவினிலும் கொலைகள் விழும். புரட்சி வரும்; பாமரர்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்தெழுந்தால் அசையாத மாளிகையும் அசையும். நாட்டில் புரட்சியும் வெடிக்கும். இந்நிலை உருவாகாமல் தடுத்து நிறுத்த வேண்டுமென்று நினைத்த கண்ணதாசன்

தொழிலைப் பொதுவாக்கிச்
சொத்துரிமை நீக்கிவிட்டால்
அழிவைத் தடுப்பதற்கு
அடிப்படை போலாகிவிடும்

என்று அதற்கான வழியையும் கூறியுள்ளார்.

### வேலையில்லாத் திண்டாட்டம் தீர ஒரு வழி

வேலையில்லாத் திண்டாட்டம் விரைவில் ஒழிவதற்கு வழிவகுத்தால் மக்கள் புரட்சி நின்றுவிடும். என்ன முதலாளிகளே இவை உமக்குச் சம்மதமா? என்ன மனிதர்களே இதில் உமக்குச் சங்கடமா? என்று கேட்கிறார் கண்ணதாசன்.எப்போதாவது தான் தொழிலாளியின் வீட்டில் பானை பொங்குகிறது. தொழிலாளியின் பட்டினிக் கோலத்தையும் இரந்துண்ணும் நிலையையும் அரசாங்கத் தாலும் மாற்ற முடியவில்லை. அனைவருக்கும் அனைத்தும் என்ற கண்ணதாசனின் கொள்கை இதனால் ஆட்டங்காண்கிறது. அந்த வேதனையின் கோபத்தில் முதலாளிகளையும் அரசியல்வாதிகளையும் பார்த்து

வகுப்புவெறி பற்றியெல்லாம்
வாயாரப் பேசுகிறீர்;
வர்க்கப்போர் பற்றிஉங்கள்
வாயேன் திறப்பதில்லை!

என்று மிகவும் வெளிப்படையாகவே கேட்கிறார்.

மலையாளக் கவிஞர் குமாரனாசான் 'சட்டங்களை நீங்களாகவே மாற்றி விடுங்கள். இல்லையேல் அவை உங்களை மாற்றிவிடும்' என்று எச்சரித்திருக்கிறார்.

கண்ணதாசனும் அதுபோன்று எச்சரிக்கை செய்துள்ளார்.

கண்முன் நடப்பதனைக்
காணாமல் நீரிருந்தால்
கண்ணுக்குப் பின்னாலே
காரியங்கள் ஆகிவிடும்

என்பதால் நிலைமை முற்றாமல் பார்த்துக் கொள்ளும்படி செல்வந்தர்களுக்கு அறிவுரை தருகிறார்.

## மனிதன் மாற வேண்டும்

அவசியம் வரும்போது. காலத்தின் கட்டாயம் வரும்போது மனிதன் மாற்றங்களை மேற்கொள்ள வேண்டும் எனும் கண்ணதாசன் அதற்கான காரணங்களையும் அடுக்கிறார்.

ஆழ்கடல் போந்து முத்த மெடுத் தோன்
அணிந்ததே இலைஅவன் கழுத்தில்
சூழ்நிலம் பிளந்து தங்கமெடுத் தோன்
தொட்டதல் லால்சுக மில்லை
பாழ்நிலம் புதுக்கிப் பயிர்களை வளர்த்தோன்
பசியெலாம் தீர்ந்ததும் இல்லை
வாழ்வதற் கென்றே மண்ணிடைச் சிலர்தான்
வந்தனர் கண்ணபி ரானே!

பலமாடி கட்டுபவர்கள் இடுக்குகளில் வசிக்கிறார்கள். இழிந்த இந்த நிலையில் அவரை நாயினும் கீழாக எண்ணுபவர்கள் மட்டும் வாழ்வதுதான் விதியோ என்று வேதனையோடு கேட்கிறார். ஏழை தனக்காகக் கேட்கவும் முடியவில்லை. அவனுக்காகக் கொடுப்பாருமில்லை என்ற நிலையைப் பார்த்தபோது தான் எந்த வழியிலானாலும் மாற்றம் வந்தே தீர வேண்டும் என்றார் கண்ணதாசன். அந்தத் தீவிரமான எண்ணமே

பரந்தோர் நிலத்தை ஒருவர்கொள் ளாமல்
பங்குபோட் டமைப்பதெம் வேலை!
இரந்துணும் பேரே எவருமி லாமல்
எழிலுறச் செய்வதெம் வேலை
கரங்களின் வலிமை கட்டிய உலகம்

*கனத்தவர் கொள்வதை ஏலோம்*

*நிரந்தர மாயவர் சுதந்திரம் காண*

இதோ புறப்பட்டு விட்டோம் என்று கவிஞரைப் பாடத் தூண்டியது.

### எல்லோருக்கும் எல்லாமும்

எல்லோருக்கும் உண்ண உணவும் இருக்க இடமும் கிடைத்தால் தான் தொழிலாளர்கள் சுதந்திர பூமியில் வசிக்கிறார்கள், வாழ்கிறார்கள் என்று பொருள். மற்றப்படி பேசவும் எழுதவும் தரப்பட்டுள்ள சுதந்திரத்தினால் அவனுக்குச் சோறு கிடைப்பதில்லையே! தாங்கள் உருவாக்கும் உலகின் பலன்களைத் தொழிலாளிகள் பெற வேண்டுமென்று கண்ணதாசன் ஆசைப்பட்டார். இல்லாதவர்கள் உருவாக்குகிறார்கள். ஆனால் அவர்கள் இல்லாதவர்களாகவே இருக்கிறார்கள். இது கண்ணதாசன் மனதை மிகவும் வேதனைப்பட வைத்தது. ஆனால் அதற்காக என்ன செய்ய வேண்டுமென்றும் அதை எப்படிப் பெற வேண்டுமென்றும் கவிஞர் கூறியுள்ளார். நேரான வழியில் முதலில் கேட்டுப் பார்ப்போம். தரவில்லையெனில் எடுத்துக் கொள்வோம் என்றார். புரட்சியை ஆதரித்த போதும் வன்முறை கூடாதென்று சொல்ல அவர் தவறவில்லை.

### வன்முறை வேண்டாம்

1975-ம் ஆண்டு உள்நாட்டு நெருக்கடி நிலை அமுல்படுத்தப் பட்டபோது தங்கள் எதிர்ப்பைக் காட்டுவதற்காகச் சிலர் வன்முறையில் இறங்கினர். இதனால் இருப்புப் பாதைகள் இடம் விட்டகன்றன. நெருப்புக் கங்குகள் நிலமெல்லாம் தெறித்தன. சரக்கு வண்டிகள் தவிடு பொடியாயின. சாலையில் எல்லாம் சகதிபோல் குருதியும் கிடந்தது. வெடிகள், வாணங்கள்போல் விழுந்தன, பறந்தன.

வாழ்க என்று சிலர் முழுங்கினர். எங்கள் நாட்டைக் கொடு என்று சிலர் கேட்டனர். பள்ளி மாணவர்கள் பயந்து போய் வீடு திரும்பினர் பெண்களெல்லாம் பதறிப் போயினர். காவல் நிலையங்கள் தீ வைக்கப்பட்டன. கடிதங்கள் எரிக்கப்பட்டன. அதனைக் கண்டு கண்ணதாசன் வெகுண்டெழுகிறார். அங்குலம் அங்குலமாக வளர்ந்ததை, நீர் அடி அடியாக அழிக்கிறீரே! இது தருமமா நியாயமா என்று கேட்கிறார்.

மன வேதனையின் உச்சத்தில் பாரதப் புதல்வர்களின் கால்களில் விழுந்து வணங்கிக் கேட்டுக் கொள்கிறார்.

*கோரிக்கை கூறுங்கள்; கூடுங்கள்; பேசுங்கள்*

*உண்ணா விரதத்தால் உயிர்விட்டுக் காட்டுங்கள்*

பொதுச்சொத்து உங்கட்கும் பொதுச்சொத்தே அல்லவா
பொசுக்காதீர்; உம்மைநீர் பொசுக்காதீர் நண்பரே!

அழிவுப் பாதையில் செல்லாதீர்கள்; ஆக்கப்பாதையில் செல்லுங்கள் என்று ஓர் அறிவுரையும் தருகிறார்.

மக்கள்தொகை

மக்கள் தங்களுடைய எதிர்காலத்தைப் பற்றிச் சிந்திக்கிறார்களா என்று கண்ணதாசன் ஐயம் கொண்டிருந்தார். இன்றைய பாடு இன்றைக்கு; நாளையபாடு நாளைக்கு என்றிருந்தால் அதன் பலன் விபரீதமாகிப் போய்விடுமென்று அஞ்சியிருக்கிறார். ஒரு கட்டுப் பாடான திட்டம் மக்களிடையே வேண்டுமே! மக்கட் தொகைப் பெருக்கத்துக்கேற்ப உற்பத்தியும் பெருகினால்தானே அமைதியான சூழ்நிலையில் நாடு போகமுடியும். அதை நினைக்காமல் ஒரு கட்டுப்பாடுமின்றி பிள்ளை பெற்றுக் கொண்டேயிருந்தால் கி.பி. 2000ல் இந்தியாவின் நிலை எப்படியிருக்கும் என்பதனைக் கண்ணதாசன் கற்பனை செய்துள்ளார்.

ஒருநூறு கோடியாய்
மக்கட் தொகைகூடி
உணவுக்குத் தத்தளிக்கும்
ஓராயிரம் கட்சி
பேதங்கள் தோன்றியே
உள்நாட்டு யுத்தம் மூளும்
பொருள்நூறு கொண்டவர்
பூட்டை உடைக்கின்ற
புரட்சியை நாடு காணும்
..............
உருவான தொழிலெலாம்
உதவாது போய் எங்கும்
உற்சாக மற்று விடுமே

நினைக்கின்ற வேளையில் கிடைக்கின்ற லாபமே பெரிது என்றெண்ணும் நிலை வருமே என்றும் தன் வேதனையை வெளிப்படுத்தியுள்ளார்.

## இருவேறு வர்க்கம் இனிமேல் இல்லை

மேடும் பள்ளமும் என்று இருவேறு வர்க்கம் கூடாது என்பதில் கண்ணதாசன் தீவிரமாக இருந்தார். ஒவ்வொருவருக்கும் இவ்வளவு என்று அளந்து தரும் காலம் வரவேண்டுமென்றும் ஆசைப்பட்டார். இவையெல்லாம் இல்லாத ஒரு சூழ்நிலையில் இருந்து கொண்டு இவற்றுக்காக ஏங்குகிறார். ஏக்கத்தின் அடியில் குறிக்கோள் இழையோடுகிறது.

இருக்க இடமும் வரும்
எல்லோர்க்கும் வாழ்வு வரும்
எரிக்கும் விளக்கினிலே
எப்போதும் ஒளியும் வரும்
காலத்தால் அமைதி வரும்
காணாத வாழ்வு வரும்
காமராஜ் ஆள வந்தால்
கண்ணீருக்கு முடிவு வரும்
காலம் வரும் கண்ணே - நீ
கண் துயில்வாய் முன்னே

என்ற தாலாட்டுப் பாடல்வழி மனதுக்குள் அமைதி காண்கிறார். மக்களின் பொதுவான நலன்களோடும் நாட்டுத் தொடர்புடைய செய்திகளோடும் நிலையான உண்மைகளோடும் தன்னை ஒன்றச் செய்து கொண்டிருக்கும் கண்ணதாசனை இங்குப் பார்க்கிறோம். மக்களின் நிரந்தரத் தேவைகள் நிறைவேற வேண்டுமென்ற அவர்தம் ஆசையை உணர்கிறோம். நாட்டின் நிலை திருப்திகரமாக இல்லாத ஒரு சூழ்நிலையில் இருந்து கொண்டு நல்ல எதிர்கால நம்பிக்கையுடன் பாடியிருக்கும் கவிஞரின் மனத்துடிப்பில் உலகளாவிய பார்வை தெரிகிறது.

## விதவைகள் மறுமணம்

சமுதாயத்தின் கொடிய பிரச்சனைகளுள் ஒன்று விதவைகள் மறுமணம். ஆடவன் தன் மனைவியை இழந்தால் அவனுக்கு மறுமணம் செய்விக்க ஆசைப்படும் சமுதாயம் பெண்களின் மறுமணம் பற்றிப் பேசவே அஞ்சுகிறது. அறிவுபூர்வமாகப் பிரச்சனையை அணுக மறுக்கிறது. பழமையைக் காக்கும் பொருட்டு பருவமே பொய்யென நினைக்கலாகுமோ என்கிறார் கண்ணதாசன். அவர்களுக்காக உடனே குரலும் கொடுக்கிறார்.

மங்கலக் கணவன் மடிந்தபின் அவளும்
மாள்வதே விதியென வகுத்தோம்
மங்கையர் குலங்கள் மட்டுமே வாழ்வின்
மறுமணம் பெறுவதைத் தடுத்தோம்
பொங்குமோர் பருவம் பொசுக்குமே யென்னும்
புத்தியில் லாமலே கழித்தோம்
இங்குநாம் பெண்ணுக் கிடர்செய்தோ மன்றி
இதுவரை வாழவா விடுத்தோம்?

என்று சமுதாய சீர்திருத்தத்தின் பக்கம் பேசுகிறார். போன தலைமுறையினர் விதவை மறுமணத்தைப் பற்றி பேசவே அஞ்சினர். ஆனால் இந்தத் தலைமுறையினரோ இதைப்பற்றி பேசவும் விவாதிக்கவும் செய்கின்றனர். அபூர்வமாகச் சிலர் விதவைகளை மணக்கவும் செய்கின்றனர். ஒரு விதவையின் மறுமணத்தில் கலந்து கொண்டு வாழ்த்திப் பாடும் போதுதான் கண்ணதாசன், சமுதாயத்தில் புரையோடிப் போயிருக்கும் இந்தப் பிரச்சனையைப் பற்றிப் பேசுகிறார். இந்திய சமுதாயத்தைப் பொறுத்தவரையிலும் இது புரட்சிகரமானது. சீர்திருத்த மனப்பான்மை உள்ளது. நம் சமுதாயம் இதனை அவ்வளவு எளிதில் ஏற்றுக் கொண்டு விடாது தான். ஏழ்மையின் பிடிப்பு, உண்மைகளைக் கூட நேருக்கு நேர் சந்திக்க உறுதியில்லாமல் ஓடி ஒளியச் செய்கிறது என்பதனையே கண்ணதாசன் இங்கு வலியுறுத்துகிறார். செல்வந்தர்கள் தேவையென நினைக்கும் நேரம் விதவை மறுமணம் கூட எளிதாக நடந்தேறும் என்ற செய்தியை உள்ளடக்கியே இங்கு அவர் கருத்து வெளிப்படுகிறது.

### விலைமாதர் விவகாரம்

நம் சமுதாயத்தின் இன்னொரு பிரச்சனை விலைமாதர் விவகாரம். தங்கள் உடலையே விற்றுச் சில பெண்கள் வாழும் கட்டாய நிலைக்கு ஆளாகிறார்கள். இதற்குப் பெண்களே காரணமென்று ஒரு தலைப்பட்சமாகப் பேசுவோருமுண்டு. ஆனால் கண்ணதாசனோ வெனில் இதனை வேறுவிதமாகப் பார்க்கிறார். ஒழுக்கமற்ற ஆண்கள் தங்கள் தேவைக்காக உருவாக்கியதே இப்படிப்பட்ட பெண்கள் கூட்டமென்பது அவருடைய வாதம். ஆடவரின் பலவீனத்தின் அடையாளங்களே இப்பெண்கள். இந்த விலைமாதர்கள் சமுதாயத்தைக் கெடுத்துவிட்டார்கள் என்பவர்களுக்குக் கண்ணதாசன் - அவர்கள் நமது பொருளாதாரம் உருவாக்கிய பொதுக்குழந்தைகள் என்று பதில் தருகிறார்.

வறுமை தான் இதற்கு அடிப்படை என்கிறார். வசதி யில்லாத வர்களும் உயிர் வாழ வேண்டுமே! அவர்கள் வயிற்றுச் சோற்றுக்கு என்ன செய்வார்கள்? அதனால் சமுதாயத்தின் நிலையே தடுமாறிக் குலையும். உணவில்லாமல் சமுதாயமே குலையும் பொழுது இங்கு ஒழுக்கமில்லையே என்று கவலைப்படுவதில் பொருளில்லையே! எவ்வளவு பெரிய சோதனை வந்தாலும் துன்பம் வந்தாலும் மானம் இழக்கக் கூடாது என்பது சரிதான். ஆனால் ஒருத்தி உடலை விற்க வேண்டி வந்தால் அது சமுதாயத்திற்கு அவமான மில்லையா? என்று கேட்கிறார் கண்ணதாசன். சமுதாயத்தின் மானம் இதனால் தூள் தூளாகிறதே என்று வேதனையுறுகிறார். குற்றவாளிகளே தங்களை நியாயவான்களாகக் காட்டிக் கொள்ளும்போது சமுதாயத்தின் இந்தக் கொடுமையை மாற்றுவது ஒரு சவால்தான் என்கிறார்.

விலைமாதர்கள் ஒரு கட்டாயத்தினால் அப்படி ஆனவர்கள். விரும்பி வந்தவர்களல்ல ; உல்லாசத்திற்காக அப்படி ஆனவர்களும் அல்ல. இவர்கள் சமுதாயத்தினால் பாதிக்கப்பட்டவர்கள். சமுதாயத்தைப் பாதிக்கிறவர்கள். இந்நிலைக்குச் சமுதாயமே முழுப்பொறுப்பும் ஏற்க வேண்டுமென்கிறார் கண்ணதாசன்.

விலைமாதர்களைக் கைது செய்ய உரிமையுள்ள சட்டம் அவர்களுக்குச் சோறு போடுமா என்று கேட்கிறார் கவிஞர். சட்டம் சத்திரம் அல்லவே சோறு போட என்று பதிலும் உடனே தருகிறார். அந்த அபலைகளுக்குச் சட்டம் திருமணம் செய்து வைக்குமா என்று கேட்டு, அவரே சட்டம் என்ன கல்யாணத்தரகரா என்று பதிலும் தருகிறார்.

இந்தச் சட்டம் சாகவாவது விடுமா என்றால் அதுவும் இல்லை. அவர்களைக் குற்றவாளிக் கூண்டில்தான் நிறுத்தி வைக்கும். இதனால் கோபங்கொள்ளும் கண்ணதாசன், நமக்குப் பொருளாதாரத் திட்டங்களைத் தீட்டித்தந்த புண்ணியவான்களையும் நம் அரசியல் சட்டத்தையும் தான் குற்றவாளிக் கூண்டில் நிறுத்த வேண்டுமென்கிறார். விலை மாதர்களுக்கு ஒன்றில் வாழ்வு கொடுங்கள்; இல்லையேல் வழியை விடுங்கள் என்கிறார் கவிஞர்.

வழியில்லாத விலை மகளிரை நினைத்துத் தன் வேதனைகளை யெல்லாம் ஒன்று திரட்டிக் கவிதை வடிக்கிறார்.

> கற்பாம் மானமாம்
> கண்ணகியாம் சீதையாம்
> கடைத்தெருவில் விற்குதடா - ஐயோ பாவம்;
> காசிருந்தால் வாங்கலாம் - ஐயோ பாவம்;
> ........................

பத்தினிகள் பேரை வைத்துப்
பரத்தையரை வளர்த்து விடும்
பாரத பூமி - கறீபைப்
பாருங்க சாமி

என்று அவர்கள் நிலைக்காக இரங்குகிறார். அந்தியும் பகலும் பெண்ணைத் தேடும் ஆடவர் சிந்தனை. அபலைப் பெண்களோ வயிற்றுக்காக விரித்து வைப்பர் பஞ்சணை.

பணமிருப்போர் குடிகெடுத்தால்
பாதுகாக்கும் சட்டமே - நீ
வலையை வீசிப் பிடிப்பதெல்லாம்
ஏழைகளை மட்டுமே!

என்று சட்டத்தின் மேல், சமுதாயத்தின் மேல் தனக்குள்ள நிறைவின்மையை முழுதாகத் தெரிவித்துக் கொள்கிறார் கண்ணதாசன்.

ஞானமிருந்தும் குழந்தைக்காகத் தவறு செய்வாள் ஒருத்தி. படித்திருந்தும் வேலையில்லாததனால் பள்ளி கொள்வாள் ஒருத்தி. நம் மொழியையும் நாட்டையும் தாய்மொழி என்றும் தாய்நாடு என்றும் பேசும் நம் வாய் தாய்மை என்பது மிக உயர்ந்த பண்பென்றும் கூறுகிறது.

இங்குச் சத்தியமும் தத்துவமும் தருமமும் ஒன்று என நம் மனம் சொல்கிறது.

இருந்த போதும்
கண்ணீரில் மிதக்குதடா
கற்பு எனும் ஓடம் - இது
கம்பனுக்கும் வள்ளுவனுக்கும் - ஏன்
கடவுளுக்கும் பாடம்

என்று தன் மனக் குமறலை வெளியிடுகிறார் கண்ணதாசன். ஏழ்மையில் வாழுகின்ற ஏழைகளை விலைப்பொருளாய் மாற்றுகின்ற கொடுமைக்கு மாநிலமே முடிவென்ன? என்று கேட்கிறார் கண்ணதாசன். கண்ணீரும் கம்பலையும் கலைந்து விட்ட கூந்தலுமாய்ப் பேதையாகிப் பெண்நிற்பதுதான் பரமன் விதித்த விதியா? அப்பாவியான இவர்களை யார் காப்பார்? என்ற கண்ணதாசனின் கேள்விகள் பதில் பெறாதவைகளாகவே இருக்கின்றன.

### நாளைய சமுதாயம்

நாளைய சமுதாயம் நல்லமுறையில் உருவாக இந்தத் தலைமுறையில் அடிப்படை போடப்பட வேண்டும். அதற்கான

அறிகுறிகள் நம்மிடையே காண்பதாகவே கண்ணதாசன் பேசி யிருக்கிறார். நமக்குள் சண்டை வரலாம். சச்சரவுகள் வரலாம். ஆனால் அதற்காக நாம் பிறரைத் துணைக்கழைப்பதில்லை. நம் விவகாரங்களை நமக்குள்ளேயே தீர்த்துக் கொள்கிறோம். எண்ணிலா வேற்றுமைகள் இருந்தாலும் நாமனைவரும் இந்தியர்களே என்று அனைவருக்கும் நினைவுபடுத்திக் கொடுக்கிறார் கண்ணதாசன்

நாளைய சமுதாயச் சிற்பிகள் குழந்தைகள். அவர்களை நம் பண்பாட்டில் ஊறவைத்து வளர்க்க வேண்டுமென்கிறார் கண்ணதாசன்.

தாயின் பாலைத் தந்து வளர்த்தால்
தங்கம் போல் வளரும்
............
நோக்கம் ஒன்றைச் சொல்லி வளர்த்தால்
பாரில் உயர்ந்து விடும்!
......................
கல்விக் கடலில் முழ்கிட வைத்தால்
காலத்தை வென்று விடும்!

என்று நம்பிக்கைக்குரல் தருகிறார்.

## புதுத்தொழில்கள்

புதுத்தொழில்கள் கோடி வளர்த்து நம் மக்கள் தொகைக்கு நல்ல வேலை கொடுப்போம், நம்மை அண்டி வருவோர்க்கெல்லாம் சோறும் கொடுப்போம்.இவ்வுலகிற்கு முன் மாதிரியாக நாம் நடப்போம் என்று மக்கள் தங்களை ஆயத்தம் செய்து கொள்ள அழைக்கிறார்.

## சமுதாய நோக்கு

சமுதாயத்தில் தானொரு அங்கமென்ற நிலையில் தன்னையும் சமூகத்தையும் பாதித்தவற்றிற்குக் கண்ணதாசன் சரியான முறை யிலேயே பதில் கொடுத்திருக்கிறார். அரசியல், சமுதாயம், பொருளாதாரம் ஆகியவற்றில் நிறைவான வாழ்வு அனைவருக்கும் கிடைக்க வேண்டுமென்ற உயரிய நோக்கினைக் கண்ணதாசன் கொண்டிருந்தார். பிரச்சனைகளை ஆழ ஆராய்ந்து வெளிவந்தவை அவருடைய கருத்துக்கள். கண்ணதாசனே,

நான் எழுத்தாளனாக இருக்கிறேன், ஆகவே
வறுமையை அறிவேன்.
அரசியிலில் இருந்திருக்கிறேன் ; ஆகவே

அயோக்கியத்தனம் என்ன என்பது புரியும்.
கலைத்துறையில் இருந்திருக்கிறேன் ; ஆகவே
ஏற்ற இறக்கங்களை அறிவேன்''

என்று கூறியிருக்கிறார்.

மாற்றான் பிடியில் இம்மியளவும் சிக்காத, அடிமைத்தளையற்ற விடுதலையே கண்ணதாசன் காணவிழைந்த அரசியல். இல்லாமை இல்லாத சமுதாயத்தைக் காணத் துடித்தார். நாட்டு முன்னேற்றத்திற்கு முட்டுக்கட்டையாய் இருக்கும் அனைத்துக் கொடுமைகளும் மாறவேண்டுமென்று விரும்பினார். கண்ணதாசனின் எண்ணங்கள் மேற்குறிப்பிட்ட குறிக்கோள்களிலிருந்து மாறவில்லை. ஒளிசிந்தும் விளக்காக அமைந்துள்ள கவிதைகள் மிகப்பெரிய உண்மையை வலியுறுத்துகின்றன. கவிஞரின் கனவுகள் எந்தக் கட்டத்திலும் தரையிறங்கி வந்ததில்லை. வானில் சிறகடித்து, சுதந்திரப் பறவைகளாகவே பறந்திருக்கின்றன.

---

# 5
# பிறபடைப்புகள்

**க**விஞர் இலக்கியத்துறையில் காவியங்கள், சிறுகதைகள், நாவல்கள் நாடகங்கள் எல்லாம் படைத்துள்ளார். தன் எண்ணங்களை ஏராளமான கட்டுரைகளாகவும் வடித்துள்ளார். இப்பிரிவுகளை இனிப் பார்ப்போம்.

**காவியங்கள்**: சமுதாயத்தில் உருவாகும் சூழ்நிலைக்கும் அதனடிப்படையில் பிறக்கும் இலக்கியத்திற்கும் மிக நெருங்கிய தொடர்பு உண்டு என்பதனைக் கண்ணதாசனின் காவியங்கள் உணர்த்துகின்றன. பரபரப்பான பொதுவாழ்வு அனுபவங்கள் அவருக்கிருந்தன. அவை மகத்தான பயன்களையும் தந்திருக்கின்றன. பொது வாழ்வில் அவருக்கேற்பட்ட உணர்ச்சிகள் சில காவியங்களை உருவாக்கியுள்ளன. அவை அரசியல் பின்னணியில் அமைந்துள்ளன.

*அரசியல் காவியங்கள்*

திராவிட இயக்க வரலாற்றினைத்தான் 'பெரும் பயண'த்தில் பாடியுள்ளார். ஈ.வெ.ரா. பெரியாரைத் தொடக்கமாகவும் மையமாகவும் கொண்டு பெரும்பயணத்தை எழுதியுள்ளார். அவரில்லாமல் திராவிடர் இயக்கம் இல்லை என்று அவருக்கு மிகப்பெரிய இடம் தருகிறார்.

'கழக மகாகாவியம்' - திராவிட முன்னேற்றக் கழகம் அமைக்கப்பட்ட செய்தியை இதில் கூறியுள்ளார். இக்காவியம் பாதியிலேயே நின்று விட்டது. 'கல்லக்குடி மகாகாவிய'த்தை பாரதப் போருக்கு நிகராக எண்ணிப் பாடியுள்ளார். இதை ஏழு படலங்களாகப் பிரித்துள்ளார். டால்மியாபுரம் ரயில் நிலையம் பெயரைத் தமிழ்ப்படுத்த வேண்டுமென்ற போராட்டத்தினை இதில் விவரித்துள்ளார். கவிஞரும் போராட்டத்தில் பங்கு பெற்றுச் சிறை சென்றார். கட்சி மீது கொண்ட பாசம் அவரை இங்ஙனம் பாடச் செய்தது.

*காதல் காவியங்கள்*

காதலை உயிரோட்டமாகக் கொண்டு கவிஞர் மூன்று காவியங் களைப் பாடியுள்ளார். காதலைப்போல் காதல் தோல்வியும் மூன்றிலும் காணப்படுகிறது. மாங்கனியில் அடலேறு-மாங்கனியின் காதல் நிறைவேறவே இல்லை. ஆட்டனத்தி-மருதியின் காதல் தோல்வியைத் தழுவுவதாக ஆட்டனத்தி ஆதிமந்தியில் பாடியுள்ளார். சாத்தன் சின்னம்மாள் காதல் - கிழவன் சேதுபதியில் காட்டப்பட்டுள்ளது.

இவர்கள் காதலும் மலராமலே போய்விட்டது. அங்ஙனம் கவிஞர் மூன்று காதல் காவியங்களுக்குமே துன்பியல் முடிவினைக் கொடுத்துள்ளார்.

இந்தக் காவியங்களில் எல்லாம் மனிதநேயம்தான் அடிநாதமாக இழையோடுகிறது. அந்தப் பின்னணியில் தோன்றிய இந்தக் காவியங்கள் எல்லாம் தமிழிலக்கியத்தில் அழியாத இடங்களைப் பெற்றுள்ளன.

*காதல் பாவை-தைப்பாவை*

பொங்கலைப் பெண்ணாக உருவகித்த சிற்றேடுதான் தைப்பாவை. இளமை மணம், கலப்பு மணம், கவிஞரின் அகம் எல்லாம் இதில் அரங்கேறியுள்ளன. முத்தமிழ் நாடும், முத்தமிழும், அகப்புறக் காட்சிகளும் காதல் ஊடல் கூடலும் எல்லாம் கலந்துள்ளன. தாலாட்டும், தூதும், வருணனையும், சோகமும் எல்லாம் அலைபோல படர்ந்துள்ளன. கவிக்கூற்று, தோழிக்கூற்று, தாய்க்கூற்று, மக்கள் கூற்று என விரிந்து செல்கிறது. சங்க இலக்கியப் பாடலான நெடுநல்வாடையை, தைப்பாவை நமக்கு நினைவூட்டுகிறது.

*இயேசு காவியம்*

கவிஞருடைய படைப்புக்களிலேயே அதிகப் பக்கங்களைக் கொண்டது இயேசு காவியம் தான். கண்ணனையும் இயேசுவையும் கண்ணதாசன் இரண்டாகக் காணவில்லை. கண்ணனில் இயேசுவைக் கண்டார்; இயேசுவில் கண்ணனைக் கண்டார். அதனால் தான் கண்ணன் புகழ்பாடிய கண்ணதாசன் இறைமகன் இயேசுவின் சிறப்புக்களையும் கூற முன் வந்தார்.

'ஒன்றாய் வாழ்வோம் உரையாடுவோம் ஓரிதயம் கொண்டிருப்போம்' என்ற ரிக்வேதக் கருத்து கண்ணதாசனுக்கு மிகவும் உடன்பாடாக இருந்தது. ஆன்மீகச் செல்வங்களைப் பகிர்ந்து கொள்ளும் நிலையில்தான் இயேசு காவியம் இயற்றினார். விவிலியத்தின் நான்கு நற்செய்தி நூற்களையும் படித்திருந்ததால் அவற்றைக் காவியமாக்குவது கவிஞருக்கு எளிதாய் இருந்தது.

*சிறுகதைகள்*

கண்ணதாசன் பன்முகம் கொண்ட ஓர் இலக்கியவாதியாகத் திகழ்ந்தார். கவிஞராக ஒரு பக்கம் கவிதைகள் எழுதினார். ஏராளமான கருத்துக்களை மக்கள் முன் வைக்கத் துடித்துக் கொண்டிருந்ததால் சிறுகதை, நாவல், கட்டுரை வடிவங்களையும் பயன்படுத்திக் கொண்டார். சமூகக் கதைகளும் சரித்திரப் பின்னணி கதைகளும் கவிஞர் எழுதியுள்ளார். பத்திரிகைகளில் வரும் செய்திகளின் அடிப்

படையிலும் கதைகள் எழுதியுள்ளார். சமூகத்தைப் பிடித்து உலுக்கும் ஒரு கொடுமை பசிதான். அதற்கு இன நிற பேதங்கள் இல்லை. அதுபோல்தான் விலைமாதரிடம் சுகம் தேடிப்போகும் நிலையும். வாலிபனுக்கு உடல்பசி இருக்கும். விலை மாதர்க்கு வயிற்றுப்பசி இருக்கும். இந்த பின்னணியில் கண்ணதாசன் எழுதிய கதைதான் 'பசி'.

சிலர் மட்டும் வாழப் பிறந்தவர்கள், சிலர் வாடப் பிறந்தவர்களா என்பது கவிஞரை அலட்டிய ஒரு கேள்வி. இதனை 'வாடப் பிறந்தவர்கள்' கதையில் அலசியுள்ளார். வயதான கிழவர்களுக்கு இளம் பெண்களைக் கட்டி வைக்கும் சமூக நிலையை இரு கதைகளில் இருவேறு விதமாகச் சித்தரித்துள்ளார். மனோன்மணியின் தந்தையிடம் ஆயிரம் ரூபாய்களைக் கொடுத்துவிட்டு அவளை ஒரு 57 வயதான பணக்கார கிழம் மண முடிக்கிறது. முதலிரவிலேயே அவள் ஒத்துழைக்கவில்லை. அதற்குக் காரணம் அவள் முழுகாமல் இருந்ததுதான். அடுத்த நாள் காலை அவள் தன் காதலனைத் தேடிப் போய்விடுகிறாள். 'புலிக்கொடியும்' இதே கருத்தைக் கொண்டதுதான். ஆனால் அது வரலாற்றுப் பின்னணியில் பின்னப்பட்டுள்ள கதை காதலித்த சேதிராயன் தேன்மதியை மண முடிக்கச் சென்றபோது அவள் இன்னொருவரின் மனைவியாகியிருந்தாள். ஆனால் கன்னி கழியவில்லை என்பதனை அறிந்தவன் அவளைத் தன் வீட்டிற்குக் கூட்டிச் சென்றான். முதலில் மகிழ்ந்த சேதிராயனின் தங்கை அவள் பிறன் மனைவி என்பதை அறிந்தபோது அவர்களை வெட்டிச் சாய்க்கிறாள். சிந்திய ரத்தத்தைத் துடைத்தவள், வெளியே வந்து கோட்டையை நிமிர்ந்து பார்த்தாள். புலிக்கொடி கம்பீரமாகப் பறந்து கொண்டிருந்தது என்று கவிஞர் கதையை நிறைவு செய்துள்ளார்.

### நாடகங்கள்

சிறுகதை, நாவல்கள் படைத்த கண்ணதாசன் நாடகங்களும் இயற்றியுள்ளார். இந்தப் படைப்புக்களிலும் சமூக நலனும் தமிழ் மரபும் அவர் கைவண்ணத்தில் உருவாகியுள்ளன. இதில் குறிப்பிடப்பட வேண்டிய ஒரு நாடகம்தான் சிவகெங்கைச் சீமை. தென்பாண்டி நாட்டிலே தலைநிமிர்ந்து நின்ற சீமை சிவகெங்கைச் சீமை. சிறையிலிருந்து தப்பிய ஊமைத்துரைக்கு மருது பாண்டியர்கள் அடைக்கலம் கொடுத்ததன் பேரில் வெள்ளைக்காரன் படையெடுத்து வந்து அவர்களைக் கீழடக்கித் தூக்கிலும் போடுகிறான். இதற்குச் சிலர் உள்ளே இருந்து கொண்டே உடந்தையாய் இருந்தார்கள் என்பதனை சின்னச்சாமி, உடையணத்தேவர் பாத்திரங்கள் மூலம் விளக்குகிறார். பெரிய மருதுவும், சின்ன மருதுவும், தளபதி முத்தழகும் மனதில் நிறைந்து நிற்கிறார்கள். கவிஞர் காட்சிவாரியாகப் பிரித்து நாடகத்தை நம் கண்முன்னே கொண்டு வந்து நிறுத்துகிறார். சாதாரணமாகப்

படிக்கும் நாடகமும் பார்க்கும் நாடகமும் அமைப்பிலும் காட்சி ஜோடனைகளிலும் வித்தியாசப்படும். ஆனால் இங்கோ படிப்பதெற்கென எழுதப்பட்ட நாடகம் நேரில் பார்ப்பது போலவே அமைந்துள்ளது. இந்நாடகத்தைக் கவிஞர் திரைப்படமாகவும் தயாரித்ததால் நிகழ்ச்சிகள் வரிசையாக அமைந்து ஒரு நிறைவையும் தருகின்றன. கவிஞர் நாடகத் துறையிலும் கால்பதித்து வெற்றி கண்டுள்ளதை 'சிவகெங்கைச் சீமை' சுட்டுகிறது.

### நாவல்கள்

நாவல்களை தொடர்கதைகளாகக் கவிஞர் எழுதியுள்ளார். தான் நடத்திய தென்றல் பத்திரிகையில் 'ஊமையன் கோட்டை'யை தொடராக எழுதினார். பின்னாளில் சில வார இதழ்களிலும் தொடர்கதைகள் எழுதினார். கதைக்குத் திடீர் திருப்பங்களும் ஆச்சரிய அதிசய நிகழ்ச்சிகளும் தேவைப்பட்டன. இதனால் மக்களின் ஆர்வத்தைத் தூண்டும் வகையில் தொடர்கதைகள் கொண்டு செல்லப்பட்டன. ஆனால் இந்தத் தொடர்கதைகள் நல்ல நாவல்களாகவும் அமைந்துள்ளன. முழு நூலாகவும் கவிஞரின் நாவல்கள் வெளி வந்துள்ளன. கண்ணதாசனின் நாவல் படைப்புக்கள் இவ்விரண்டு நிலைகளிலும் வெற்றி பெற்றுள்ளன.

சிறுகதைகளைப் போலவே நாவல்களிலும், வரலாற்றுப் பின்னணிகள் கொண்டவற்றையும் சமூகப் பிரச்சனைகளையும் கவிஞர் கையாண்டுள்ளார்.

மாதிரிக்கு, சாகித்ய அகாதமியின் பரிசு பெற்ற வரலாற்றுப் பின்னணி நாவல் 'சேரமான் காதலி'யைப் பார்ப்போம்.

### சேரமான் காதலி

கவிஞர் கண்ணதாசனுக்கு 1980ஆம் ஆண்டு சாகித்திய அகாதமியின் பரிசினை பெற்றுத் தந்த நாவல்தான் இது. சேர வரலாற்றின் பின்னணியை வைத்துக் கொண்டு கற்பனைத் தேரில் பறந்து காதலைக் கலந்து அருமையான ஒரு நாவலாக இதனைப் படைத்துள்ளார். நாவலின் தலைப்பே குறிப்பிடுவதுபோல் சேரமானின் காதல் கதைதான் இது.

### ரவிவர்மன்

இரண்டாம் சேரமான் பெருமாள் அரசைத் துறந்தபோது அவர் மகன் மார்த்தாண்டன் ஆட்சிக்கு வந்தான். ஆண்டு கி.பி. 796 இங்குதான் இந்தக் கதை தொடங்குகிறது. மன்னன் வைணவ பக்தராக மாறி திருமாலின் திருத்தலங்களைத் தரிசிக்கப் புறப்பட்டுப் போவதாக அறிவித்ததும் அவருடைய மைத்துனன் மகன் பாஸ்கர ரவிவர்மன்

வாய்விட்டு அழுதான். பிறரை அழவைத்துப் பழகியவனா அழுகிறான்? இல்லை, விடை கொடுக்கிறானா? மாமன், மன்னன் என்பதால் அவன் பெற்றுக் கொண்ட சலுகைகள் ஏராளம். அவை, மன்னர் மனதில் அவனைப்பற்றிய தவறான எண்ணங்களை உண்டாக்கி இருந்தன.

முடிசூட்டிக் கொள்ள ரவிவர்மனுக்கும் ஆசை இருந்தது. எனவே அவன் காய்களை நகர்த்தினான். அதற்கு அவனுக்கு விசுவாசமான சேவகர்களும் நம்பிக்கைக்குப் பாத்திரமான காதலி யூஜியானாவும் இருந்தனர். ரவிவர்மன் வஞ்சியின் மூன்று பகுதிகளிலாக வசித்து வந்தவர்களையே தனக்குத் துணையாக்கிக் கொண்டான். ஒரு பகுதியில் சிரியன் கிறிஸ்தவர்கள். மறுபகுதியில் அரேபிய முகமதியர்கள். மூன்றாம் பகுதியில் யூதர்களும் இருந்தனர். இவர்கள் துணைநாடி மார்த்தாண்டனுக்குப் போட்டியாக ரவிவர்மன் தோன்றினான்.

### யூஜியானா

யூதப்பெண்ணான பேரழகி யூஜியானாவை ரவிவர்மன் காதலித்தான். உயிருக்குயிராக நேசித்தான். ஆயினும் தன் லட்சியம் நிறைவேறும் நாள்வரை காமனின் கட்டளைக்குக் கீழ்ப்படியவில்லை. ஆனால் யூஜியானாவோ கற்பனைத் தேரில் ஏறி மிதந்து கொண்டிருந்தாள். அவளுடைய வலது பாதத்தில் ஆறு விரல்கள் இருந்ததால் அரசு யோகம் கிடைக்குமென அவள் தந்தை எண்ணினார். பிறரைப் பைத்தியமாக்கும் ரவிவர்மன் இங்கே அவனே பைத்தியமானான்.

### இரு நாடுகளின் உதயம்

தாயாதி உறவினர்களிடையே பகையும் அதனால் நாட்டில் குழப்பமும் ஏற்பட வேண்டாமென்று நினைத்த விக்ரம சோழன் நாட்டை இரண்டாகப் பிரிப்பதெனவும் மார்த்தாண்டனும் ரவிவர்மனும் முடிசூட்டிக் கொள்வதெனவும் சொன்ன யோசனையை இருவரும் ஏற்றுக் கொண்டனர். அங்ஙனம் திருவிதாங்கோடும் வேணாடும் உதயமானது.

### புதிய வம்சம்

ரவிவர்மன் வழி யூதரத்தத்தில் சேர ரத்தம் கலந்து ஒரு புதிய வம்சம் அப்போதுதான் உருவாகத் தொடங்கியிருந்தது. முடிசூட்டிக் கொண்டு ரவிவர்மன் சேரமான் பெருமாள் ஆனார். ஆனால் ரவிவர்மனால் தன் ஆசையைக் கட்டுப்படுத்த முடியவில்லை. பதவிமேலும் பொருள் மேலும் பெண்ணின் பாலும் ஆசை ஏற்பட்டால் அந்தத் தீ எளிதில் அணையாதே! அவன் யூஜியானாவைப் போய்க் கண்டு வருவதைவிட தனி மாளிகையில் குடியிருத்துவதுதான் உசிதமென்று அவ்வாறே செயல்பட்டான்.

### அருமையான திட்டம்

மனைவியுடன் இல்லற வாழ்வில் ஈடுபட விருப்பமில்லா தவனாயிருந்தான் ரவிவர்மன். பட்டத்து ராணியை கலங்க வைத்துவிட்டுப் பக்கத்தில் வேறு துணையை அமர்த்திக் கொண்ட செய்தியறிந்து வஞ்சியில் இருந்த நம்பூதிரிகளின் சபைத்தலைவரான நாராயண நம்பூதிரி அருமையானதோர் திட்டம் தீட்டினார். பாண்டியனையும் அவன் மனைவியையும் மாறுவேடத்தில் வரச்செய்து பூர்வீகக் கதைகளைச் சொல்லி மூன்றாம் சேரமானுடையவும் யூஜியானாவின் மனதிலும் கலக்கத்தை உண்டு பண்ணுகிறார். தான் பெறப்போகும் குழந்தையினால் மன்னனுக்கு ஆபத்து என்று கூறப்பட்டபோது யூஜியானா பதறிப்போனாள். சேரமானும் அவளை இஸ்ரவேலுக்கு அனுப்பத் தீர்மானிக்கிறான். அங்கு அவள் பெண் மகவைப் பெற்றெடுத்தாள். ஆனால் அரசுரிமையில் பங்கு கேட்க அவள் வரவில்லை. காலம் போகப்போக யூஜியானாவின் பிரிவை நம் சேரமான் பெருமாள் தாங்கிக் கொண்டாலும் அவன் மனது அலைபாய்ந்து கொண்டேயிருந்தது.

### முடிசூட்டுவிழா

முதலில் வஞ்சியிலும் அதற்கு ஏழாவது நாள் வேணாட்டிலும் முடிசூட்டுவிழா என்று தீர்மானிக்கப்பட்டது. வஞ்சியில் சேரமானும், வேணாட்டில் ரவிவர்மனும் அரசர்கள். வஞ்சியில் முடிசூட்டுவிழாவை யொட்டி அராபியர் தெருவும் யூதர் தெருவும், சிரியன் கிறிஸ்தவர்கள் தெருவும் எல்லாம் அற்புதமாக அலங்கரிக்கப்பட்டிருந்தன. இவ்வேளையில் தான் அரேபியாவிலிருந்து வணிகம் செய்ய வந்து குடியேறிய அகமது பாத்திமாவின் சகோதரன் மகமதுவும் மனைவியும் மகள் சலீமாவும் சேரநாட்டிற்கு வந்து சேர்ந்தனர்.

முடிசூட்டு விழாவை ஒட்டி கோலாகலங்கள் நடைபெற்றுக் கொண்டிருந்தபோதுதான் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த சலீமாவை மதம் இளகிய யானை தன் துதிக்கையில் தூக்கியது. தக்க சமயத்தில் அங்கு வந்த சேரன் இட்ட கட்டளையை ஏற்று யானையும் சலீமாவை விடுவித்தது. பிறகு சாந்தமும் ஆனது. மன்னன் ஒருநாள் அரண்மனையில் தங்கவைத்து விட்டே அவர்களை விட்டான்.

### *சலீமாவின் சந்திப்பு*

அரசன் முன்னால் வெளிநாட்டினர் காணிக்கை செலுத்தித் தங்களை அறிமுகப்படுத்திக் கொள்ளும் சம்பிரதாயம் அன்று நிலவில் இருந்தது. அவ்வேளையில் தான் சலீமா முதன்முதலாக மன்னனை நேருக்கு நேர் பார்த்தாள். பிறகு விவாத மண்டபத்தில் விவாதிக்க வந்த

சலீமா சேரமான் பெருமாளின் இதயத்தில் குடிபுகுந்தாள். மண்டபத்திலிருந்து வெளியேறும்போது அவளுக்கொரு பதக்கம் கிடைத்தது.

### நம்பூதிரியிடம் கொடுத்த பதக்கம்

வீட்டிற்குப் போய்ப் பார்த்தபோதுதான் அதனுள்ளில் யூஜியானுடையவும் மன்னனுடையவும் படம் இருப்பதைப் பார்த்தாள். குறும்புக்காக அதில் யூஜியானாவின் படத்திற்குப் பதிலாகத் தன் படத்தை வைத்தாள். இந்த நினைவே இல்லாமல் மறுநாள் அதனைக் கொடுப்பதற்காக அரண்மனைக்குச் செல்லவும் செய்தாள். அங்கு வைத்துத்தான் முதன்முதலாக அவள் நம்பூதிரியைப் பார்க்கிறாள். மன்னனிடம் தான் செய்தி சொல்ல வேண்டுமென்று பிடிவாதம் பிடித்தவளிடம் நம்பூதிரி ஏதாவது கொடுக்க வேண்டுமானால் கொடுக்கிறேன் என்றபோது சலீமா அந்தப் பதக்கத்தைக் கொடுத்தாள். திறந்து பார்த்தவர் அதை அவளிடமே திருப்பிக் கொடுத்துவிட்டு மன்னர் இருக்கும் இடத்தையும் கூறிச் செல்கிறார். காதல் நோயை அவர் இனங்கண்டு கொண்டார்.

### காதல் வளர்ந்த கதை

ஒரு நாள் இரவு கடலில் சலீமாவும் அவளுடைய உறவினரான ஜெபுன்னிஸாவும் நீராடும்போது பேரலை ஒன்று இருவரையும் அடித்துச் சென்றது. அவ்வேளை அது வழி உலா வந்த மன்னன் அவர்களைக் காப்பாற்றும் முயற்சியில் இறங்கினான். மன்னனால் சலீமாவை மட்டும்தான் காப்பாற்ற முடிந்தது. அவர்களிருவரும் தனியான ஓரிடத்தில் அந்த ஓர் இரவைக் கழிக்கும் சூழ்நிலை ஏற்பட்டது. தொடர்ந்து மன்மதனின் கட்டளைக்கும் கீழ்ப்படிந்தனர்.

### நம்பாத நிலை

சேரமானையும் சலீமாவையும் காணவில்லை என்பதனை அறிந்த நம்பூதிரி படகுகளை விட்டுத் தேடினார். ஏதாவது படகுக்குள் அவர்கள் இருக்கிறார்களா என்றும் பார்த்து வரச்சொன்னார். இதற்கிடையில் சத்தம் போட்டு அழைப்பதையும் சமிக்ஞையையும் கண்ட படகோட்டிகள் கரைக்கருகே வந்து மன்னனையும் சலீமாவையும் அழைத்துப் போயினர். மன்னன் உலாச்சென்றதையும் அதுவும் எதிர்பாராதவிதமாகக் கடற்கரைக்குச் சென்றதையும் அங்கு சலீமா நீராடிக் கொண்டிருந்தபோது பேரலை ஒன்று இழுத்துச் சென்றதையும் யாரும் நம்பவில்லை. உண்மைக்குப் புறம்பாகத் தன்மேல் குறை சொல்லப்படுவதையும் தான் குற்றவாளியாகக் கருதப்படுவதையும் மன்னன் விரும்பவில்லை. தன்மேல் சுமத்தப்பட்ட களங்கத்தைத்

துடைத்தெறிய எண்ணிய மன்னன் நாட்டுமக்களின் நாடி அறியத் தீர்மானித்தான். இரவில் வயதானவன் வேடத்தில் மன்னன் வெளியிறங்கினான். அப்போது மக்களில் சிலர், இது அரசனின் தனிப்பட்ட விஷயம் என்றும் நம்பூதிரி இதில் தலையிடுவது சரியல்ல என்றும் கூறினர். உற்சாகமுற்ற மன்னன் நம்பூதிரி சபைக்கருகே சென்றபோதுதான், தனக்கெதிராக வியூகம் வகுக்கப்பட்டிருப்பது தெரிந்தது. பாண்டியன் முன்பு வந்த அதே மாறுவேடத்தில் இப்போதும் வந்திருந்தான். அவனைப் பார்த்தபோதுதான் சேரமானுக்குச் சந்தேகம் உதயமானது. எதிர்க்க அவன் தயாராகவில்லை. காரணம் யூஜியானாவைத் திட்டம் போட்டு நாடு கடத்தியவர்கள் ஆயிற்றே. எனவே, இம்முறை காதலில் உறுதியாக இருக்கத் துணிந்தான்.

பட்டத்துராணிகள்

இதற்கிடையில் யூதர்களும் மகமதியர்களும் தனித்தனியாகக் கூடிப் பேசினர். யூஜியானாவை மன்னன் அரண்மனைக்கு அழைத்துச் சென்றபோது அவளுக்கு சேரநாட்டு மரபுப்படி முண்டு கொடுத்து குங்குமமிட்டுத்தான் அழைத்துச் சென்றான். ஆம்! அவள் ஓர் இந்துவாகத்தான் அங்குப்போனாள். ஆனால் அவளுக்கு நேர்ந்ததோ! நாட்டை விட்டே போய்விட்டாள். எனவே அதுபோல் ஒரு நிலை சலீமாவுக்கு வரக்கூடாதென்று மகமதியர்கள் எண்ணினர்... சலீமாவை பட்டத்து ராணியாக்க வேண்டுமென்றும் மன்னர் மதம் மாற வேண்டுமென்றும் தங்கள் விருப்பத்தைத் தெரிவித்தனர். இதைக் கேள்விப்பட்ட யூதர்கள், இருவரை இஸ்ரவேலுக்கு அனுப்பி யூஜியானாவையும் தந்தையையும் அழைத்து வரச் செய்தனர்.

நம்பூதிரிகளின் வேதனை

சேரநாட்டின் ஒவ்வொரு கிராமமும் ஒவ்வொரு நம்பூதிரியின் கையில் இருந்தது. அந்தச் சபையின் தலைவர்கள் அரசரையும் கட்டுப்படுத்தி வந்தனர். ரவிவர்மனின் காதல் களியாட்டங்களை அடக்கவும் ஒதுக்கவும் முயற்சித்துக் கொண்டிருந்தபோதுதான் ஊரைவிட்டுப்போன யூஜியானா திரும்பவும் வந்து சேர்ந்தாள். இந்நிலையில் நம்பூதிரிகள் கொதிப்படைந்தனர். கொந்தளித்தனர். தனக்குப் பிறந்த மகளுடன் வந்த யூஜியானாவையும் சலீமாவையும் தன்னுடனே மன்னன் வைத்துக் கொண்டான். தான் மணம் முடித்தவளுடன் மன்னனுக்கு அதிக ஒட்டுதலுமில்லை, உறவுமில்லை. அதனால் பிள்ளைப் பேறுமில்லை.

ரவிவர்மனுக்கு எதிராகப் படைகளைத் திரட்டி வந்த அதேநேரம் சலீமாவையும் இந்த உறவிலிருந்து பின்வாங்கச் செய்யும் முயற்சியும் நடந்தது. அம்முயற்சியும் தோற்றுப் போகவே மார்த்தாண்ட வர்மனே

சேரமானையும் சலீமாவையும் சிறையிலடைத்தான். ஆனால் அவன் மனைவி பத்மாவதி கேட்டுக் கொண்டதற்கிணங்க சேரனையும் சலீமாவையும் விடுதலை செய்தான்.

*எதிர்பாராத திருப்பங்கள்*

சேரமான், தன் மனைவி பத்மாவதியை அழைத்துத் தான் குளிக்க வேண்டுமென்றான். அவள் வண்ணக் கலவைகளையெல்லாம் எடுத்து வைத்தாள். குளித்து வந்தவன் அவளுடன் உறவு கொண்டான். அவள் உடலும் மனமும் சாந்தியடைந்தது.

அந்நேரம் ரவிவர்மன் தனக்குள் ஒரு தீர்மானம் எடுத்திருந்தான். அன்று இரவு யூஜியானா ஒருபுறமும் சலீமா மறுபுறமுமாக உறங்கிக் கொண்டிருந்தபோது பகைவர்கள் வந்து எதிர்பாராத விதமாகத் தாக்குதல் நடத்தினர். தாக்குதலில் யூஜியானா மடிந்தாள்.

மன்னனின் காதலை எதிர்த்த நம்பூதிரி அவன் மதம் மாறி விடுவானோ என்றும் அச்சப்பட்டார். அதனால் அவர்கள் தெருவருகே படையை நிறுத்தினார். ஆனால் மன்னனோ நேரே படகு ஏறி சலீமாவுடன் அரேபியாவுக்கே போய்விட்டான். அவன் பெயரும் மாற்றப்பட்டது. நான்கு ஆண்டுகளே அங்கு வாழ்ந்த சேரமான் உடல் தளர்ந்து மரணமடைந்தான்.

இந்நாவலில் கவிஞரின் கைவண்ணத்தை இனிப்பார்ப்போம். நாவலின் கதை, 3ஆம் சேரமான் பெருமாளைப் பற்றியதாக இருந்தாலும் 2ஆம் சேரமானின் அரண்மனை களை கட்டிக் கொண்டிருக்கும் வர்ணனையுடன் கவிஞர் நாவலைத் தொடங்குகிறார். சேரநாட்டு அரச பரம்பரையினர் எல்லோரும் சைவர்களாகத்தான் இருந்தனர். ஆனால் 2ஆம் சேரமான் பெருமாளோ திருமால் அடியார் ஆனார். இதற்குக் கவிஞர் இங்ஙனம் விளக்கம் தருகிறார். காதல் வசப்பட்டவன் ஜாதி பார்ப்பதில்லை; கடவுள் வசப்பட்டவன் மதங்களின் பிரிவு பார்ப்பதில்லை. நாவலின் மொத்தப் போக்கையும் அடிக்கருத்தையும் கவிஞர் இங்குக் குறிப்பிட்டு விடுகிறார். இது பற்றி நம்பூதிரி சபை விவாதிக்க வேண்டும் என்ற கருத்து வந்தபோது தலைவர் நாராயண நம்பூதிரி கூறுகிறார். இது மத விஷயம். இதுபற்றி மன்னருக்குச் சில கருத்துக்கள் தான் தெரிவிக்க முடியுமே தவிர எதையும் நிரந்தரப்படுத்த முடியாது. வைஷ்ணவம் நமக்குப் புதியதல்ல; வெறுக்கத் தக்கதும் அல்ல. இந்தச் சேர தேசத்தில் இரண்டுக்கும் இடம் இருக்கிறதென பதிலளிக்கிறார்.

குலசேகர ஆழ்வாராக மாறி திருமால் பக்தியில் முடி துறந்தவரின் மகன் சைவத்தையே பின்பற்றினான். ஆனால் காதலில் மூழ்கிய ரவிவர்மன்தான் அந்நிய மதத்தாளை முதலில் இந்துவாக்கினான். 3ஆம்

சேரமான் பெருமாள் என்ற பட்டப்பெயருடன் முடிசூட்டிக் கொண்டபோது தன்னுடைய ஆட்சியின் தொடக்கத்திலேயே மற்ற எல்லா மதத்தினர்களுக்கும் வேண்டிய வசதிகளைச் செய்தும் கொடுத்தான். மனதில், தான் நினைத்தபடி காரியங்கள் நடக்க வேண்டுமென்ற எண்ணம் இருந்ததால் அவர்கள் எல்லோருடனும் நல்ல நிலையிலான உறவு வைத்திருந்தான். எம்மதமும் சம்மதமே என்ற உயர்ந்த நோக்கத்துடன் எல்லாச் சமயத்தவரிடமும் அன்பும் ஆதரவும் காட்டி பண்பில் சிறந்தவனாக ஆட்சி செலுத்தி வந்தான்.

நம்பூதிரிகளின் துணிவு

அரசனையும் தவறு செய்யுமிடத்து தட்டிக் கேட்கும் துணிவினை சேர அரசர்கள் காலத்தில் நம்பூதிரிகள் பெற்றிருந்தனர். ரவிவர்மன் காதலி யூஜியானாவைத் தன் மனைவியாக அரண்மனையில் குடியிருத்தியபோது அவளை வெளியேற்ற நம்பூதிரிகள் திட்டம் போட்டனர். அதனைக் கவிஞர் விவரிக்கிறார்.

'பதவியையும் வசதியையும் ஒதுக்கிவிட்டுப் பார்த்தால் மன்னனுக்கும் பிற மனிதர்களுக்கும் பேதமில்லை.

எல்லோரது ரத்த நாளங்களும் ஒரே மாதிரியாகவே துடிக்கின்றன.

ஆரோக்கியமான எல்லா வயிறுகளும் ஒரே மாதிரியாகவே பசிக்கின்றன.

காவியக் கதவுகள் 3ஆம் சேரமானால் யூஜியானாவுக்காகத் திறக்கப்பட்டது.

யூஜியானாவின் குழந்தைக்குப் பட்டம் கிடைத்துவிடுமென நம்பூதிரி நடத்திய நாடகம்.'

வாரிசு இல்லாத மகுடங்களுக்கெல்லாம் வேறு நாடுகளிலிருந்து வாரிசுகள் வருவதை நான் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டுமா என்று மன்னனிடமே கேட்டவர் நம்பூதிரி.

ஊர் வந்து சேர்ந்த யூஜியானாவையும் அவள் தந்தையையும் நம்பூதிரி அழைத்துப் பேசுகிறார். பட்டத்துக்கு ஒரு ராணியென பத்மாவதி இருக்கிறாள். பக்கத்தில் பல ராணிகள் இருக்கலாம். அவர்களையும் இனம் பார்த்து அங்கீகரிப்பதே நாட்டு நலனுக்கு நல்லது என்கிறார் நம்பூதிரி. சலீமாவின் பக்கம் சேரமானின் இதயம் சென்றதை அறிந்த நம்பூதிரி யூஜியானாவை தன் பக்கம் நிறுத்தி வைக்கும் எண்ணத்தில் பேசுகிறார்.

'எதிர்காலத்தில் ஒரு கலப்பு இனம் இங்கே உருவாகப் போகிறது. அதை நான் வரவேற்கிறேன். நாங்கள் நாங்களாகவே இருந்து கொண்டு, எங்கள் ரத்தத்தில் ஓர் இனம் தோன்றுமானால் அதை அங்கீகரிப்பதில் எங்களுக்கு மறுப்பில்லை. ஆனால் எங்கள் கழுத்தில் வேறொரு




குறியை அணிந்து கொள்ள நாங்கள் விரும்பமாட்டோம். நீங்களும் வற்புறுத்த மாட்டீர்கள். இவை நமக்குள் இருக்கட்டும்' என்கிறார்.

*காதல் சிறையில் காதலர் நிலை*

திருவிதாங்கோட்டில் சிறை வைக்கப்பட்ட சேரமான் சலீமா காதல் நிலையக் கவிஞர் வர்ணிக்கிறார்.

'.....அங்கே திருவிதாங்கோட்டுச் சிறைக்கதவைத் திறந்தாள் பத்மாவதி.

சேரமானின் மடியிலே சலீமா நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்தாள். சேரமான் அந்தக் குழந்தையை அணைத்தபடி மெய் மறந்திருந்தான்.

கதவு திறந்த சப்தம் கேட்டும் சலீமா விழிக்கவில்லை.

சேரமான் பத்மாவதியைக் கண்டு திகைத்தான்.

கணவன் மடியிலே வேறொருத்தி.

சேரமானும், சலீமாவும் அரண்மனைக்குள் நுழைந்தபோது நாராயண நம்பூதிரி அங்கே இல்லை.

அரசு என்றொரு அங்கம் இருப்பதையே முற்றிலும் மறந்துவிட்ட சேரமான் சலீமாவோடு தனது இரண்டாவது இரவை அந்த மஞ்சத்தில் கழித்தார்.

பால் நிலவில் பளபளக்கும் அந்த வடிவம் இனிய கனவுகளுக்கெல்லாம் இடம் கொடுத்தது.'

தன்னை மறந்த லயத்தில் அவர்கள் மயங்கிக் கிடந்தார்கள்.

*சேர அழகி சலீமா*

பொழுது விடிந்து சலீமா புத்தாடை அணிந்தபோது சேரநாட்டுப் பாணியிலே அவளுக்கும் முண்டுடுத்தி விட்டார் சேரன்.

எதிர்பாராமல் யூஜியானா அப்போது கைக்குழந்தையோடு அரண்மனைக்குள் வந்தாள். வந்தவள் நேரே பள்ளி அறைக்குள் நுழைந்தாள். அவள் நுழைந்தபோது கண்ணாடியின் முன்னால் அமர்ந்து வைர நகைகளால் தன்னை அலங்கரித்துக் கொண்டிருந்தாள் சலீமா.

'கண்ணாடியில் யூஜியானாவின் உருவம் தெரிந்தது. அன்று பகவதி கோவில் அருகே பார்த்த அதே பெண், சேரமானின் அன்புக்குரிய இஸ்ரவேல் நாயகி!

திகைத்துப் போய் சலீமா கேட்டாள், 'யார்?'

'இந்தக் குழந்தையின் தாய்''

''யாரைப் பார்க்க வேண்டும்?''

''இதன் தந்தையை''

''அவர் எங்கிருக்கிறார்?''

"இந்த அரண்மனையில்"

"நீங்கள் சொல்வது....?"

"உங்களுக்குத் தெரியாத ஒரு ரகசியம்"

"ஓரளவு எனக்கும் தெரியும்"

"இஸ்ரவேலின் மணியோசை உங்கள் காதுகளுக்கும் கேட்டதா?"

"அந்த மணி ஒலித்துக் கொண்டிருக்கும்போதே இந்தத் திருமுகத்தை நான் பார்த்திருக்கிறேன்.

"அந்த மணியோசை நின்றுபோய்விட்டதாக நினைத்தீர்களா?"

"இல்லை." நான் கேட்கக்கூடிய தூரத்தில் அது இல்லை என்று நினைத்தேன்?"

"ஒலியைக் கொண்டு செல்லும் சக்தி அராபிக் கடலுக்கு இருக்கிறது என்பது உங்களுக்கும் தெரியும் அல்லவா?"

"அராபிக் கடலுக்கென்ன? எந்தத் தண்ணீருக்குமே அந்தச் சக்தி உண்டு என்பதை நான் அறிவேன்?"

"மணியினால் கைவிடப்பட்ட ஒலி, கொம்பினால் கைவிடப்பட்ட கொடி, பூமியால் கைவிடப்பட்ட தண்ணீர், வானத்தால் கைவிடப்பட்ட நிலவு நான்"

"மணியினால் ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒலி, கொம்பினால் தழுவப்பட்ட கொடி, பூமியில் ஊற்றெடுத்த தண்ணீர், வானத்தில் அமர்ந்து கொண்ட நிலவு..."

"...நீங்கள் தான் என்பது எனக்கு நன்றாகத் தெரியும்..." என்று நிறைவு செய்கிறாள் யூஜியானா.

கவிஞர் கதையின் போக்கை சலீமா, சேரநாட்டுக்கு வரும்போது நமக்குணர்த்துகிறார்.

"அராபிய பாய்மரக்கப்பல் சேர நாட்டுக் கடற்கரை மண்ணில் உராய்ந்து நின்றது. வருங்காலத்தில் நிகழப்போகும் பல அதிசய மாறுதல்களுக்கு அடிக்கல் நாட்டியதுபோல் இருந்தது." என அந்நிகழ்ச்சியின் வாயிலாகத் திருப்பங்களைச் சுட்டிவிடுகிறார்.

*காதலில் உறுதி*

தான் ஒரு தலைவன்; அரசன்; அனுபவம் மிக்கவன் என்பதால் தனக்கென சில கொள்கைகளையும் பாதைகளையும் ரவிவர்மன் கைக்கொண்டிருந்தான். தலைவன் என்பவன் கருத்துக்களை உருவாக்குகிறானே தவிர பிறரது கருத்துக்களுக்குத் தன்னை ஒப்புக்கொடுத்து விடுகிறவனல்ல என்பது சேரமானின் கருத்தாக இருந்தது. அதில் அவன் உறுதியாகவும் இருந்தான். அதனால்தான் தன் நாட்டின்மீது பாண்டியன் படையெடுத்து வந்ததை அறிந்தபோது தன் நாட்டை ஒன்பதாகப் பிரித்தான் உறவினர்களுக்கும் விசுவாசமான

ஊழியர்களுக்கும் பங்கு போட்டுக் கொடுத்தான். பிறகு தன் கருத்தினை தான் மதம் மாறப் போகும் கருத்தினை மகமதியர்களிடம் தெரிவிக்கவும் செய்தான். அதுபற்றிக் கவிஞர் கூறுகிறார்.

'எவ்வளவு சாமர்த்தியமாகக் கேரள தேசத்தையே மடக்கிக் கைக்குள் போட்டுக் கொண்டவர் அவர்?

எவ்வளவு சாதாரண விஷயத்தில் அவர் ஏழைபோலாகி விட்டார்?

அவரைப் பொறுத்தவரை அது ஒரு மகாகாவியம்.

அசாத்தியமான துணிச்சல் ஒன்று காதலில் மட்டுமே விளைகிறது.

பஞ்சணையில் தனியாகத் தூங்கிய மன்னன்கூட தன் காதலியோடு பழம்பாயில் தூங்குவதை மகிழ்ச்சியாக ஏற்றுக் கொள்கிறான்.'

### மதம் மாறினார்

அதுபோல்தான் மன்னவர் மூன்றாம் சேரமான் பெருமாள் இஸ்லாம் மார்க்கத்தைத் தழுவ எண்ணியதும் அதைச் செயல் படுத்தியதும். இந்தச் செய்தி வெளியானதுதான் தாமதம் வஞ்சியில் தண்டோரா போடுகிறவர்கள் யாரும் ஆணையிடாமலேயே "மன்னர் மதம் மாறுகிறார்" என்று ஊரெங்கும் தண்டோரா போட்டு விட்டார்கள்.

இதன் எதிரொலி நம்பூதிரிகள் சபையிலும் உண்டானது. அங்கு பயங்கர மௌனம் நிலவியது. மன்னன் தானாக மேற்கொண்டுவிட்ட ஒரு காதல். அந்த மார்க்கத்தின் கட்டுப்பாடு காரணமாக ஒரு மதமாற்றம்.

### யூஜியானா பலி

ஆனால் இதே நேரத்தில் மன்னனுக்கு இந்தக் கதி நேர்ந்தது தன்னால்தான் என்று யூஜியானாவும் சலீமாவும் கூறினர். அன்றைய இரவில் அந்த இருவரோடும் அந்த மஞ்சத்தில் படுத்து உறங்கலானான். நள்ளிரவில் சேரமானை கொன்றுவிடும் திட்டத்துடன் உள்ளே புகுந்தவர்களின் தாக்குதலில் யூஜியானா பலியானாள்.

### சலீமாவுடன் பயணம்

படைகள் தன்னைக் கீழ்ப்படுத்திவிடுமென்று வந்தபோது சேரமான் பெருமாள் சலீமாவுடன் நேரே துறைமுகத்துக்குச் சென்றார். கூடவே யூஜியானாவின் உடலையும் எடுத்துச் சென்றனர். அரண்மனையில் அனைவரிடமும் விடைபெற்று மன்னன் யாத்திரை ஆனான். பாண்டிய நாட்டுப் படைகளும் மார்த்தாண்டனின் படைகளும் துறைமுகத்தை நெருங்கியபோது சேரமானின் கப்பல் நகரத் தொடங்கியது. சேரமான் என்று நாராயண நம்பூதிரி கத்தினார். பாண்டிய மன்னன் சீர்வல்லன் கண்களில் கண்ணீர் வெள்ளமாக வடிந்தது.

எல்லோரது கண்ணீர் வெள்ளமும் கடலோடு கலந்தபோது சேரமான் பயணம் செய்த கப்பல் போய்க்கொண்டே இருந்தது. பத்துக்கல் தூரம் போனதும் யூஜியானாவின் சவப்பெட்டியைக் கண்ணீரோடு கடலில் இறக்கினார்கள்.

### சேரநாட்டுக்கு விடை

சேரநாட்டுத் தென்னை மரங்கள் கண்ணிலிருந்து மறைந்தபோது சேரன் தம்மையறியாமல் இரண்டு சொட்டுக் கண்ணீர் வடித்தார். முதலில் ஒரு துறைமுகப் பட்டினத்தில் இறங்கி பிறகு மெக்காவை அடைந்து மகமதிய மதத்தைத் தழுவி, பெயரையும் மாற்றிக் கொண்டார். சேரமான் பெருமாள் நான்காண்டுகள்தான் அங்கு வாழ்ந்தார். உடல் தளர்ந்து கி.பி. 838இல் இறந்தும் விட்டார்.

### ஆசையின் பலி

சேரநாட்டில் அரசியலிலோ சமுதாயத்திலோ ' இஸ்லாம் குறுக்கிடவில்லை. ஆனால் மன்னனின் ஓர் ஆசையினால் உலகம் தழுவிய உன்னத சமயத்தைப் பலி கொடுத்துவிட்டானே என்றுதான் நம்பூதிரியும் பாண்டியனும் மார்த்தாண்டனும் கலங்கினார்கள்.

### அமர காதல் நவீனம்

கவிஞர் வாரா வாரம் தொடராக எழுதி நான்கு பாகங்களாக 626 பக்க அளவில் ஓர் அமர காதல் நவீனத்தைத் தமிழிலக்கியத்திற்குத் தந்துள்ளார். பிற இலக்கியத்துறைகளைப் போல் நாவல் இலக்கியத் துறையிலும் கண்ணதாசனைப் புறக்கணித்தே வந்துள்ளனர். நாவல்களின் பாத்திரப் படைப்புக்களிலும், வர்ணனைகளிலும் கதை கூறும் பாணியிலும் உத்தியிலும் நடையிலும் எல்லாம் வெற்றிக்கொடி நாட்டியிருப்பவரின் படைப்புக்கள் எதுவும் சரியாக மதிப்பிடப் படவோ, விமரிசிக்கப்படவோ இல்லை. கண்மூடித்தனமாக ஆதரவும் எதிர்ப்பும் மட்டும் அவர் காலத்திலிருந்தே உள்ளன. ஆனால், ஆற அமர உட்கார்ந்து அவர் எழுதியுள்ள நாவல்களை ஆராய்ச்சி செய்யப் புகுந்தோமானால் இங்கும் சமூக நன்மை, மக்கள் நலன் என்ற இரண்டும் அடிநாதமாக இழையோடுவதைப் பார்க்கிறோம். நாவல் இலக்கிய உலகில் கவிஞருக்கு இடமில்லை என்பவர்கள் மனதில்தான் கவிஞர் இல்லை என்று கூற வேண்டும்.

### கட்டுரை ஆசிரியர்

சொந்தமாகப் பத்திரிகைகள் நடத்தியதால் கவிதை, கதை கட்டுரைகள், தலையங்கங்கள் எனப் பல்வேறு துறைகளிலும் தன் முத்திரையைப் பதித்துக் கொண்டிருந்தார் கண்ணதாசன். அவரிடமிருந்து விதவிதமான படைப்புக்களை வாசகர்களும் எதிர்

பார்த்திருந்தனர். கவிஞரும் அவர்களுக்கு மனக்குறையில்லாத அளவிற்குத் தீனி கொடுத்திருக்கிறார். கவிஞரின் கட்டுரைகளில் மனித மேம்பாடு, சமுதாயத்தின் உயர்வு, இலக்கிய ரசனைகள் எல்லாம் காணப்படுகின்றன. 'போய் வருகிறேன்' என்ற தலைப்பில் தென்றலில் எழுதிய கட்டுரை மிகவும் பிரசித்தமானது. தமிழிலக்கிய காதல் கூறுகளை, 'இலக்கியத்தில் காதல்' என்றெழுதினார்.

பாரதியின் காணி நிலம் வேண்டு என்ற கவிதையை மெச்சி எழுதியுள்ளார். முதலில், பாரதி, ஆசைக்கு எல்லை வகுத்துள்ளதாக அவ்வெண்ணத்தைப் பாராட்டுகிறார். அதன் அடிக்கருத்து பொது வுடமை என்பதுதான் கவிஞருக்குப் பிடித்த அம்சம். தேவை யானது கிடைத்துவிட்டால் அப்புறம் ஏன் வேறு சிந்தனைகள் என்று தன் கட்டுரையை அமைத்துள்ளார். காஞ்சிப் புராணச் செய்தியை - கொள்முதல் இல்லா வியாபாரம் என்று வருணித்துள்ளார். தாசிகள் இன்று விற்றதையே மீண்டும் தங்களுடையதாக்கிக் கொண்டு மறுநாளும் விற்கிறார்கள். நாங்கள் கொள்முதல் இல்லாத வியாபாரிகள் என்கின்றனர். அதுபோல் தாசிவீடு சென்று வந்த கணவனை ஓர் இல்லத்தரசி சுடுசொற்களால் ஏசுகிறாள். பெண் கெட்டால் தூற்றும் சமுதாயம் இதனை ஏற்குமா? விவாதத்திற்கு வரட்டும் என்கிறார் கண்ணதாசன். இப்படி ஓர் அன்னை இருந்தது தமிழ்ப் பண்பாட்டுக்கே பெரும் சிறப்பு என்கிறார்.

### புதிய கல்வி முறை

ஒரு புதிய கல்வி முறையையே கவிஞர் சிபாரிசு செய்துள்ளார். பட்டப்படிப்புகள் அனைத்தையும் ரத்து செய்துவிட வேண்டும். அதற்குப் பதிலாக வாழ வழிகாட்டும் கல்விக்கு வழிவகை செய்ய வேண்டுமென்று கூறியுள்ளார்.

### தகுதிகள் வேண்டும்

அந்தந்தத் துறையில் முத்திரை பதித்தவர்கள்தான் அமைச்சர்களாக வேண்டுமென்று கவிஞர் கருத்துத் தெரிவித்துள்ளார். அடிப்படையான சில தகுதிகள் அவர்களுக்கு வேண்டுமென்றும் அது இல்லையே என்றும் வருத்தப்பட்டுள்ளார். தேர்தலில் நிற்கவோ ஓட்டுப் போடவோ தகுதிகள் இல்லாததால் ஜனநாயகத்தின் அடிப்படையில் பெரும் தவறு நிகழ்ந்து விட்டதாகவும் கவிஞர் எண்ணினார்.

### வரதட்சிணை

கவிஞரின் மனதை மிகவும் அலைக்கழித்த ஒன்று வரதட்சிணை. பொருளா - தாரம்? என்று அதனால் தான் கேட்டார். இந்து தர்மம் எந்த நேரத்திலும் எந்த இடத்திலும் சீர் வரிசையின் பெருமையைப் பற்றிப்

பேசவில்லை. பெண்ணின் - அவள் பிறந்த குடும்பத்தின் பேர்வரிசையைப்பற்றி மட்டுமே பேசுகிறது என்று இளைஞர்களை நினைவூட்டியிருக்கிறார்.

### அர்த்தமுள்ள இந்துமதம் பேசுவன

மனிதன் ஓர் அமைப்புக்குள்ளும் கட்டுக் கோப்புக்குள்ளும் தான் இயற்கையாகவே இயங்குகிறான். இந்த இயக்கமே தர்மம் எனப்படுகிறது. இந்தத் தர்மத்தைத்தான் இந்து தர்மம் என்றும் அது சமுதாயத்தில் ஓர் அமைப்பாக இருப்பதால் இந்துமதமென்றும் கவிஞர் அழைக்கிறார்.

வாழும் முறைகளைப்பற்றியும் பொருளாதாரம் தந்திருக்கும் பாதுகாப்பு பற்றியும் பேசியுள்ளார். தவிர்க்க வேண்டியவை எவை எவை என்றும் பட்டியலிட்டுத் தருகிறார். நெஞ்சுக்கு நிம்மதியைத் தரும் செயல்களைக் குறித்தும் பேசியுள்ளார். சொல்லைக் கொட்டாதீர்கள். சொல்லால் பட்ட காயம் மாறாது என்கிறார். வருவது வரட்டும்; போவது போகட்டும். கொண்டு வந்தது ஒன்றுமில்லை, கொண்டு போகப் போவதும் ஒன்றுமில்லை .என்றும் எதார்த்தமாகப் பேசியுள்ளார்.

தூக்கத்தில் கிடைக்கும் அமைதி, வேறு எதிலும் கிடைப்பதில்லை என்கிறார். அது கவலைகளை மூடி வைக்கிறது. கண்ணீரை ஒத்தி வைக்கிறது. நாளையப் பொழுதுகளைப் பற்றிய கேள்விகளை நிறுத்தி வைக்கிறது என்கிறார் கவிஞர். மானிட தர்மத்தை ஒழுங்காக நிறைவேற்றவே மனிதன் தூங்கி தூங்கி விழிக்கிறான் என்கிறார்.

மனதினை நாம் அடக்க வேண்டுமெனக் கவிஞர் கூறியுள்ளார். மனதுக்குள் அடங்கியவனல்ல மனிதன். மனிதனுக்குள் அடங்கியது தான் மனது. மனத்தால் தான் ஆட்டி வைக்கப்படுகிறது இந்த உடம்பு. மனத்திலே பரபரப்புக் கூடாது. மனம் கெட்டுப் போனால் பசியும் தூக்கமும் போகும் என்கிறார் கவிஞர். மனதை அடக்கி உடம்பைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள். உலகம் உங்கள் கையிலே என்கிறார் கவிஞர். நல்லதே செய்யுங்கள், நல்லவனாகவே இருங்கள் என்று அறிவுரையும் தந்துள்ளார்.

### இதழாசிரியர்

கண்ணதாசன் உதவி ஆசிரியராகத்தான் தன் வாழ்வினைத் தொடங்கினார். இலக்கியமும் திரை இசைப்பாடலும் தன் இரு கண்கள் ஆனபோது, தனியாகப் பத்திரிகையைத் தொடங்கினார். தனது ஆழ்ந்த புலமையை வெளிப்படுத்தும் ஒரு கருவியாகத்தான் கவிஞர் 'தென்றலை'த் துவக்கினார் என்றாலும் பிறரது கருத்துக்களையும் திறமைகளையும் அவர் புறக்கணிக்கவில்லை. பொன்னைப்போல்

போற்றினார். 'தென்றல்' ஒரு சகாப்தத்தையே உண்டாக்கிற்று என்று சொல்லலாம்.

## தென்றல்

தணியாத தன்னுடைய எழுத்துத் தாகத்தைத் தீர்த்துக் கொள்ளவும் சமூகத்தில் மக்கள்பால் தனக்குள்ள அக்கறையை வெளிக்காட்டவும் சொந்தமாகப் பத்திரிகைகள் நடத்தினார் என்றால் அது மிகையாகாது. 22.6.1954 அன்று 'தென்றல்' பிறந்தது. 12 பக்கங்களுடன் 2 அணா விலையில் தொடங்கிய பத்திரிகை 16 புதிய காசுக்கு மேல் போகவில்லை. பொங்கல் மலர் 2 ரூபாய்க்கு விற்கப்பட்டது.

தென்றலைத் தொடங்குவதற்குச் சில நோக்கங்கள் கவிஞருக்கு இருந்தன. ஏழையைப் பற்றி எழுதுவது; இல்லாமையைப் பற்றி ஆராய்வது; சாதி உணர்வுகளைச் சாடுவது; சம்பிரதாயங்களை மாற்றப் போராடுவது - இவை எல்லாம் தீண்டப்படாத விஷயங்களாக இருந்தன. எனவே மக்களுக்கென வாதாட கவிஞர் புறப்பட்டுவிட்டார். தென்றலாக மக்கள் இதயங்களுள் புகுந்தும் கொண்டார்.

## கண்ணதாசன்

'தென்றல்' பவனி வந்தபோதே திரை உலகத் தொடர்பினால் 'தென்றல் திரையை' ஆரம்பித்தார். அப்போதே 'முல்லை'யும் வெளிவரத் தொடங்கியது. இவையெல்லாம் நின்று போனபோது 'கடிதம்' என்ற வ்ார இதழை ஆரம்பித்தார். அதுவும் நின்றபோது இனிமேல் தொடர்ந்து நல்லமுறையில் இலக்கியப் பத்திரிகையை நடத்த வேண்டுமென்ற வைராக்கியத்துடன் 'கண்ணதாசன்' என்ற பெயரிலேயே அடுத்த இதழை ஆரம்பித்தார். 1968ஆம் ஆண்டு ஒரு ரூபாய் விலையில் ஆரம்பிக்கப்பட்ட இதழ் இடையில் தன் பயணத்தை நிறுத்திக் கொண்டது. 1973ஆம் ஆண்டு தமிழ் புதுவருடப் பிறப்பன்று மீண்டும் அதன் பயணம் ஆரம்பித்தது. ஆனால் 1976 ஜனவரி முதல் கவிஞர் மட்டுமே எழுதி ஒரு ரூபாய் விலையில் 64 பக்கங்களுடன் இதழ்கள் வெளிவந்தன.

இவ்விலக்கிய இதழ்களில் வெளியான படைப்புக்களையும் செய்திகளையும், கருத்துக்களையும் ஐந்தாகப் பிரித்துக் கொள்ளலாம். (1) தலையங்கங்கள் (2) பிற ஆசிரியர்களின் படைப்புக்கள் (3) நூல் நயங்கள் (4) கவிஞரைக் குறித்த செய்திகள் (5) கவிஞரின் படைப்புக்கள். இப்பத்திரிகைகள் எல்லாம் தமிழ் இலக்கியத்திற்கு அருமையான சேவைகள் செய்துள்ளன.

*திரைப்படப் பாடலாசிரியர்*

கண்ணதாசனுக்குப் பெயரும் புகழும் பணமும் கிடைத்தது திரைப்படத் தொழிலில்தான். பாட்டெழுதி கிடைத்த பணத்தை இலக்கியப் பத்திரிகைகள் நடத்தியும் சொந்தமாகப் படமெடுத்தும் அரசியல் நடத்தியும் செலவழித்தார். வரவைவிட செலவே மிஞ்சியிருந்தது.

வரவு எட்டணா

செலவு பத்தணா

என்ற பல்லவி கவிஞருக்கு மிகவும் பொருந்தக் கூடியதுதான்.

ஒரு திரைப்படத்தின் சந்தர்ப்பத்திற்கென எழுதப்படும் பாடலில் அனுபவக் கலப்பில்லை எனவும் அழகான இசையின் பின்னணியில் உருவாகும் வார்த்தைப் பந்தல் என்று குறைத்து மதிப்பிடுவோரும் உண்டு. திரைப்படத்தின் சந்தர்ப்பம் கூறப்பட்ட போதெல்லாம் அவர் அடிமனதில் ஒளிந்திருந்த அனுபவங்கள் பிறர் அறியாமல் பாடல்களாகப் பரிணமித்தன என்பதுதான் உண்மை. எதைப் பாட வேண்டுமென்று தெரிவிக்கப்பட்டாலும் எப்படிப் பாடவேண்டு மென்பது கவிஞனின் சுதந்திரம் தானே!

ஒரு கோப்பையிலே என் குடியிருப்பு

ஒரு கோலமயில் என் துணையிருப்பு - இசை

பாடலிலே என் உயிர்த்துடிப்பு - நான்

பார்ப்பதெல்லாம் அழகின் சிரிப்பு

என்று தன் மனதை வெளியிட்டுள்ளார். தன்னடக்கத்துடன், அமைதி பெறும் வழியையும் பாடியுள்ளார்.

கடலளவு கிடைத்தாலும் மயங்க மாட்டேன் - அது

கையளவே ஆனாலும் கலங்க மாட்டேன்

உள்ளத்திலே இருப்பதுதான் உலகம் கண்ணா - இதை

உணர்ந்து கொண்டேன் துன்பமெல்லாம் விலகும் கண்ணா

மனம் தான் எல்லாவற்றிற்கும் காரணம் என்பதனைப் பாடியுள்ளார் இங்கு.

தாலாட்டுக்குப் பெயர் போன நாட்டில் பிறந்து வளர்ந்த கவிஞர் பாடியிருக்கும் தாலாட்டுக்கள் எல்லாம் மிகவும் வித்தியாசமாக அமைந்துள்ளன. ஒரு தாய் தன் மகளுக்குத் தாலாட்டு பாடுகிறாள். பாடல் வழி கவிஞர் மொத்தமாகப் பெண்களின் வாழ்க்கையையே அலசுகிறார்

பெண்ணாகப் பிறந்தவர்க்கு
கண்ணுறக்கம் இரண்டுமுறை
பிறப்பில் ஒரு தூக்கம்
இறப்பில் மறு தூக்கம்
இப்போது விட்டு விட்டால்
எப்போதும் தூக்கமில்லை
என்னரிய கண்மணியே
கண்ணுறங்கு கண்ணுறங்கு

என்று தாலாட்டை ஆரம்பித்து, தொடர்ந்து வாழ்வின் பல கட்டங்களிலும் அவள் எதிர்கொள்ள வேண்டிய சூழ்நிலைகளைப் பாடுகிறாள். காதலைத் தந்தை மறுத்து விட்டால் கண்ணுறக்கம் ஏது? மங்கையரின் தேனிலவில், மாலையிட்ட கணவன் வந்து சேலை தொடும்போது கண்ணுறக்கம் ஏது? என்று பாடுபவர் இறுதியாக,

கைநடுங்கி கண் மறைந்து
காலம் வந்து தேடும்
காணாத தூக்கமெல்லாம்
தானாகச் சேரும்

என்று பாடலை நிறைவு செய்கிறார்.

பெண்மை

திரைப்படங்களில் நாயகியை வருணிக்கும்போதெல்லாம் தன் காதலின் நினைவு கவிஞர் மனதில் அலைமோதியிருக்கும் என்றே எண்ணத் தோன்றுகிறது.

காலங்களில் அவள் வசந்தம்
கலைகளிலே அவள் ஓவியம்
மாதங்களில் அவள் மார்கழி
மலர்களிலே அவள் மல்லிகை

மிகவும் உயர்வாகப் பெண்மையை இங்கு வருணித்துள்ளார். அதே நேரம் இளமை அழகும் இனிமை சுகமும் தரும் பெண் இயற்கையின் சீதனப் பரிசெனப் பாடியுள்ளார். அந்தப்பெண் இல்லாமல் சுகமில்லை உலகத்திலே என்றும் பாடியுள்ளார். கவிஞர் கேட்கிறார்,

இன்று தேடி வரும் நாளை ஓடிவிடும்
செல்வம் சிரித்தபடி அழுதிடுமா - எந்தச்

செல்வமும் பெண்மையின் சுகம் தருமா

என்று தன் உள்ளத்தை அப்படியே திறந்து காட்டியுள்ளார்.

மனதின் நிலை

மனிதனின் மாற்றங்களுக்கெல்லாம் மனம்தான் காரணம் என்று கவிஞர் பாடியுள்ளார். கடவுள் ஒரு நாள் உலகைக் காணத் தனியே வந்தாராம். கண்ணில் கண்ட மனிதனை எல்லாம் நலமா என்றாராம்.

கள்ளம் இல்லா பிள்ளை உள்ளம்
நான் தந்தது
காசும் பணமும் ஆசையும் இங்கே
யார் தந்தது.
எல்லையில்லா நீரும் நிலமும்
நான் தந்தது
எந்தன் சொந்தம் என்னும் எண்ணம்
ஏன் வந்தது

இறைவனுக்கே இது புரியவில்லை
மனிதன் கொள்கை தெரியவில்லை

என்று கவிஞர் பாடியுள்ளார்.

மலைபோல பலமான மனம் வேண்டும் உனக்கு
செய்நன்றி மறவாத குணம் வேண்டும் உனக்கு

எனும் கவிஞர் நம்மைச் சுற்றிலும் நடக்கும் அநியாயங்களைத் தட்டிக் கேட்க வேண்டுமென்றும் கூறுகிறார். வழிமுறைகளையும் சொல்லிக் கொடுக்கிறார்.

ரெண்டில் ஒன்று பார்ப்பதற்குத் தோளை நிமிர்த்து - அதில்
நீதிவரவில்லை யெனில் வாளை நிமிர்த்து

என்கிறார்.

மனிதன் மாறிவிட்டான்

ஒன்றிலிருந்து ஒன்றை உருவாக்கக் கற்றுக் கொண்ட மனிதன் இந்தச் சாதிமத பேதங்களை எங்கிருந்து தெரிந்து கொண்டான்? எப்படித் தெரிந்து கொண்டான் என்று கேட்கிறார். எல்லாம் இயற்கையின் அன்பளிப்பு. நாமெல்லோரும் ஒற்றுமையாக வாழ முடியாமல் பிரித்து வைக்கப்படுவோமானால் இழப்பும் மனித குலத்துக்குத்தானே! வேதனையின் குரல் பின்னும் தொடர்கிறது

இன்பமும் காதலும் இயற்கையின் நீதி
ஏற்றத் தாழ்வுகள் மனிதனின் ஜாதி
பாரில் இயற்கை படைத்ததை எல்லாம்
பாவி மனிதன் பிரித்து வைத்தானே
மனிதன் மாறி விட்டான்
மதத்தில் ஏறிவிட்டான்

என்று சோகமாகப் பாடியுள்ளார்.

## தேசிய விருது

கவிஞரின் ஒரு திரைப்படப் பாடல் அவருக்கு இந்திய அரசின் பரிசினைப் பெற்றுத் தந்தது. 'குழந்தைக்காக' என்ற திரைப்படத்தில்

ராமன் என்பது கங்கை நதி
அல்லா என்பது சிந்து நதி
யேசு என்பது பொன்னி நதி
நதிகள் பிறக்குமிடம் பலவாகும் - எல்லா
நதியும் கலக்குமிடம் கடலாகும்.

என்று எழுதிய பாடல் தேசிய ஒற்றுமையை வளர்க்கும் சிறந்த பாடலாகத் தேர்வு செய்யப்பட்டு பரிசினையும் வென்றது.

## நம்பிக்கை ஊட்டினார்

மானுடத்திற்கு நம்பிக்கை ஊட்டிப் பாடியவர் கவிஞர்

எங்களுக்கும் காலம் வரும்
காலம் வந்தால் வாழ்வு வரும்
வாழ்வு வந்தால் அனைவரையும்
வாழ வைப்போமே

என்ற நயமான வரிகள் எக்காலத்திற்கும் பொருந்துவன. நாளைய பொழுதை நல்ல நம்பிக்கையுடன் எதிர்நோக்க வைக்கும் வரிகள்.

கவிஞருடைய புகழை வானுக்குயர்த்தியது அவருடைய திரைப் படப் பாடல்கள்தாம். ஏதாவது ஒரு பாடல் - ஏதாவது சில வரிகள் ஒவ்வொரு மனிதனுடையவும் - வாழ்வினோடும் அனுபவத்தோடும் உறவாடும் என்பது ஓர் உண்மை. ஐயாயிரத்துக்கும் மேற்பட்ட கவிஞரின் திரைப்படப் பாடல்கள் பற்றிப் பேசிக் கொண்டே யிருக்கலாம். அறிமுகம் என்ற நிலையில் ஒரு சிறு துளியே இங்கு தரப்பட்டுள்ளது.

---

# 6
# மதிப்பீடு

தமிழ் இலக்கிய வாசகர் பேரவையினர் 1969, 70, 71ம் ஆண்டுகளில் வெளியான சிறந்த படைப்பிலக்கியத்தைத் தேர்வு செய்ய ஒன்பது படைப்புக்களைத் தேர்வு செய்தனர். அவற்றை மூன்று ஆய்வாளர்களிடம் கொடுத்து, ஒவ்வொருவரும் அவரவருக்குச் சரியெனப்படும் ஆறு படைப்புக்களைத் தேர்ந்தெடுத்து அவற்றிற்கான காரணங்களையும் எழுதி அளிக்கும்படி கேட்டுக் கொண்டனர். பேரவை தேர்வு செய்த 9 நூல்களுள் கண்ணதாசனின் 'ஞானமாலிகா'வும் ஒன்று. மூன்று ஆய்வாளர்களில் ஒருவர் தனக்குப் படிக்க அந்தப் புத்தகம் கிடைக்கவில்லை என்று கூறித் தன் மதிப்பீட்டுக் கட்டுரையைத் தொடங்கியிருந்தார். நூல்களைப் பதிப்பாளர்களிடமிருந்தோ அல்லது படைப்பாளிகளிடமிருந்தோ பெற்று மதிப்பீடு செய்ய வேண்டுமென்ற பேரவையின் தீர்மானத்திற்குக் கொஞ்சங்கூட நியாயம் செய்யாத நிலையில் அமைந்திருந்தது அந்த ஆய்வாளிரின் கூற்று. படித்துப் பார்க்கக்கூடத் தயக்கம் காட்டிய மனநிலையே இதுவென்று புலனாகிறது. படிக்காமலேயே தேர்விலிருந்து தள்ளியும் விட்டார். எவ்வளவு எளிய வழி!

கவிஞர் ஒரு திரைப்படப் பாடலாசிரியர். தீவிரமான தமிழ்மொழிப் பற்றும் இலக்கியங்கள் பால் ஆர்வமும் உள்ளவர். திரைப்படத் தயாரிப்பாளரும் ஓர் அரசியல் வாதியும்கூட. எல்லாவற்றுக்கும் மேலாகத் தன் இலக்கிய பசிக்காக இலக்கிய இதழ்களையும் நடத்தியவர். அவருடைய திரை இசைப்பாடல்களை ரசித்ததோடு இலக்கியப் புலமையையும் வியந்தனர் ஒரு சாரார். அதே நேரம் அவர் சினிமாவுக்குப் பாடல் எழுதுபவர் என்ற ஒரே காரணத்தினால் அவர் ஓர் இலக்கியவாதியே அல்ல என்று ஒதுக்கியவர்கள் ஏராளம். உதாசீனப்படுத்தியவர்கள் பலர். ஆனால் பாமரர்களும் பண்டிதர்களும் பேராசிரியர்களும் ஒரு பக்கம் பாராட்டியபோது அதே வேகத்துடன் அவரை எதிர்க்கவும் சிலர் செய்தனர் மலிவான வார்த்தைகளால். இவ்வாறெல்லாம் நடந்தபோதும் கூட கவிஞர் எதிர் நீச்சல் போட்டு வெற்றி பெற்றுள்ளார். வசனம் பாடல் எழுதப்போன இடத்திலும் திறமை அசட்டை செய்யப்பட்டுள்ளது. சில பத்திரிகைகள் அவரைக் கவிஞராக அடையாளம் காணாததால் அவர்

கவிதைகளைப் பிரசுரித்ததேயில்லை. இவ்வளவிற்கும் கவிஞர் தன் திறமையை இலக்கிய இதழ்களை வெற்றிகரமாக நடத்திக் காண்பித்தும் கொண்டிருந்தார். கவிதைகளையும் உருவகங்களையும், நாடகங்களையும், காவியங்களையும், கதைகளையும், கட்டுரைகளையும், நாவல்களையும் எழுதி தன் திறமையை மெய்ப்பித்தும் கொண்டிருந்தார். திரை இசைப் பாடல்கள் எழுதியதனால் தான் பிரபலமானார். பொருளீட்டினார்; புகழைடைந்தார் என்றால் அது மிகையாகாது.

ஆனால் 'கடிதம்' வார இதழினர் கவிஞர் எழுதிய புஷ்பமாலிகா கட்டுரைகளுக்கு மதிப்பீட்டு விமரிசனம் எழுதும்படி வாசகர்களைக் கேட்டுக் கொண்டனர். வந்த விமரிசனக் கட்டுரைகளுள் என். ஆர். தாசனின் கட்டுரை மிகச் சிறந்ததென தேர்வு செய்யப்பட்டு பிரசுரிக்கவும் பட்டது. 1968ம் ஆண்டு 'கண்ணதாசன்' இலக்கிய இதழ் ஆரம்பிக்கப்பட்ட போதும் அதனைத் தொடர்ந்து வந்த பல இதழ்களிலும் கவிஞரின் படைப்புக்கள் பற்றிய மதிப்பீட்டுக் கட்டுரைகள் இடம் பெற்றன. பிற கவிஞர்களுடன் ஒப்புமைப் படுத்தப்பட்ட ஆராய்ச்சிக் கட்டுரைகளும் நடை பற்றிய சிறப்புக்களும் எல்லாம் வெளிவந்தன. 1976 ம் ஆண்டு வெளிவந்த 'கண்ணதாசன்' - பொன்விழாமலர் சரியான ஒரு மதிப்பீட்டு விமரிசன நூல்தான்.

கவிஞரை ஒரு தீவிரமான இலக்கியவாதியாகக் கண்ட 'துக்ளக்' பத்திரிகையாசிரியர் 'சோ' ஒரு போட்டி நடத்தினார். அதில் முதல் பரிசு பெற்ற ஆ. செகநாதனின் கட்டுரை நூல் வடிவமும் பெற்றது.

'தமிழில் விமரிசன இலக்கியம் ஒரு முன்னுரை' என்ற தன் நூலில் கண்ணதாசனின் கவிதைகளை மதிப்பீட்டிற்கும் விமரிசனத்திற்கும் எடுத்துக்காட்டாக ஆசிரியர் எம். பாலு எடுத்துக் காட்டிப் பேசியுள்ளார்.

கவிஞர் காலத்திலேயே அவருடைய கவிதைப் படைப்புக்களை ஆராய்ச்சி செய்து டாக்டர் பட்டம் பெற்றவர் டாக்டர் வல்லம் வேங்கடபதி. கவிஞரின் காலத்திற்குப் பிறகு அவருடைய கவிதைப் படைப்புக்களில் ஆராய்ச்சி செய்து இந்நூலாசிரியர் டாக்டர் பட்டம் பெற்றுள்ளார்.

கவிஞர்பால் ஈடுபாடு கொண்ட அன்பர்கள் சிலர் கேரளப் பல்கலைக்கழக வளாகத்தில், கவியரசர் கண்ணதாசனுக்கு ஒரு நினைவுக் கழகத்தை நிறுவி தேசிய கருத்தரங்குகளையும் நடத்தி வருகின்றனர்.1989லிருந்து 2002 வரையிலான கால அளவில் ஐந்து தேசியக் கருத்தரங்குகளை நடத்தி, கருத்தரங்கக் கட்டுரைகளைப் புத்தக வடிவிலும் வெளிக்கொணர்ந்துள்ளனர்.

**உணர்த்தும் செய்திகள்**

கவிஞரின் கவிதைகளிலும் பிற படைப்புக்களிலும் அவருடைய ஆளுமை வெளிப்படுகிறது. கவிதைகளில் இனிமை; நடையிலும் இனிமை. ஆனால் அந்த இனிமையும் எளிமையும் கலந்த நடையின் பின்னால் - படைப்புகளுக்குப் பின்னால் இன்பமும் சோகமும் ஏக்கமும் எல்லாம் ஒளிந்திருக்கின்றன. அவை நமக்குச் சில செய்திகளை உணர்த்துகின்றன.

1. நாடும் மக்களும் நலம் பெற வேண்டும் என்ற குறிக்கோள் தான் கண்ணதாசனைப் பல பாதைகளில் நடக்க வைத்தது.
2. உணர்ச்சிகளைப் போர்த்திக் கொண்டு கவிதை பாடிய கண்ணதாசன் மனம், புதைந்து கிடந்த சமுதாயப் பிரச்சனைகளை இனங்கண்டு கொண்டது. அவற்றைச் சீர் செய்யும் வழிமுறைகளையும் அவர் கவிதைகள் காட்டின.
3. சமுதாய விடுதலையே உண்மையான விடுதலை. அந்தச் சுதந்திரமே முழுமையான சுதந்திரம். மறுமலர்ச்சிக் கவிஞர்களின் பயணம் இந்த விடுதலையை நோக்கியதாகவே அமையும். சமுதாயத்தின் அடிப் படைச் சட்டங்கள் மாற்றியமைக்கப்பட வேண்டுமென்றும் சீரழிவிற்கான காரணங்களைக் கண்டுபிடித்து அவற்றைத் துடைத் தெறிய வேண்டுமென்றும் எண்ணியவர் கண்ணதாசன்.
4. முறையான வழியில் சமுதாயத்தில் மாற்றங்காண விழைந்தவர்.
5. தேசிய ஒற்றுமைக்காகக் குரல் கொடுத்தவர்.
6. தனக்கென்று ஒரு பாதை, குறிக்கோள், அதில் பயணம் என்றிவ்வாறு தெளிவான பார்வை கொண்டிருந்தவர்.
7. அவர் கவிதைகளும் பாடல்களும் பிற படைப்புகளும் எல்லாம் நமக்குணர்த்தும் செய்தி சோகம். படிக்க முடியாததால் சோகம்; காதல் தோல்வியால் சோகம்; சுவீகாரம் போனதில் சோகம்; தொழில் செய்ய வந்த இடத்தில் பிறர் தந்த சோகம். நண்பர்களால் விளைந்ததும் சோகம். உற்றவர்கள் பிரிவால் சோகம், தானே வாங்கிய நோயின் வேகம் தாங்காமல் நாளெல்லாம் சோகம். அவர் வெளியே சிரித்தாலும் உள்ளுக்குள்ளே சோகம். அரசியலால், சமுதாய அமைப்பால் சோகம். இவை தான் கண்ணதாசன் கவிதைகளிலும் பிற படைப்புகளிலும் அடிநாதமாகச் சோகத்தை இழையோட விட்டிருக்கின்றன.
8. அவருடைய படைப்புக்களில் சில இசைத்தட்டுக்களிலும் ஒலிப்பதிவு நாடாக்களிலுமாக இருக்கின்றன. இதழ்களில் இடம் பெற்றச் சில படைப்புக்களும் அவ்வாறே இருக்கின்றன. இவை எல்லாம் கால முறைப்படி தொகுக்கப்பட்டு நூல்களில் இடம்பெறச் செய்ய வேண்டும்.

9. இருபதாம் நூற்றாண்டில் வாழ்ந்த இந்தக் கவிஞரின் அனைத்துப் படைப்புக்களையும் நூல் வடிவில் இடம் பெறச் செய்யக் கவிஞரின் அன்பர்களுக்கும் நண்பர்களுக்கும் வாசகர்களுக்கும் ஓர் வேண்டுகோள் விடுக்கலாம். தங்கள் கைவசம் உள்ள படைப்புக் களை அவருடைய புதல்வர் காந்தி கண்ணதாசனுக்கு அனுப்பித் தரும்படி கேட்டுக் கொள்ளலாம். இங்ஙனம் கிடைக்கப்பெறும் படைப்புக்களையும் உட்படுத்தி முழுமையான புதுத்தொகுப்புகளும் வெளியிடலாம். அவை வருங்கால ஆராய்ச்சியாளர்களுக்குப் பெரிதும் உதவும் - எதிர்காலத் தலைமுறை கவிஞரைச் சரியாக எடை போடவும் அவை பயன்படும்.

10. சிறுகூடல்பட்டிக் கிராமத்தில் முத்துவாகப் பிறந்து திருச்சியில் கண்ணதாசனாக மாறி சென்னையில் கொடிகட்டி வாழ்ந்த இந்தக் கவிஞர் நல்ல ஒரு மனிதனாக வாழ்ந்திருந்தார். உயர்ந்த குறிக் கோள்களும் இலட்சியங்களும் கொண்டிருந்தார். அவற்றின் வெற்றிக்காகப் பயணம் செய்தார். எல்லாவற்றிற்கும் மேலாக மக்களும் நாடும் நலம் பெற வேண்டும் என்று ஓயாமல் எண்ணிக் கொண்டிருந்தார்.

---

# 7

# கண்ணதாசன் படைப்புகள்

*கண்ணதாசன் கவிதைப் படைப்புகள்*

1. கண்ணதாசன் கவிதைகள் - முதலிரண்டு தொகுதிகள்
2. கண்ணதாசன் கவிதைகள் - மூன்றாம் தொகுதி
3. கண்ணதாசன் கவிதைகள் - நான்காம் தொகுதி
4. கண்ணதாசன் கவிதைகள் - ஐந்தாவது தொகுதி
5. கண்ணதாசன் கவிதைகள் - ஆறாவது தொகுதி
6. கண்ணதாசன் கவிதைகள் - ஏழாவது தொகுதி
7. மாங்கனி
8. ஆட்டனத்தி ஆதிமந்தி
9. தைப்பாவை
10. ஸ்ரீகிருஷ்ண அந்தாதி
11. பொன்மழை
12. ஸ்ரீ வெங்கடேஸ சுப்ரபாதம்
13. ஸ்ரீ கிருஷ்ண கவசம்
14. அம்பிகை அழகு தரிசனம்
15. ஆனந்த ரகசியம்
16. இயேசு காவியம்
17. முற்றுப் பெறாத காவியங்கள்

கட்டுரைகள்

1. கண்ணதாசன் கட்டுரைகள்
2. வனவாசம்
3. புஷ்ப மாலிகா
4. இலக்கியத்தில் காதல்
5. அர்த்த முள்ள இந்துமதம் - பாகம் 1
6. அர்த்தமுள்ள இந்துமதம் - பாகம் 2
7. அர்த்தமுள்ள இந்துமதம் - பாகம் 3
8. துன்பங்களிலிருந்து விடுதலை - பாகம் 4
9. ஞானம் பிறந்த கதை - அர்த்தமுள்ள இந்துமதம் - - பாகம் 5
10. நெஞ்சுக்கு நிம்மதி - ,, ,, - பாகம் 6
11. சுகமான சிந்தனைகள் - ,, ,, - பாகம் 7
12. போகம், ரோகம், யோகம் - ,, ,, - பாகம் 8





13. ஞானத்தைத் தேடி - .. .. - பாகம் 9
14. உன்னையே நீ அறிவாய் - .. .. - பாகம் 10
15. கடைசிப் பக்கம்
16. எனது சுயசரிதம்
17. எனது வசந்த காலங்கள்
18. தெய்வ தரிசனம்
19. நான் பார்த்த அரசியல்
20. பேனா நாட்டியம்
21. ஞான மாலிகா
22. வாழ்க்கை எனும் சாலையிலே
23. சந்தித்தேன் - சிந்தித்தேன்
24. மனவாசம்
25. அந்தி - சந்தி - அர்த்த ஜாமம்
26. கவிஞர் கண்ணதாசன் நடத்திய இலக்கிய யுத்தங்கள்
27. அபிராமி அந்தாதி விளக்கவுரை
28. ஸ்ரீ சங்கர பொக்கிஷம் விளக்கவுரை
29. கண்ணன் அருளிய பகவத்கீதை - விளக்கவுரை
30. மூவேந்தர் காதலியர் - விளக்கவுரை

*சிறுகதைகள்*

1. குட்டிக் கதைகள்
2. கண்ணதாசன் கவிதைகள்
3. செண்பகத்தம்மன் கதை
4. செய்திக் கதைகள்

பொதுவானவை

1. கவிஞர் கண்ணதாசனின் தலையங்கங்கள்
2. எண்ணங்கள் ஆயிரம்
3. செப்பு மொழிகள்
4. அர்த்தமுள்ள இந்துமதம் - கேள்வி பதில்கள்

நாவல்கள்

1. விஜயா
2. வேலங்குடித் திருவிழா
3. ஆயிரங்கால் மண்டபம்
4. மனம் போல் வாழ்வு
5. விளக்கு மட்டுமா சிவப்பு?
6. மனதுக்குத் தூக்கமில்லை
7. அரங்கமும் அந்தரங்கமும்
8. அவள் ஒரு இந்துப் பெண்
9. சிவப்புக்கல் மூக்குத்தி

10. அதை விட ரகசியம்
11. ஆச்சி
12. ரத்த புஷ்பங்கள்
13. பிருந்தாவனம்
14. சரசுவின் சௌந்தர்ய லஹரி
15. சிங்காரி பார்த்த சென்னை
16. காமினி காஞ்சனா
17. மிசா
18. ஒரு குடிகாரனின் கதை
19. அவளுக்காக ஒரு பாடல்
20. முறை தெரியாக் கதை
21. என்னோட ராவுகள்
22. சுருதி சேராத ராகங்கள்
23. ஒரு நதியின் கதை
24. ஒரு கவிஞனின் கதை
25. ஊமையன் கோட்டை
26. கடல் கொண்ட தென்னாடு
27. பாரிமலைக் கொடி
28. சேரமான் காதலி

நாடகங்கள்

1. சிவகெங்கைச் சீமை
2. அனார்கலி
3. கவிதாஞ்சலி
4. ராஜதண்டனை
5. தெய்வத் திருமணங்கள்

இலக்கிய இதழ்கள்

1. தென்றல்
2. முல்லை
3. கடிதம்
4. கண்ணதாசன்
5. கண்ணதாசன் - பொன்விழா மலர்

திரை இசைப்பாடல்கள்

1. திரை இசைப்பாடல்கள் தொகுதி 1,2,3,4 -5

---

# 8

# கண்ணதாசன் படைப்புகள் பற்றிய நூல்கள்

1. கண்ணதாசன் கவிதைகள் ஒரு திறனாய்வு - ஆ. செகநாதன்
2. கண்ணதாசன் ஒரு கண்ணோட்டம் - ஆ. செகநாதன்
3. கண்ணதாசன் கவி நயம் - ப.குணசேகர்
4. கண்ணதாசன் கவிதைகள் ஒரு மதிப்பீடு - ப.முத்துக்குமாரசுவாமி
5. கண்ணதாசன் கவிதைகள் ஓர் ஆய்வு - டாக்டர் வல்லம் வேங்கடபதி
6. கவிச்சிந்து - கவியரசர் கண்ணதாசன் நினைவுக் கழக வெளியீடு கேரளப் பல்கலைக்கழக வளாகம் காரிய வட்டம் அஞ்சல் திருவனந்தபுரம்.
7. கவிப்புனல்
8. கவிப்பெருக்கு
9. கவிஅமுது
10. கண்ணதாசனின் கவி இன்பம் - தொகுப்பாசியர்:எம். பாலு பதிப்பாசிரியர்: காந்தி கண்ணதாசன்
11. கவியரசர் கண்ணதாசன் அர்த்தமுள்ள இந்துமதம் ஓர் ஆய்வு - இராமன் - செயராமன்
12. தமிழில் விமரிசன இலக்கியம் ஒரு முன்னுரை -எம். பாலு: கண்ணதாசன் கவிதைகளின் மதிப்பீட்டுக் கட்டுரைகளைக்கொண்டவை
13. கவிஞர் கண்ணதாசன் கவிதைகளில் இறையுணர்வு - சித்ரா திருமாவளவன்

14. கவிஞர் கண்ணதாசன் திரை இசைப் பாடல்கள் ஒரு திறனாய்வு - தே.ப. பெருமாள்
15. கவிஞர் கண்ணதாசன் திரை இசைப் பாடல்களில் இலக்கியம் - க. சுப்பிரமணியன்
16. கவிஞர் கண்ணதாசன் திரை இசைப் பாடல்களில் தாலாட்டு - திருமாவளவன்
17. கண்ணதாசனும் தத்துவப் பாடல்களும் - லேனா
18. கண்ணனைக் கண்ட கவிஞன் - சி.ஆர். ரவீந்திரன்
19. இராபர்ட் பிராஸ்ட்டும் கண்ணதாசனும் - பேராசிரியர் சங்கர இலக்குமி நாதன்
20. கண்ணதாசன் கவிதைகளில் சமுதாயச் சிந்தனைகள் - வெ. இராமகிருஷ்ணன்
21. கண்ணதாசன் கவிதைகளில் அறிவியல் - மித்ரா
22. கவியரசர் கண்ணதாசன் கவிதைகளில் உலகியல் நோக்கு - எம். ஜெயபோஸ்.
23. கவிஞர் கண்ணதாசனின் பா நயம் - விஜயேந்திரன்.
24. கண்ணதாசன் திரைஇசைப் பாடல்களில் மனிதமனம் - நாக. ஜெகசிற்பியன்.
25. வால்ட் விட்மனும் கண்ணதாசனும் - முனைவர் சித்ரா திருமாவளவன்

கவிஞர் கண்ணதாசனைப் பற்றிய நூல்கள்

1. கவியரசு கண்ணதாசன் - இராம. கண்ணப்பன்
2. கண்டதும் கேட்டதும் - ,, ,,
3. அர்த்தமுள்ள அனுபவங்கள் - ,, ,,
4. கண்ணதாசன் கதம்பம் - ,, ,,
5. பாடிக் கொடுத்த மங்கலங்கள் - ,, ,,
6. பாட்டுக்குயில் கண்ணதாசன் - தமிழ்ப்பித்தன்



**கவிஞர் கண்ணதாசன்:** (1927-1981) தமிழர்களும், தமிழ்பால் ஈடுபாடுடையவர்களும் நன்கறிந்தவர். வானொலியிலும், தொலைக்காட்சி ஒலியிலும் இவருடைய பாடல்கள் ஒளிப்பரப்பாகாத நாட்களே இல்லை. திரைப்படப் பாடல்கள் தவிர கதைகளும், கவிதைகளும், கட்டுரைகளும், நாவல்களும் படைத்தவர். நாடகங்களை எழுதி நடிக்கவும் செய்தார். தமிழ் இலக்கியங்களை ஆழ்ந்து கற்ற இவர் அதன் நயங்களை திரைப்படப் பாடல்களில் புகுத்தி, பாமரமக்களும் இலக்கிய நயங்களை ரசிக்கச் செய்தவர். இலக்கிய வாதியாக இலக்கியப் பத்திரிகைகள் நடத்திய இவர், அரசியல்வாதியாகவும் திகழ்ந்தார். 1969 ஆம் வருடம் சிறந்த திரைப்படப் பாடலாசிரியருக்கான இந்திய அரசின் விருதினைப் பெற்றார். 1978ஆம் ஆண்டு தமிழக அரசு இவரை 'அரசவைக் கவிஞராக' நியமித்து கௌரவித்தது. 1980ஆம் ஆண்டு சாகித்திய அகாதெமி விருது இவருடைய 'சேரமான் காதலி' க்கு வழங்கப் பட்டது.

**முனைவர் எம். பாலசுப்பிரமணியன்**- இந்நூலைப் படைத்த இவர் கேரள பல்கலைக்கழகத்தில் ஆவணங்காப்பாளராகப் பணிபுரிகிறார். இவருடைய முனைவர் பட்ட ஆய்வேடு **கண்ணதாசன் கவிதைப் படைப்புகள் - ஓர் ஆராய்ச்சி** என்பதாகும். தற்கால இலக்கியத்திலும், ஒப்பீட்டு ஆராய்ச்சியிலும் மிகுந்த ஈடுபாடு உள்ளவர். கவியரசர் கண்ணதாசன் நினைவுக் கழகத்தினை திருவனந்தபுரத்தில் நிறுவியவர்களுள் ஒருவர். தமிழில் விமர்சன இலக்கியம் - ஒரு முன்னுரை, உதிர்ந்த மலர், சுவடி இயல் - ஒரு கண்ணோட்டம் ஆகிய நூல்கள் இவருடைய பிற படைப்புகள்.

*Kavingnar Kannadhasan*(Tamil) Rs.25

ISBN - 81-260-1721-X